தினமணி வெளியீடு : 11

பதிப்பாசிரியர் : பி. ஸ்ரீ.

# மௌலானா ஆஜாத்

எம். எம். இஸ்மாயில் எம். ஏ.

சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார் முன்னுரையுடன்



“இருள் அகற்றும்
கைவிளக்கே கற்ற அறிவுடைமை”

தினமணி காரியாலயம்
100, மவுண்டு ரோடு
சென்னை
1944





[விலை ரூ. 1

## தினமணி வெளியீடு

### இலக்கிய ஆலோசனையாளர்கள்

ஸ்ரீமதி. எஸ். அம்புஜம்மாள்,
ஆழ்வார்பேட்டை, சென்னை

திரு. கே. சந்திரசேகரன்,
மயிலாப்பூர், சென்னை

திரு. ஏ. என். சிவராமன்,
"தினமணி" ஆசிரியர்

திரு. கே. சுவாமிநாதன்,
ஆங்கிலப் பேராசிரியர்,
ப்ரெஸிடென்ஸி காலேஜ், சென்னை

திரு. டாக்டர் டி. எஸ். திருமூர்த்தி,
நுங்கம்பாக்கம், சென்னை

திரு. கே. ஏ. நீலகண்ட சாஸ்திரியார்,
சரித்திரப் பேராசிரியர்,
சென்னை யூனிவெர்ஸிடி

திரு. ஸி. என். முத்துரங்க முதலியார்,
பேட்டை, செங்கற்பட்டு ஜில்லா

திரு. ஏ.வி. மெய்யப்ப செட்டியார்,
ஸரஸ்வதி ஸ்டோர்ஸ், பிரகதி பிக்சர்ஸ்,
சென்னை

திரு. எஸ். வையாபுரிப் பிள்ளை,
தமிழ் ஆராய்ச்சித் துறைத் தலைவர்,
சென்னை யூனிவெர்ஸிடி

# பொருள் அடக்கம்

## தினமணி வெளியீடு—3

# கைலாஸம்—மானஸஸரோவர்

(ஓர் அருமையான யாத்திரை நூல்)

ஸ்ரீ. எஸ். வேதாந்தம்

"தேதிகள் குறிப்பிடாத டைரி. கைலாஸத்திற்குப் போக வேண்டியவர்களுக்குத் தெரியவேண்டிய முக்கியமான விஷயங்கள் இதில் அடங்கி யிருக்கின்றன."

'பாரத தேவி'

விலை அணா 8

---

## தினமணி வெளியீடு—4

# போலந்து - பின்லந்து

த. கிருஷ்ணமூர்த்தி

"இந்தப் புஸ்தகம் சரியான சமயத்தில் வெளிவந்திருக்கிறது. போலந்து இன்னும் நேச நாடுகளுக்கு ஒரு சோதனையாகவே யிருந்து வருகிறது. பின்லந்து விஷயம் ஒருவாறுக முடிந்து விட்டது, இதையெல்லாம் பற்றித் தெரிந்துகொள்வதற்கு இந்நூல் இன்றியமையாதது."

'பாரத தேவி'

விலை அணா 12

# முன்னுரை

மௌலானா அபுல்கலாம் அவர்களைத் தமிழர் நன்றாய் அறிந்துகொள்ளவேண்டும் என்று முகம்மது இஸ்மா யில் இந்தப் புஸ்தகம் எழுதுகிறார். ஆசிரியர் அகன்ற உணர்ச்சி படைத்த வாலிபர். நாட்டுக்கு உழைக்கும் கடமையை அறிந்த இந்தியர்களுள் ஒருவர், அதிலும் தமிழ் மக்களுள் தாம் ஒருவர் என்று பெருமையுடன் உழைப்பவர். 'வகுப்பு வேறுபாடு'ப் பேச்சுக்களைப் பற்றி மிக்வும் வருந்துகிறவர்.

இஸ்லாம் மார்க்கத்தின் சாஸ்திர—இதிஹாச நூல் களில் மிக்க புலமை பெற்றவர்களுடைய தொகுதியிலே முதல் ஸ்தானம் பெற்று நிற்பவர்களுள் ஒருவர் அபுல் கலாம் "ஆஜாத்" அவர்கள். இது அனைவரும் ஒப்புக் கொண்ட விஷயம். இவ்வளவு மதாசாரப் புலமையும் புகழும் பெற்றபோதிலும், அது அபுல்கலாம் அவர்க ளுடைய பொதுச் சமுதாய ஒப்புரவைக் கொஞ்சமும் பாதிக்கவில்லை. இஸ்லாமியப் பண்பாடு வேறு, ஜாதிப் பட்சபாதம் வேறு—என்பதற்கு அபுல்கலாம் அவர்கள் ஒரு சிறந்த உபதேசியும் சான்றுமாவார்கள்.

விஸ்தார அறிவும் மிக நுட்பமான மதியும் பெற்றவர். இதனுடன் நகைச் சுவை நன்றாக அறிந்தவர். பிற மதங்களைப்பற்றி ஆழமாகச் சோதித்து ஞானம் பெற் றவர். இந்திய அரச பரம்பரைக்குச் சிறந்த பூஷணமாக என்றும் குறையாத புகழைப் பெற்ற அக்பருடைய மனோ பாவத்தையும் ஆழ்ந்த ஞானத்தையும் இந்தக் காலத்தில் எந்த முஸல்மானாவது படைத்திருக்கிறாரா என்று பார்த் தால் அபுல்கலாம் அவர்கள் படைத்திருக்கிறார் என்று நிச்சயமாகச் சொல்லலாம். நேரில் அனுபவ முறையில் அறிந்து சொல்லுகிறேன்.

சென்னை
29—10—44 } **சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார்**

தினமணி வெளியீடு—6

# ஹாஸ்ய நாடகங்கள் — கட்டுரைகள்

ஸ்ரீ. வி. ஸி. கோபாலரத்னம், பி. ஏ., பி. எல்.

"ஹாஸ்ய நாடகங்கள் மூலம் வாழ்க்கையைச் சித்திரிப்பதில் இன்று ஸ்ரீ. வி. ஸி. கோபாலரத்னம் நிகரற்று விளங்குகிறார். அவர் இயற்றியுள்ள "சுல்தான் பேட்டை சப் மாஜிஸ்ட்ரேட்" என்ற ஒரு நாடகமே போதும் அவருடைய திறமையை நிரூபிப்பதற்கு. அதை எத்தனை தடவை படித்தாலும் நமக்குச் சலிப்பு ஏற்படுவதில்லை. நாடக பாத்திரங்களின் குணாதிசயங்களையும், பேச்சுக்களையும் நினைத்துச் சிரிக்கத் தோன்றுகிறது. இவ்வாசிரியர் இதைப்போல இன்னும் எவ்வளவோ ஹாஸ்ய நாடகங்களையும் ஹாஸ்யக் கட்டுரைகளையும் எழுதியிருக்கிறார். அவற்றை யெல்லாம் தொகுத்து ஒரு புஸ்தகமாக வெளியிட்டிருக்கிறார்கள் தினமணி காரியாலயத்தார். எல்லாராலும் ஆவலுடன் வரவேற்கத் தகுந்த இந்த நூலைப் பிரசுரித்ததற்காக நாம் அவர்களை ரொம்பவும் பாராட்டுகிறோம்."

ஆனந்த விகடன் 29–10–'44.

**விலை ரூ 2.**

# முகவுரை

மௌலானா அபுல்கலாம் ஆஜாத் இன்றைய இந்தியாவில் ஒரு அபூர்வமான ஸ்தானத்தை வகிக்கிறார். இஸ்லாமிய ஞானத்தில் இவர் உலக முஸ்லிம்களுக்குத் தலைமை பெற்றிருக்கிறார். ஆனால், இவருடைய இஸ்லாம் இந்தியாவின் ஒரு சிறந்த தேசிய வாதியாக இவர் இருப்பதற்குக் குறுக்கே நிற்கவில்லை. உற்று நோக்குமிடத்து, இவர் ஒரு உண்மையான முஸ்லிமாயிருப்பதே இன்று இந்தியாவின் தேசியப் போருக்கு இவர் தலைமை தாங்குவதற்குக் காரணமாகும் என்பது வெளிப்படும். இங்கே, காந்திஜிக்கு முன்னதாகவே இவர் இந்தியாவில் புரட்சிக் கொடியைத் தூக்கியவர் என்பதை மறந்துவிடக் கூடாது. இவர் ஒரு சிறந்த அரசியல் வாதி; உறுதி மிக்க சுதந்திரப் போர் வீரர் என்று பொதுவாக உலகம் அறியுமேயன்றி, மனித வர்க்கத்தின் நிரந்தரமான சிறந்த லக்ஷணங்களுக்கு உறைவிடம் இவர் என்பதைப் பெரும்பாலோர் அறியமாட்டார்கள். இந்த மிக்க அவசியமான உண்மையைத் தமிழ் மக்களுக்கு எடுத்து விளக்குவதே இச்சிறு நூலின் கருத்து.

இத்தகைய பெரியாரின் சரித்திரத்தை இவருடன் நெருங்கிப் பழகியவர்கள் எழுதுவதே சிலாக்கியமானது. ஆனால், தமிழில் இவருடைய வாழ்க்கையைப் பற்றிய விரிவான நூல் ஒன்று இல்லாத குறை என்னை இக்காரியத்தில் இறங்கத் தூண்டிற்று. எனவே, மௌலானாவைப் பற்றி ஆங்கிலத்தில் எழுதப்பட்டிருக்கிற பல நூல்களை மூலமாக வைத்துக்கொண்டு இதனை எழுதி யிருக்கிறேன். இதற்கு ஆதாரமாக நான் கொண்ட நூல்களாவன:—காலஞ்சென்ற ஸ்ரீ மகாதேவ தேசாய் எழுதிய "மௌலானா அபுல்கலாம் ஆஜாத்";

ஸ்ரீ எச். எல். குமார் எழுதிய "மௌலானா அபுல்கலாம் ஆஜாத்: ஒற்றுமைத் தூதர்"; ஜனாப் யூசுப் மேஹராலி எழுதிய "இந்தியாவின் தலைவர்கள்."

மௌலானா அபுல்கலாம் ஆஜாத் ஒரு மூலையில் கையைக் கட்டிக்கொண்டு உட்கார்ந்திருப்பவரன்று; இந்தியாவின் அரசியல் வெள்ளப் பெருக்கிலே அகப்பட்டு நீரோட்டத்தோடு நீந்திச் செல்பவர். எனவே, இவருடைய வாழ்க்கையைச் செவ்வனே உணர்வதற்கு, தேசத்தில் நிகழ்ந்த அரசியல் சம்பவங்களையும் தெரிந்து கொள்வது அவசியமாகும். ஆகையால், மௌலானா அவர்களுடைய வாழ்க்கையோடு சம்பந்தப்பட்ட அரசியல் நிகழ்ச்சிகளைச் சுருக்கமாகக் கூறியிருக்கிறேன். இதற்குப் பண்டித ஜவஹர்லால் நேருவின் சுய சரிதத்தையும், டாக்டர் பட்டாபி சீதாராமையாவின் காங்கிரஸ் சரித்திரத்தையும் ஆதாரமாகக் கொண்டிருக்கிறேன். எல்லாவற்றுக்கும் மேலாக, மௌலானா அவர்களை நேரிலே அறிந்து நெருங்கிப் பழகியிருக்கிற நண்பர் ஒருவரின் வாய் மூலம் இந்நூலில் கூறிய யாவற்றையும் சரிபார்த்துக் கொண்டிருக்கிறேன்.

என் வேண்டுகோளுக்கு இணங்கி இந்நூலுக்கு முன்னுரை எழுதி உதவிய ராஜாஜிக்கு என் நன்றியும் வணக்கமும்.

சென்னை, 30—10—44

எம். எம். இஸ்மாயில்.

# மௌலானா ஆஜாத்

## 1. முன்னோர்களும் தோற்றமும்

கல்வியும் செல்வமும் மனித வாழ்க்கையில் வமிச பரம்பரையாகத் தொடர்ந்து வருவது அருமை. லக்ஷாதிபதியின் செல்வப் புதல்வன் பிச்சையெடுக்கும் நிலையிலிருப்பதும், சகல கலைகளையுங் கற்று அறிவுச் சுடராக விளங்கும் மகா ஞானியின் மகன் அறிவிலியாக மதிப்பற்று நிற்கும் நிலையும் தினசரிக் காட்சிகள். ஆனால், மௌலானா அபுல் கலாம் ஆஜாதின் வமிச பரம்பரை அப்படியில்லை. சரித்திரம் கண்டமட்டும், சுமார் பத்துத்தலைமுறைகளுக்கு முந்தியே, மௌலானாவின் முன்னோரொருவர் ஏற்றிய அறிவுத் தீபமானது கொஞ்சங்கூட மங்குதலின்றி நம் மௌலானா வரை வந்து, இன்று மிகுந்த ஒளியுடன் பிரகாசிக்கிறது. ஏற்றப்பட்ட விளக்கு நேரஞ் செல்லச் செல்ல ஒளியில் மிகுந்து பிரகாசிப்பது போல, இந்த அறிவு - விளக்கானது, காலப் போக்கின் மாற்றத்துக்கும் அதன் காரணமாகத் தோன்றிய கருத்து-முன்னேற்றத்துக்கும் ஏற்ப, ஒளியிலே மிகுந்து வந்து, இன்றைய நாகரிகச் சூழ்நிலையிலகப்பட்டும் பூரணப் பிரகாசத்துடன் விளங்குகிறது.

ஷேக் ஜமாலுத்தீன் தெஹ்லவி ரெஹ்மத்துல்லாஹி அலைஹி அக்பர் சக்கரவர்த்தியின் காலத்தில் மிகப் பிரசித்தமாயிருந்தவர். ரெஹ்மத்துல்லாஹி அலைஹி என்ற அரபிச் சொற்றொடருக்கு "அவர்மீது இறைவனின் கருணை உண்டாவதாக" என்பது பொருள். மதவிஷயங்களில் உயர்ந்த அந்தஸ்தைப் பெற்றவர்கள் இறந்த பிறகு, அவர்களுடைய பெயர்களோடு மரியாதையைக் குறிப்பதற்காக இச்சொற்றொடர் சேர்க்கப்படும். அவர்

சந்நியாச வாழ்க்கை நடத்திவந்தார். ஆனால் ஒரு முஸ்லிம் வேதாந்தி என்றமுறையில் அவருடைய புகழ் முஸ்லிம் நாடுகளெங்கும் பரவியிருந்தது. அவரால் எழுதப்பட்ட நூல்கள், எல்லா முஸ்லிம்களாலும் மிக்க மரியாதையுடன் இன்றும் கொண்டாடப்படுகின்றன. அவைகளுள் அவர் வெளியிட்ட ஹதீஸ் தொகுப்பும் ஒன்று. அதுவே மிக்க ஆதார பூர்வமானதென்று எல்லோராலும் மதிக்கப் படுகிறது. அவருடைய அநேக சிஷ்யர்களுள் சக்கர வர்த்தியின் சகோதரரான கானே ஆஜமும் ஒருவர். ஷேக் ஜமாலுத்தீன் தெஹ்லவியின் ஆழ்ந்த ஞானத்துக்கு ராஜ மரியாதை காட்டும் அடையாளமாக, அவரைச் சமய வேதாந்த மத்திய கலாசாலையின் தலைவராக்க அக்பர் சக்கரவர்த்தி விரும்பினார். இன்னும் எந்தச் சம்மானத் தையும் அவர் ஆனந்தத்துடன் அளித்திருப்பார். ஆனால், துறவியான தெஹ்லவி, அவற்றை ஏற்க மறுத்து விட்டார். இத்தகைய துறவியும் சக்கரவர்த்தியை எதிர்க்கும் சந்தர்ப்பமொன்று வந்தது.

மதவிஷயங்களில் அக்பர் காட்டிய தாராளத் தன்மை உலகப்பிரசித்தமானது. இக்குணத்தை அக்பருக் குப் போதித்தவர் வைதிகமுஸ்லிம்களின் கொடுமைக்குப் பெரிதும் ஆளான முல்லா முபாரக் என்பவர். இவருடைய குமாரர்தாம், அக்பரின் மந்திரியாகவிருந்த அபுல் பாஜில். அபுல் பாஜிலிடமிருந்துதான். அக்பர் மதவிஷயங்களில் பக்ஷபாதமற்ற விசாரத்தின் பெருமையை நேரடியாகக் கற்றுக்கொண்டார். இதன் பலனாக ஒரு இபாதத்கானா (ஆண்டவனை வணங்குமிடம்) அமைக்கப்பட்டது. இங்கே வந்து விவாதம் நடத்துமாறு பல் வேறு மதங்களின் தலை வர்களும் பண்டிதர்களும் அழைக்கப்பட்டார்கள். இம் மாதிரி நடக்கும் கூட்டங்களொன்றில், ஒருநாள், "லௌகிக காரியங்களுக்குத் தலைவனாக இருப்பதேபோல், அரசன் பாரமார்த்திக காரியங்களிலும் தலைமை வகிக்கவேண்டும்" என்ற விஷயத்தைப்பற்றிய விவாதத்தை அபுல்பாஜில் ஆரம்பித்து வைத்தார். கூடியிருந்தவர்களால், இக்கொள் கையை யேற்கவுமுடியவில்லை; அக்பரின் அதிகாரத்தை

மறுக்கவுமுடியவில்லை; மெல்லவுமுடியாமல், விழுங்கவு முடியாமல் விழித்துக் கொண்டிருந்தார்கள். முடிவில், ஒரு சமரசப் பாதையைக் கண்டுபிடிக்கமுயன்று, அபுல் பாஜிலின் தீர்மானத்தையே யேற்றுக்கொள்ளும் நிலைக்கு வந்துவிட்டார்கள். இறுதியாக, "சக்கரவர்த்தி நியாய மான முறையில் ஆட்சி செலுத்துவதால், இஸ்லாம் சம்பந்தப்பட்ட எல்லா விஷயங்களிலும் அவரே முடிவான அதிகாரியென்று பொருள் கொள்ளும் 'முஜ்தஹித்' என்ற பதவியை அவருக்கு அளித்தார்கள்" என்று சாசனம் எழுதப்பட்டது. அதில் முல்லா முபாரக் கையெழுத்திட்டு விட்டு, அங்கே கூடியிருந்த பிற முஸ்லிம் வேதாந்திகளையும் அப்படியே செய்யுமாறு அழைத்தார். ஆக்ரா, ஜான்பூர் முதலிய ஊர்களிலிருந்து வந்தவர்களும், டில்லியிலுள்ள வர்களுள் சிலரும் கையெழுத்திட்டு விட்டார்கள். ஷேக் ஜமாலுத்தீன் கையெழுத்திட மறுத்துவிட்டார். வேறு சிலரும் அவரைப் பின்பற்றினார்கள். இதனால் அவர் சக்கர வர்த்தியின் கோபத்துக்கு ஆளானாரா இல்லையா என்பது தெரியவில்லை. அவர் இந்தியாவை விட்டு மக்காவுக்குப் போய்விட்டார். எனவே, சரித்திரத்திற் கண்ட மௌலானா வின் முன்னோர்களில் முதல்வராயிருந்தவர், 'சத்தியாக் கிரக'த்தை மௌலானாவுக்குப் பரம்பரைச் சொத்தாக விடுத்துச் சென்றிருக்கிறார்.

ஷேக் முஹம்மத் என்பவர் ஷேக் ஜமாலுத்தீனின் ஆண் சந்ததி வழியில் வந்தவர். இவர் ஜஹாங்கீர் காலத்தில் வாழ்ந்துவந்தார். யாரோ ஒருவர் சக்கர வர்த்திக்குத் தலைவணங்கும் பழக்கத்தை யேற்படுத்தி விட்டார். முஸ்லிம் வேதாந்திகள் உட்பட எல்லோரும் அப்படியே செய்யவேண்டு மென்று எதிர்பார்க்கப் பட்டார்கள். ஆனால் ஷேக் முஹம்மத் அப்படிச் செய்ய மறுத்துவிட்டார். 'தலைவணங்குவதென்பது பரம்பொரு ளொன்றுக்கே உரியதன்றி, சக்கரவர்த்தியாயினும் சண் டாளனாயினும் மனிதனுக்கு உரியதன்று' என்று தைரிய மாகக் கூறினார். எனவே, மன்னனுக்கு முன்னே மண்டி யிட்டு முடிவணங்க மறுத்ததற்காக நான்காண்டுகள்

குவாலியர் கோட்டையில் ஷேக் முஹம்மத் சிறைவாசம் செய்ய நேர்ந்தது.

எந்த உத்தியோகத்தையும் பதவியையும் ஏற்றுக் கொள்வதில்லை யென்பது நீண்டகாலமாக மௌலானுவின் குடும்ப சம்பிரதாயமாக இருந்துவந்தது. ஆனால் மௌலானுவின் முன்னேரில் ஒருவரான ஷேக் சரா ஜுத்தீன் என்பவர் பிரதம நீதிபதி பதவியை யேற்றுக் கொண்டுவிட்டார். அன்றிருந்து அச் சம்பிரதாயம் சிதைந்துவிட்டது. அவருக்குப் பின்னே வந்தவர்கள் அநேகவித உத்தியோகங்களை வகித்து வந்தார்கள். மௌலானுவின் பாட்டனர் முகலாயச் சக்கரவர்த்தி யொருவரால் கடைசியாக நியமிக்கப்பட்ட ருக்னுல் முதரஸ்ஸீன் (அறிவின் தூண்கள்) என்பவர்களில் ஒருவர்.

மௌலானு அபுல்கலாம் ஆஜாதின் தந்தையார் மௌலானு முஹம்மத் காஹிருத்தீன் என்பவர். ஷேக் ஜமாலுத்தீனிடமிருந்து பரம்பரையாக வந்த பெருமைகள் யாவும் இவரிடம் பூரணமாக நிரம்பி யிருந்தன. அவரைப் போல், இவரும் ஒரு வேதாந்தியாகவும் யோகியாகவு மிருந்தார். அரபி, பாரசீக பாஷைகளில் அவர் அநேக நூல்கள் எழுதியிருக்கிறார். அவருடைய எளிய வாழ்க்கையும், யோக சாதனங்களும், ஆழ்ந்த ஞானமும், பரந்த அறிவும் இந்நாட்டினரை மாத்திர மல்லாமல் பிற நாட்டினரையும் வசீகரித்தன. இவருடைய சிஷ்யர்கள் இன்றும் கல்கத்தா, பம்பாய், டில்லி, குஜராத், கதியவாட், சிலோன், ஜாவா, எகிப்து, ஈராக், சிரியா முதலிய இடங்களில் காணப்படுகின்றனர், மௌலானு முஹம்மத் காஹிருத்தீன், மத விஷயங்களில் மாத்திரம் தலைவராக இருக்கவில்லை. இவர் ஒரு சிறந்த தேச பக்தராகவும் இருந்தார்.

1857-ம் வருஷத்திய சிப்பாய்க் கலகமென்று சொல்லப் படும் இந்தியாவின் முதல் சுதந்திரப் போர் தோல்வி யடைந்துவிட்டது. அடிமைத்தளைகளை யுடைத்தெறிந்து விட்டு, சுயேச்சைக் கொடியை நாட்ட எண்ணி ஆயுதந் தாங்கிக் கிளம்பிய ஆயிரக்கணக்கான வீர இளைஞர்களின் கனவு பலிக்காமற் போய்விட்டது. அவர்கள் சிந்திய இரத்

தத்துக்குப் பலன் அப்போது கிடைக்கவில்லை. முஸ்லிம் களின் ஆட்சியிலிருந்துதான் இந்தியா ஆங்கில ஆட்சிக்கு மாறியதென்ற உண்மையை அக்கால முஸ்லிம்கள் மறந்து விடவில்லை. எனவே, புரட்சிக் கொடியை முதலில் உயர்த் தியவர் ஒரு முஸ்லிம் என்பதில் ஆச்சரியமில்லை. அதே மாதிரி, இன்றும் இந்தியாவின் சுதந்திரப் போரின் தள கர்த்தராயிருப்பவர் ஒரு முஸ்லிம் அறிஞர் என்பதிலும் எவ்வித ஆச்சரியத்துக்குமிடமில்லை. டில்லியில் கலகம் அடக்கப்பட்டுவிட்டது. கலகக்காரர்கள் பலாத்காரத்தில் இறங்கினார்கள் என்பது உண்மையே. ஆனால் அக் கலகத்தை யடக்க அரசாங்கத்தார் கையாண்ட முறைகள் உலகிலேயே நடந்திருக்கும் எல்லா அடக்குமுறை இருட் டாட்சிகளையும் மிஞ்சிவிட்டன. 'கலக'த்தில் ஈடுபடாத பெண்களும் குழந்தைகளும் துன்புறுத்தப்பட்டார்கள்; சில சமயங்களில் கொல்லவும்பட்டார்கள். அவர்களுடைய வீடுகள் தீக்கு இரையாயின. கைதியானவர்களைக் கொலை செய்தார்கள். அங்கஹீனமாக்கினார்கள். சித்திரவதை செய்தார்கள். "பிரிட்டிஷ் துருப்புகள் முஸ்லிம்களைப் பிடித்து அவர்களுடைய உடம்பு முழுதும் பன்றிக் கொழுப்பைத் தடவிப் பன்றியின் தோலை அவர் களுக்குப் போர்வையாகத் தைத்துப் போட்டு அவர்களை நெருப்பிலிட்டுக் கொளுத்தின. ஹிந்துக்கள் தங்களைத் தாங்களே அசுத்தப்படுத்திக் கொள்ளும்படி கட்டாயப் படுத்தப் பட்டார்கள்" என்று லண்டன் டைம்ஸ் பத்திரி கையின் நிருபராயிருந்த ரஸ்ஸல் என்பவர் "எனது இந்திய டயரி" என்பதில் கூறுகிறார். மேலும் அவர் கூறுவதாவது:—"கலகக்காரர்கள் ஆத்மிகச் சித்திர வதைக்கும் மனவேதனைக்கும் ஆளாக்கப்பட்டார்கள்; அம்முறைகளைக் கையாளுவதற்கு நமக்கு உரிமையில்லை; ஐரோப்பாவில் அத்தகைய செயல்களைச் செய்வதற்கு நாம் துணிந்தே யிருக்கமாட்டோம்." "லக்ஷ்மணபுரி கைப் பற்றப் பட்டபோது எந்தவிதமான வேற்றுமையும் கற்பிக்கப் படவில்லை. நம் கையிலகப்பட்டவர்கள் சிப்பாய் களாயிருந்தாலும் சரி, கிராம வாசிகளாயிருந்தாலும் சரி, உடனே அவர்கள் கொல்லப்பட்டார்கள். அவர்களை

யாரும் எந்தக் கேள்வியும் கேட்கவில்லை; அவர்களுடைய தோல் கறுப்பாயிருந்ததே, அது போதாதா? ஒரு துண்டுக் கயிறே, ஒரு மரக்கிளையோ அல்லது அவன் மூளையைத் துளைத்துக்கொண்டு போகக்கூடிய ஒரு துப்பாக்கிக் குண்டோ அந்தத் துர்பாக்கியப் பிராணியின் உயிரைப் போக்கின." (லெப்டினன்ட் வி. டி. மஜெண்டி). எக்குற்றமும் அறியாத ஆயிரக்கணக்கான மக்கள் தங்கள் வீடுகளையும் உடைமைகளையும் விட்டு வெளியேற வேண்டியிருந்தது. எண்ணற்ற நிரபராதிகள் தம் உயிரை யிழந்தார்கள். இத்தகைய நிகழ்ச்சிகள் டில்லி, கான்பூர், லக்ஷ்மணபுரி ஆகிய பல இடங்களிலும் நடைபெற்றன. பீரங்கியின் வாயில் வைத்துச் சுடப்படுவது கைதியானவர்கள் அடையும் ஒரு சாதாரணத் தண்டனையாயிருந்தது. மௌலானா முஹம்மத் காஹிருத்தீனின் இரத்தம் கொதித்தது. ஆனால் வழியொன்றுமில்லை. தம் உயிரைக்காப்பாற்றிக்கொள்ள அவரே ஓடும்படியாயிற்று. எனவே, நாட்டைவிட்டு வெளியேறத் தீர்மானித்தார். டில்லியை விட்டு ராம்பூர் போய்ச் சேர்ந்தார். அங்கே நவாப் யூசுபு அலி கான் பிரிட்டிஷ் சர்க்காரை ஆதரித்த போதிலும், அவருடைய சிஷ்யர்களுள் ஒருவரானபடியால், அங்கிருந்து பம்பாய்க்கும், பம்பாயிலிருந்து மக்காவுக்கும் அவருக்கு வேண்டிய யாத்திரை யேற்பாடுகளைச் செய்தார். இவ்வாறாக மௌலானா அபுல் கலாம் ஆஜாதின் தந்தையான மௌலானா முஹம்மத் காஹிருத்தீன் இந்தியாவை விட்டு வெளியேறி அரேபியாவில் மக்காவில் குடியேறினார்.

அப்போது துருக்கியில் சுல்தானாக இருந்தவர் அப்துல் மஜீத் என்பவர். மௌலானா முஹம்மத் காஹிருத்தீனின் பிராபல்யத்தைக் கேட்டிருந்த சுல்தான் இவரை கான்ஸ்டான்டிநோபலுக்கு வரும்படி வேண்டிக் கொண்டார். இவரும் சுல்தானின் வேண்டுகோளுக்கிணங்கி அங்கே சென்றார். இவருடைய அநேக நூல்கள் சுல்தான் அப்துல் மஜீதின் ஆதரவிலே கெய்ரோவில் வெளியிடப்பட்டன. இது காஹிருத்தீனின் புகழ் மேல்மேலும் பரவுவதற்குப் பேருதவியாக விருந்தது. துருக்கியிலிருந்து

திரும்பிய காஹிருத்தீன் 'அய்ன் ஜுபைதா' என்ற மக்காவின் பிரசித்தி பெற்ற கால்வாயைக் கட்டும் வேலையில் ஈடுபட்டார். இந்தியாவிலும் பிற நாடுகளிலுமுள்ள அவருடைய சிஷ்யர்கள், நண்பர்கள் தாராளமாகப் பண உதவி செய்தார்கள். பதினேரு லக்ஷ ரூபாய்ச் செலவில் கால்வாய் கட்டி முடிக்கப்பட்டது.

மௌலாஞ முஹம்மத் காஹிருத்தீன், மக்காவில் மிகப் பிரசித்தி பெற்ற முஸ்லிம் வேதாந்தியாயிருந்த முஹம்மத் ஜாஹிர் வெத்ரி என்பவரின் மகளை மணம் செய்து கொண்டார். அப்பெண்மணியின் மாமன் ஷேக் முஹத்பின் தாஹிர் என்பவர். அவர் மதீனவின் முப்தியாக இருந்தார். மேலும் இப் பெண்மணியின் முன்னேர்களில் பலர் இந்தியாவில் முகலாய ஆட்சிக்காலத்தில் உயர்ந்த உத்தியோகங்கள் வகித்திருக்கிறார்கள். அவர்களில் ஒருவர் ஷாஆலம் காலத்திலும், இரண்டாவது அக்பரின் காலத்திலும் கல்வி மந்திரியாகவு மிருந்திருக்கிறார். மற்ருருவர் அநேக ஆண்டுகளுக்கு லாகூரின் காஜியாகவும், சுபேதாருக்கு விசேஷ ஆலோசனையாளராகவு மிருந்திருக்கிறார். இவ்வுத்தியோகம், இக்காலத்திய மாகாண கவர்னர் பதவிக்கு அக்காலத்தில் சமானம். மௌலாஞ முஹம்மத் காஹிருத்தீனுக்கும் இப்பெண்மணிக்கும் பிள்ளையாய் 1888-ம் ஆண்டு செப்டம்பர் மாதத்தில் நம் மௌலாஞ அபுல்கலாம் ஆஜாத் மக்காவில் பிறந்தார். இவருடைய அப்போதையப் பெயர் அஹமத் அபுல் கலாம்.

மௌலாஞ அபுல் கலாம் ஆஜாத் இன்றைய இந்திய உலகில் உயர்ந்த ஸ்தானத்தை வகிக்கிருர் என்ருல் அதில் விசித்திரத்துக்கிடமில்லை. தந்தை வழியில் மாத்திரமன்றித் தாய் வழியிலும் அறிவுச் சிறப்பும் நிர்வாகப் பெருமையும் தொடர்ந்து வந்திருக்கின்றன. ஷேக்ஜமாலுத்தீனின் உறுதியும், சத்தியாக்கிரக இயற்கையும், ஷேக் முஹம்மதின் அஞ்சாமையும் சிறைவாசமும், ஷேக் சராஜுத்தினின் நீதிபதிப் பதவியின் நெறியும் தந்தையின் தேசாபிமானமும் அதன் காரணமாக அவர் நாட்டைவிட்டு வெளியேறினதும், தாய்வழியே வந்த நிர்வாக அனுபவமும்,

எல்லாவற்றுக்கும் மேலாக, இருவழிகளிலுமாக வந்த உலகமே போற்றிய ஆழ்ந்த அறிவு, மகத்தான ஞானம், உயர்ந்த வாழ்க்கை, உலகப் பெருமை, மதிப்பு ஆகிய யாவும் மௌலானா அபுல்கலாம் ஆஜாதின் வாழ்க்கையில் ஒருங்கே திரண்டு மிகச் சிறப்பாகப் பரிணமித்திருக்கின்றன.

மௌலானா முஹம்மத் காஹிருத்தின் மக்காவுக்கு வந்த பிறகு, கத்தியவாடிலிருந்து மக்காவுக்கு ஹஜ் யாத்திரைக்காகச் சென்றிருந்த முஸ்லிம் சிஷ்யர்கள், இந்தியாவிலுள்ள ஆயிரக்கணக்கான சிஷ்யர்களின் நன்மையை உத்தேசித்து அவர் இந்நாட்டுக்குத் திரும்பிவர வேண்டுமென்று பெரிதும் வேண்டிக் கொண்டார்கள். அவர்களுடைய விடாப்பிடியான வேண்டுகோளுக்கிணங்கி அவர் 1880-ல் பம்பாய்க்கு வந்தார். 1880-லிருந்து 1892-வரையில் அவர் பம்பாய்க்கும் மக்காவுக்குமாக வந்து போய்க்கொண்டிருந்தார். கடைசியாக ஹாஜி அப்துல் வாஹித் என்ற சிஷ்யரின் இடைவிடாத வேண்டுகோளுக்கிணங்கி 1898-ல் இந்தியாவில் வந்து, குடும்பத்தோடு கல்கத்தாவில் வசிக்கத் தொடங்கினர்.

## 2. மூர்த்தி சிறிது; கீர்த்தி பெரிது

அஹமத் அபுல்கலாம் பத்துவயதுவரையில் மக்காவிலும் மதினாவிலுமாக இருந்து அங்குள்ள முஸ்லிம் பண்டிதர்களிடம் கல்வி பயின்று வந்தார். இவருடைய தாய்க்கு அரபியன்றி வேறெந்த பாஷையும் தெரியாதாகையால், அரபியே அபுல்கலாமின் தாய்மொழியாக இருந்து வந்தது. தம் தந்தையின் மூலம் உர்து பாஷையைக் கற்றுக்கொண்டார். விஷயங்களைக் கிரகித்துக்கொள்ளும் சக்தியில் அபுல்கலாம் எல்லோருக்கும் ஒரு அதிசயமாகவே காணப்பட்டார். இந்தியாவுக்கு வந்தபிறகு இவரது தந்தை இவரை ஒரு மௌல்வியிடம் ஒப்புவித்தார். அபுல்கலாமின் மதிநுட்பத்தைக் கண்டு ஆச்சரியப்படாதார்

யாருமில்லை. இவரால், அந்த வயதில் கிரகிக்க முடியாத விஷய மெதுவுமேயில்லை. தர்ஸே நிஜாமி (இது ஒரு பாடத்திட்டத்துக்குப் பெயர்) என்பது, மொழி, தத்துவம், தர்க்கம், கணிதம், பூகோளம், சரித்திரம் ஆகிய யாவும் அடங்கிய ஒரு அரபிப் பாட வகுப்பு. இதை முடிப்பதற்கு நல்ல புத்திக் கூர்மையுள்ள மாணவ னொருவனுக்குப் பத்து ஆண்டுகளும், ஒரு சாதாரண மாணவனுக்குப் பதினன்கு ஆண்டுகளும் ஆகும். நம் அபுல்கலாம் இப்பாடத் திட்டத்தை நான்கே ஆண்டுகளில் முடித்துவிட்டுத் தம்முடைய பதினன்காம் வயதில் மௌலாறுவென்று அழைக்கப்பட்டார். அவ்வயதுக்கு முன்ன தாகவே, அரபியிலோ, பாரசீகத்திலோ இவர் படிக்காத நூல்களில்லை. இவரை அறியாதவர்கள் இச்செய்தியை நம்ப மறுத்தார்கள். சரித்திரத்தில்கூட இவ்வளவு சிறிய வயதில் அவ்வளவு கல்வி ஞானம் பெற்றவர்களைக் காண்பது அருமை. ஜான் ஸ்டுவர்ட் மில் கூடத் தம் பதினன்காம் வயதில் இவ்வளவு கல்வி கற்றிருந்தார் என்று கூறமுடியாது. அபுல்கலாமின் அறிவுப்பெருக்கு அற்புதமாகவும் விந்தையாகவும் விளங்கிற்று.

அக்காலத்தில் தாம் கற்றதைப் பிறருக்குக் கற்பிக்கும் சக்தி பெற்ருலொழிய ஆலிம் என்னும் பட்டத்தைப் பெற முடியாது. அபுல்கலாமோ என்ருல் பிறருக்குப் போதிப்பதிலும் சிறந்து விளங்கினுர். இவர் விஷயங்களை யெடுத்துக்கூறும்போது காட்டிய தெளிவும் விளக்கமும் எல்லோருடைய கவனத்தையும் கவர்ந்தன. ஒரே சமயத்தில் இவர் மாணவராகவும் ஆசிரியராகவும் இருந்திருக்கிருர். பட்டாணி ஒருவருக்குத் தாம் கற்றுக்கொடுத்த அனுபவத்தை அபுல்கலாமே பிற்காலத்தில் பின்வருமாறு கூறியிருக்கிருர். "என்னுடைய மாணவர்கூட்டத்தில் நீண்ட தாடியோடு கூடிய முதிர்ந்த பட்டாணி ஒருவருமிருந்தார். அந்த மனிதருக்குப் புத்தி கொஞ்சம் மந்தம். ஆனல் அவருக்கு மெதுவாகச் சொல்லக்கூடிய அளவுக்கு எனக்குப் பொறுமையில்லை. தர்க்கத்தில் பகுமுறை அனுமானம் (Deduction), தொகுமுறை அனுமானம் (Induction) என்ற

இரண்டுக்குமுள்ள வேற்றுமையை அவர் மூளையில் ஏற்று வதற்குப் பலநாட்களாக முயன்றேன். பொதுவான நியதியிலிருந்து குறிப்பான விதிகளை விவாதித்து நிலைநாட்டுவதற்கும், குறிப்பானவற்றிலிருந்து பொதுவானவைகளை நிரூபிப்பதற்குமுள்ள வித்தியாசத்தை, ஒன்று மேலேயிருந்து கீழே வருவது, மற்றொன்று கீழேயிருந்து மேலே போவது என்று விளக்கினேன். இந்த வேறுபாட்டை விளக்குவதற்கு இப்படிக் கூறுவதுதான் மிகச் சுலபமான வழியென்று எண்ணினேன். அந்தக் கிழவர் அதைத் தலைகீழாகக் கொண்டு விட்டார். நான் என்னுடைய நிதானத்தை யிழந்துவிட்டேன். புத்தகத்தை அம்மனிதரின் முகத்தில் எறிந்துவிட்டு ‘நீர் ஒரு காலத்திலும் கற்றுக்கொள்ளப் போவதில்லை; வீட்டுக்குப்போய் புல்லைத் தின்னும்’ என்று கோபமாகக் கூறினேன். அக்கிழப் பட்டாணி ஒன்றுமே சொல்லவில்லை. அன்று முழுதும் அவர் சாப்பிடவுமில்லை. என் தந்தைக்கு இது தெரிந்த போது, அவருக்கு என்மீது அசாத்திய கோபமுண்டாயிற்று. உடனே என்னைக் கூப்பிட்டு, ‘உனக்கு வெட்கமில்லையா? உன் தகப்பன் வயதாயிற்றே அந்த மனிதனுக்கு என்பது உனக்குத் தெரியவில்லையா? உடனேபோய் அந்த மனிதனிடம் மன்னிப்புக் கேட்டுக் கொண்டு, சாப்பிடும்படி வேண்டிக்கொள்’ என்று கடுமையாகக் கூறினர். அந்தக் கிழப் பட்டாணியோ எதுவுமே நிகழாததுபோல் நடந்து கொண்டார். நான் அவருடைய ஆசிரியனுகையால், அவரைத் தண்டிக்க எல்லாவித உரிமைகளும் எனக்கு உண்டென்றும், மேலும் நான் மன்னிப்புக் கேட்டுக்கொள்வதற்கு எவ்வித பிரமேயமும் இல்லை யென்றும் சொன்னர். இது என் நடத்தையைப்பற்றி என்னையே வெட்கமுறச் செய்தது. அந்த மனிதர் சாப்பிடும்வரை அவரை விட்டு நான் நகரவேயில்லை.”

அபுல்கலாம் தம்முடைய பதினைந்தாம் வயதில் குர்-ஆனை மனப்பாடம் செய்து “ஹாபீஸ்” என்ற பட்டத்தைப் பெற்றுர். குர்-ஆன் சம்பந்தமாக ஆதார

பூர்வமாகவும் ஆணித்தரமாகவும் பிரசங்கம் செய்யும் வன்மையும் இவருக்கிருந்தது. 1905-ல் இவருடைய தந்தையார் இவரை கெய்ரோவிலுள்ள அல் அஜார் சர்வ கலாசாலைக்கு அனுப்பிவைத்தார். 1905-லிருந்து 1907 வரையில் அபுல்கலாம் கெய்ரோவில் கல்வி பயின்று வந்தார். இவருடைய நுண்ணறிவு மிக நுட்பமான விஷயங்களை மிக எளிதில் உணர்ந்து கொண்டது. சர்வ கலாசாலை யதிகாரிகள் அனைவரும் அபுல்கலாமின் அபார மான அறிவுத் திறமையை யுணர்ந்து இவரை மரியாதை யுடனும் கௌரவத்துடனும் நடத்தி வந்தார்கள். வருங் கால முஸ்லிம் உலகிலேயே, இஸ்லாமியக் கலைகள் யாவுக்கும் தனிப் பெருந் தலைவராக இவர் விளங்குவார் என்பதில் அக்காலத்தில் இவரை யறிந்தவர்கள் யாருக்கும் சிறிதும் சந்தேகமேயில்லை. அபுல்கலாம் 1907-ல் இந்தியா திரும்பினர்.

அபுல்கலாம் முறையாகக் கற்றவை யாவும் அரபி, பாரசீக, உர்து மொழிகளிலேதான். இவர் எந்த ஆங்கிலக் கலாசாலையிலும் படிக்கவில்லை. இதற்குக் காரணம் அக்காலத்தில் நாட்டில் நிலவியிருந்த கொந்தளிப்பே யாகும். "சிப்பாய்க் கலக"த்திற்குப் பின் நிகழ்ந்த அடக்குமுறையால், ஆங்கிலேயர்களை இந்தியர்கள் பெரிதும் வெறுக்க ஆரம்பித்தார்கள். இந்த வெறுப்பானது ஆங்கிலேயரோடு சம்பந்தப்பட்ட அனைத்தின் மீதும் பகையாகப் பரவிவிட்டது. 'ஆங்கில பாஷையையும், அதன்மூலம் ஆங்கிலக் கலையையும் பரப்பி, இந் நாட்டின் கலாசாரங்களை யொழிக்க, சர்க்கார் முயற்சி செய்கிறார்கள்' என்ற எண்ணம் மக்களிடையே பலமாக வேரூன்றியிருந்தது. மௌலானா காஹிருத்தீனும் இந்த அபிப்பிராயமே கொண்டிருந்தார். ஆகவே, அபுல் கலாம் முறையான ஆங்கிலக் கல்வி பெறவில்லை. இதைப் பற்றியும், தம் தந்தையின் குணத்தைப்பற்றியும் அபுல் கலாமே பின்வருமாறு கூறியிருக்கிறார் :—

"என்னுடைய தகப்பனர் மிகவும் ஒதுங்கின சுபாவ முடையவர். அவரை வந்து பார்த்துவிட்டுப் போகும்

சிஷ்யர்கள் ஆயிரக்கணக்கானவர்கள். ஆனுல் மௌலூது ஷரீபு தினம் (நபி முஹறதின் பிறந்த தினம்) ஈத் தினம் ஆகிய இவ்விரண்டே நாட்களில் மட்டும் ஒரேயொரு சிஷ்யன் வீட்டுக்குப் போவதைத்தவிர, அவர் வேறெங்கும் போனதை நான் பார்த்ததில்லே. வீட்டிலுள்ள ஒவ்வொன்றிலும் ஒரு தீவிர எளிமை மிளிர்ந்து கொண்டிருந்தது. நவீனத்தோடு கூடிய எதையும் அவர் மனப்பூர்வமாக வெறுத்தார். வீட்டில் நாற்காலியோ, மேஜையோ கிடையாது. வாழ்க்கை அந்தஸ்தில் உயர்ந்தவர்களோ தாழ்ந்தவர்களோ வீட்டுக்கு வரும் விருந்தாளிகள் அனைவருக்கும் அமர்வதற்கு ஒரேயொரு பாய்தான் உண்டு. இத்தகைய விருந்தாளிகளாய் நவாபுகளும் திப்பு சுல்தானின் குமாரரும் வருவார்கள். அவர் வாழ்க்கையிற் போலவே அவருடைய உடையிலும் ஒருதீவிர எளிமை ததும்பிற்று. அவர் பொத்தான்களுள்ள 'கோட்'டை அணிந்து நான் பார்த்ததேயில்லே. நவநாகரிகத்தின் வாசனையையும் அவர் வெறுப்பவராகையால் எனக்கும் என் சகோதரருக்கும் ஆங்கிலக் கல்விப் பயிற்சியளிக்க வேண்டுமென்ற எண்ணமே அவருக்கில்லே. அப்போதுதான் ஸர் செய்யத் அஹமத்கான் பூர்வாசாரத்தைப் பற்றி நிற்கும் பிற்போக்குச் சக்திகளுக்கு விரோதமாகப் புரட்சிக்கொடியை உயர்த்திஞர்; ஆங்கிலத்தையும், நவீன விஞ்ஞானங்களேயும் கற்றுக் கொள்ளுமாறு முஸ்லிம் வகுப்பினர்களேப் பெரிதும் வேண்டிக்கொண்டார். என் தந்தையோ இவற்றுக்கெல்லாம் செவிசாய்க்க மறுத்து விட்டார். எனவே, நானும் என் சகோதரனும் பழைய வழியையே பின்பற்றி வந்தோம்.

"1909-ல் என் தந்தையின் மரணத்துக்குப் பிறகு தான், ஒரு நண்பரின் தூண்டுகோலின்மேல், அகராதியையும் இலக்கணத்தையும் வைத்துக் கொண்டு ஆங்கிலத்தைக் கற்க ஆரம்பித்தேன். என் தந்தை என்னே ஆங்கிலப் பள்ளிக்கூடத்துக்கு அனுப்பாததைப்பற்றி நான் வருந்தவில்லே. அதனுல் நான் ஒன்றும் நஷ்டமடையவில்லே. அதற்குப் பதிலாக எனக்குத் தேவையான

ஆங்கிலத்தை என் சொந்த முயற்சிகொண்டே கற்க நேர்ந்ததால் லாபமே யடைந்தேனென்று எண்ணுகிறேன். இதனால், நான் ஏராளமான காலத்தையும், முயற்சியையும் மிச்சம்பிடித்ததோடு கற்க வேண்டியதையும் கற்றேன்."

இன்று மௌலானா அபுல்கலாம் ஆஜாதின் ஆங்கில ஞானம் ஓர் ஆங்கிலப் பேராசிரியரின் ஞானத்துக்குச் சமானமாகும். இன்று இவருடைய புத்தகசாலையில் ஆங்கில, பிரஞ்சு பாஷைகளிலுள்ள கிரந்தங்கள் யாவும் நிறைந்திருக்கின்றன. ஷேக்ஸ்பியர், ஷெல்லி, உவர்ட்ஸ்வர்த், பைரன் ஆகிய எல்லா ஆங்கிலக் கவிகளையும் இவர் நன்றாகப் படித்திருக்கிறார். ஆனால் எவ்விதக் கட்டுப்பாடுகளையும் உடைத்தெறியும் சுதந்திர வெறி கொண்டு, தம் நாட்டை விட்டுச் சென்று, கிரேக்க நாட்டின் சுதந்திரப் போரில் பங்கெடுத்துக்கொண்டு, தம் உயிரைப் பலி கொடுத்த பைரனைத்தான், சுதந்திர வேட்கை மிகுந்தவராய், இந்தியாவின் விடுதலைப் போரின் தளகர்த்தரான மௌலானா அபுல்கலாம் ஆஜாதுக்கு அதிகமாகப் பிடிக்கிறது. பழைய நூல்களை மட்டுமல்ல, புதிய நூல்களையும் இவர் விடுவதில்லை. இக்காலத்தில் வெளியாகும் நாவல்களும், பொருளாதார நூல்களும் இவரிடமிருந்து தப்புவதில்லை. ஆங்கிலக் கலாசாலையின் பக்கமே போயிராத ஆஜாத் இன்று ஆங்கில அரசியல் வாதிகளோடு போராடிக் கொண்டிருப்பது சரித்திரத்தில் ஒரு விந்தை.

தந்தையின் மரணத்துக்குப் பின், அபுல்கலாம் தம்முடைய தகப்பனாரின் ஸ்தானத்திலிருந்து ஆயிரக்கணக்கான சிஷ்யர்களோடு, ஒரு மதகுருவாக விளங்குவாரென்று இவருடைய உற்றார் எதிர்பார்த்தனர். ஆனால் மதக் கல்வியோடு நவீன கருத்துக்களையும் சேர்த்துக் கொண்ட அபுல்கலாமுக்கு அம்மாதிரி வாழ்க்கை பிடிக்கவில்லை. ஸ்வதந்திர வெறியும் சேவை வேட்கையுங் கொண்ட இவர் உள்ளம் மத வேலிக்குள் கட்டுப்பட மறுத்துவிட்டது. இருள் அடைந்திருந்த வெளியுலகத்தைத்

தம் அறிவுச் சுடரால் பிரகாசப்படுத்த முயன்றார். அம் முயற்சியின் பலனே இன்றைய ராஷ்டிரபதி மௌலானா அபுல்கலாம் ஆஜாத். இவர் குர்-ஆனையும், முஹம்மத் நபியின் சரித்திரத்தையும், சத்தியத்தையும் நிலைநாட்டுவதற்காகத் தங்கள் உயிரையும் தத்தம் செய்த முஸ்லிம் தியாகிகளின் சரித்திரங்களையும் திரும்பத் திரும்பப் படித்தார். அவை இவருடைய உள்ளத்தில் ஒரு புதிய சக்தியையும், வேகத்தையும் சிருஷ்டித்தன. இப்புதிய சக்திதான் பின்னளில், 'அல்-ஹிலால்' பத்திரிகையின் மூலமாகப் பெருக்கெடுத்தோடி, அப்பிரவாகத்தில் தேசத்தை ஆழ்த்திற்று. தமக்கு இருபது வயதாவதற்கு முன்னதாகவே, முஸ்லிம் நாடுகளில் சுற்றுப் பிரயாணஞ் செய்து முடித்தார். எகிப்து, ஈராக், துருக்கி, சிரியா முதலிய நாடுகளுக்கு விஜயஞ்செய்து அந்நாடுகளிலே பிரபல அரசியல்வாதிகளுடனும் மதத் தலைவர்களுடனும் கலந்து பேசினார். அந்நாடுகளிலுள்ள மக்களின் சுதந்திர உணர்ச்சி அபுல் கலாமின் உள்ளத்தில் அப்படியே பதிந்துவிட்டது. அதுவே இந்தியாவின் சுதந்திரப் போரில் இவர் ஈடுபடுவதற்கு நேரடியான தூண்டுதலாகவு மிருந்தது. இன்று மௌலானா அபுல்கலாம் ஒரு மதத் தலைவராக மாத்திரம் இருப்பாரானால், இவர் மற்றொரு ஆகாகானாக இருந்திருப்பார். ஆனால், நாற்பது கோடி அடிமை மக்களின் உள்ளத்தில், அவர்களுடைய சுதந்திரப் போரை நடத்தும் வீரனாக இடம் பெற்றிருக்க மாட்டார்.

# 3. ஆஜாதின் பேனா

மௌலானா அபுல்கலாமுக்குத் தம் தகப்பனாரின் ஒதுங்கிய சுபாவமே அமைந்திருந்தாலும், தணிக்க முடியாத அறிவுத்தாகம் இவரை யொரு மூலையி லொதுங்கியிருக்க விடவில்லை. புத்தகங்கள் மூலமாகவும், பத்திரிகைகள் மூலமாகவும் இவர் வெளியுலகுடன் தொடர்பு வைத்துக் கொண்டார். நாட்டில் நிலவிய விவாதத்துக்குரிய விஷயங்கள் யாவற்றிலும்

இவர் பங்கெடுத்துக் கொள்ளுவது வழக்கம். இவர் பிறவி யெழுத்தாளராகவும் பிறவிப் பத்திரிகாசிரியராகவும் காணப்பட்டார். இவருக்குப் பதினன்கு ஆண்டுகள் நிரம்பு வதற்கு முன்னதாகவே, இவருடைய ஆசிரியப் பொறுப் பிலே லேசானுஸ்சித்க் (சத்தியத்தின் குரல்) என்ற பத்திரிகை வெளியாயிற்று. எந்த விஷயமும் இவருடைய அறி வுக்குப் புறம்பானதில்லை; எக்காரியத்திலும் இவர் உண் மையைக் கூறப் பின் வாங்கியதில்லை; சிறிதும் அச்சமின்றி எல்லா விஷயங்களிலும் தம் அபிப்பிராயத்தைத் தயக்க மின்றித் தெரிவித்து வந்தார். புகழ்பெற்ற ஆசிரியர்களின் நூல்களை விமரிசனம் செய்யவும் இவர் தயங்கியதில்லை. உர்து ஆசிரியரும் கவியுமான காஜா அல்தாப் ஹுஸைன் ஹாலி என்பவர் எழுதிய "ஸர் செய்யத் அஹமத்கானின் வாழ்க்கை" என்ற நூலுக்கு இவர் எழுதிய நுட்பமான விமரிசனம் எல்லாருடைய கவனத்தையும் கவர்ந்தது. ஆனல், அன்றுவரை அவ்விள ஆசிரியரை யாரும் நேரிற் கண்டதில்லை.

இச்சமயத்தில் லாகூரில் ஒரு பெரிய பொதுக் கூட்டத்தில் பேசுமாறு அழைக்கப்பட்டார். இதற்கு முன்னே இவர் அநேக கூட்டங்களிலும் வித்தியா சங்கங் களிலும் சொற்பொழிவாற்றி யிருக்கிருர். ஆனல், அவை களெல்லாம் உள்ளூரில் நடந்த சிறு கூட்டங்கள். எனவே, வெளியூருக்குச் சென்று ஒரு பெருங் கூட்டத்தில் பேசுவதென்பது மௌலானு அபுல்கலாமுக்கு ஒரு புதிய அனுபவமாகவே யிருந்தது.

"அஞ்சுமனே ஹிமாயத்தே இஸ்லாம்" என்பது லாகூரில் உள்ள ஒரு சங்கம். அச்சங்கத்தார் 'லேசானுஸ்சித்க்'கைப் படித்திருந்தார்களேயன்றி, அதன் ஆசிரியர் யார் என்று அறியார்கள். ஆனல் பத்திரிகையைப் பார்த்ததிலிருந்து அதனுடைய கவர்ச்சிக்கு ஆட்பட்டு, அதனுடைய ஆசிரியர், அறிவு, அனுபவம், வயது யாவற்றிலும் முதிர்ந்து சிறந்து விளங்கும் பெரியாராகத்தானிருக்க வேண்டுமென்றெண்ணி, 1904-ல் நடந்த சங்கத்தின் ஆண்டு விழாக் கொண்டாட்டத்தில் வந்து சொற்பொழி

வாற்ற வேண்டுமென்று இவரை அழைத்தார்கள். மௌலானா அபுல்கலாம் அந்த அழைப்பை யேற்றுக் கொண்டார். கூட்டம் பிரும்மாண்டமான கூட்டம். நகரத்திலும் சுற்றுப்புறத்திலுமுள்ள முஸ்லிம் பண்டிதர்கள் அனைவரும் கூட்டத்தில் பிரசன்னமாயிருந்தனர். முன்னே குறிப்பிட்ட உர்து கவியும் ஆசிரியருமான ஹாலி, உர்து வசன ஆசிரியர் நஜீர் அஹமது, ஒப்பற்ற கவி ஷேக் முஹம்மத் இக்பால், இன்னும் பலரும் கூட்டத்திலிருந்தனர். "மதத்திற்கு அடிப்படையான பகுத்தறிவு" (The rational basis of Religion) என்பது பிரசங்கத்தின் விஷயம். இவ்வளவு சிக்கலான விஷயத்தைப்பற்றி, இத்தகைய கல்விமான்கள் நிறைந்த கூட்டத்தில், பதினறு வயது நிரம்பப் பெருத பையனொருவன் பேசத் துணிவான் என்று யாரும் கனவிற்கூடக் கருதியிருக்கமாட்டார்கள். ஆனல், மௌலானா அபுல்கலாம், மேடைமீதேறி அறிமுகப்படுத்தி வைக்கப்பட்டபோது இப்பையன் மௌலானா அபுல்கலாமின் குமாரனு யிருக்கலாமென்று கவி ஹாலி யெண்ணிக் கொண்டிருந்தார். அதனல், தம்முடைய நூலுக்கு நுணுக்கமான விமரிசனம் எழுதிய மௌலானா அபுல்கலாம் இச் சிறுவனே யென்று அவர் உணர்ந்தபோது அவருடைய ஆச்சரியத்துக்கு அளவேயில்லை. மௌலானாவின் பிரசங்கத்தைக் கேட்ட பிறகு கூட்டத்திலிருந்தவர்கள் தங்களைத் தாங்களே நம்பமுடியவில்லை. பதினறு வயதுள்ள சிறுவனெருவன் இவ்வளவு கல்வி ஞானம் பெற்றிருக்க முடியுமென்றும், இத்தகைய சிக்கலான விஷயத்தைப்பற்றி ஆச்சரியகரமான தெளிவோடு, அற்புதமான பாஷையில் அழகாகப் பேசமுடியுமென்றும் அவர்களால் கற்பனை செய்தும் பார்க்க முடியவில்லை. ஒரு கணம், மேடைமீது நடந்தது யாவும் அவர்களுக்கு மாயாஜாலமாகவே தோன்றிற்று. நிதானமேற்பட்டவுடன் அவர்கள் யாவரும் மௌலானாவின் அறிவுக்கு அடிமையானர்கள். வருங்கால முஸ்லிம்-இந்தியாவின் லட்சிய புருஷர் இவரேயென்பதில் சிறிதும் சந்தேகமில்லை யென்ற முடிவுக்கு வந்தார்கள். கவி ஹாலி "இளந்தோள்களின் மேல் முதிர்ந்த அறிவு" (An old

head on young shoulders) என்று சிறப்பித்துக் கூறினர்.

புகழும் பேரும் வாய்ந்த மனிதர்களைச் சந்திப்பதில் மௌலானா அபுல்கலாமுக்கு விருப்பம் அதிகம். இவர் தமது பதினன்காவது வயதிலே பம்பாயிலிருந்த மௌலானா ஷிப்லி என்பவருடன் உர்து இலக்கியங்களைப் பற்றிய தர்க்க மொன்றைக் கடித மூலமாக ஆரம்பித்தார். இதற்கு முன்னதாகவே ஷிப்லி, அபுல்கலாம் அதிகத் துணிவும் விவேகமுமுள்ள பத்திரிகாசிரியர் என்று கேள்விப்பட்டிருந்தார். அத்தகைய ஆசிரியரோடு கடிதப் போக்கு வரவு வைத்துக் கொள்வதை ஷிப்லி ஒரு பெருமையாகக் கருதினர். மேலும், மௌலானா அபுல் கலாம் எழுதியிருந்த சில காரியசித்தியான யோசனைகளால், அவரைப்பற்றி மிக உயர்ந்த அபிப்பிராயங் கொண்டிருந்தார். எல்லாரையும் போல் அவரும், மௌலானா அபுல்கலாம் வயதும் அனுபவமும் நிறைந்தவராக இருப்பார் என்று எண்ணியிருந்தார். ஆனல், மௌலானா அபுல்கலாமை மௌலானா ஷிப்லி நேரிற் கண்டபோதுதான், வயதைப்பற்றிய இரகசியம் வெளியாயிற்று. முதலில் மௌலானா அபுல்கலாம் தம்மை "லைசானுஸ் சித்க்"கின் ஆசிரியர் என்று கூறவில்லை. இவரை அபுல்கலாமின் குமாரரென்றெண்ணி ஷிப்லி மிக்க மரியாதையுடன் வரவேற்று, அபுல்கலாமைப் பெரிதும் புகழ்ந்து பேசினர். ஆனல், இச்சிறுவர் தாமே அபுல்கலாமென்று மிக்க வணக்கத்துடன் தெரிவித்துக் கொண்டபோது, ஷிப்லிக்கு ஆச்சரியத்தால் நாவெழவில்லை.

உலகப் பிரசித்தி பெற்ற பத்திரிகைக்காரர்களின் நன்மதிப்புக்கும், அன்புக்கும் மௌலானா அபுல்கலாம் உரியவரானர். அப்துல் காதர் (இப்போது ஸர்) லாகூரிலிருந்து வெளியிட்ட 'மக்ஹஜான்' என்ற பத்திரிகைக்கு அநேகக் கட்டுரைகளெழுதி அவருடைய பாராட்டுதலைப் பெற்றார். நவாப் மஹசானுல் முல்க் இவரைப்பற்றிக் கூறும்போதெல்லாம் "மூர்த்தி சிறிது, கீர்த்தி பெரிது"

என்றே சொல்லுவார். மௌலானா அபுல்கலாம் தம் கட்டுரைகளை யெல்லாம் "ஆஜாத்" என்ற புனை பெயருடனேயே எழுதிவந்தார். ஆஜாத் என்ற வார்த்தைக்கு 'உரிமையாளன்', 'அடிமைத்தனத்திலிருந்து சுதந்திரம் பெற்றவன்' என்பது பொருள். ஆகையாலேயே, இன்று இவர் மௌலானா அபுல்கலாம் ஆஜாத் என்று அழைக்கப் படுகிறார். உரிமை - வேட்கை கொண்ட இந்திய மக்கள் 'உரிமையாள'னைத் தங்கள் தலைவராகக் கொண்டது பொருத்தமே.

தம்முடைய பதினான்காவது வயதிலேயே மௌலானா அபுல்கலாம் ஆஜாத் உர்துவில் கவிகள் இயற்றுவதில் வெற்றி பெற்றார். அப்போதுதான், இளங் கவிஞர் களின் பாட்டுக்களை வெளியிடுவதற்காகத் தோன்றிய "நேராங்கே ஆலம்" (உலகிலேயே தனித்தது) என்ற சஞ்சிகையையும் வெளியிட்டு வந்தார். தாம் செய்யுளியற்றுவதோடு மாத்திரமன்றி, "முஷைராஸ்" என்ற செய்யுளியற்றும் போட்டியிலும் இவர் பங் கெடுத்துக் கொண்டார். "கார்டன்ரீச்" என்ற இடத்துக் கருகில் இவ்விளங் கவிஞர்கள் கூடி, மனோரம்மியமான காவியப் போரில் ஈடுபடுவார்கள். ஈரடிக்குறட்பா வின் பிற்பாதியிலுள்ள எதுகைச் சொற்களோ, மோனைப் பதங்களோ கூட்டத்தி லறிவிக்கப்படும். அங்குள்ள கவி ஞர்கள் முழுக் குறட்பாவையோ, அல்லது அதனோடு எதுகை, மோனை ஆகியவற்றில் ஒத்துவரக்கூடிய செய் யுளையோ இயற்றவேண்டும். இத்தகைய போட்டிகளி லெல்லாம் மௌலானா அபுல்கலாம் ஆஜாத் பெருமிதம் தரும் வெற்றிகள் பெற்றார். அறிவிலும் வயதிலும் முதிர்ந்த மகாகவி காலிப் (Ghalib) என்பவருடைய மாணவ ராகிய நாதிர்கானுல் இச் சிறுபையன் செய்யுளியற்றுவார் என்பதை நம்பக்கூடவில்லை. இதில் ஏதோ சூதிருக் கிறது; இச்சிறுவருக்குத் தகுதியற்ற புகழைச் சம்பாதித் துக் கொடுக்க வேண்டுமென்ற நோக்கத்தோடு வேறு யாரோ செய்யுளியற்றிக் கொடுக்கிறார்களென்று உறுதி யாக எண்ணினார். ஒரு நாள் மௌலானா அபுல்கலாம்

ஆஜாத் ஒரு புத்தகக்கடையில் புத்தகத்தைப் பார்வை யிட்டுக் கொண்டிருந்தபோது நாதிர்கான் அவ்வழியே போனார். மௌலானாவைக் கண்ட நாதிர்கான், "நீர் குறட்பாமேல் குறட்பாவாக இயற்றிக் குவிக்கிறீராமே? ஆனால் அவை யாவற்றையும் இயற்றுவது நீர்தா மென்பதை நான் எப்படி அறிவது? யார் கண்டது—வேறு யாராவது பாடிக்கொடுத்ததை நீர் உம்முடைய பெயரால் வெளியிட்டுக் கொண்டிருக்கலாம். அது எப்படியாவது போகட்டும். இதோ, நான் சோதனை செய்கிறேன். 'யாத் நஹோ, ஷாத் நஹோ, ஆபாத் நஹோ' என்பது இறுதி யடி. எங்கே உமது குறட்பா? ('நினைவு இல்லாமற் போக, சந்தோஷம் இல்லாமற் போக, மரியாதை யில்லாமற் போக' என்றார்). நம் இளங்கவிஞர் முதலில் சற்றுக் கோபமடைந்தார். ஆனால், தம்முடைய பெருமையை நிலைநாட்ட வேண்டுமென்ற எண்ணம் இவ ரது கோபத்தை மிஞ்சிவிட்டது. இவர் உடனே குறட்பா வுக்குமேல் குறட்பாவாகப் பாடிக் குவித்துவிட்டார். நாதிர்கானுக்கு இன்னது செய்வதென்று தெரியவில்லை. அவருடைய திகைப்புக்கு எல்லையில்லை. தாம் யாரென் பதை மறந்தார்; தாம் எங்கே நிற்கிறோ மென்பதையும் மறந்தார். கடைக்கு முன்னால் "சுப்ஹானல்லா, சுப்ஹா னல்லா" (நான் ஆண்டவனைத் துதிக்கிறேன்) என்று ஆச்சரியக் குறியாக வழங்கப்படும் சொல்லைக் கூறிக் கொண்டு ஆனந்தத்தால் நடனமாட ஆரம்பித்துவிட்டார். தாம் இதுவரை மோசக்காரரெனச் சந்தேகித்திருந்தவர் தாமறிந்த கவிகளநேகரை விட மிகச் சிறந்தவ ரென் பதை மனப்பூர்வமாக ஒப்புக்கொண்டார்.

தலைவன், ஞானி, வேதாந்தி, இவர்களுள் ஒவ்வொருவர் வாழ்க்கையிலும், அந்த நிலையை அடையுமுன், அவரவ ருக்கு "மனநெருக்கடி" (mental crisis) ஏற்படுவது சர்வ சாதாரணம். இதற்குச் சரித்திரத்தில் பல சான்றுகள் காணப்படுகின்றன. மௌலானா அபுல்கலாம் ஆஜாத் இவ் விதிக்கு விலக்காக இருக்கவில்லை. முஸ்லிம் நாடுகளின் சுற் றுப் பிரயாணத்திலிருந்து இவர் இந்தியாவுக்குத் திரும்பிய

போது, இவர் மனத்தில் ஒரு புரட்சி தோன்றியது. கவிகள் இயற்றுவதையும், இலக்கியக் கட்டுரைகள் வரைவதையும் இவர் பொழுதுபோக்காகக் கொண்டிருந்தாரே யன்றி, தம் வாழ்க்கையின் பிரதான லக்ஷ்யமாகக் கொள்ள வில்லை. விசாரம் செய்யும் உணர்ச்சி விழித்திருந்தது; நாம் எங்கே செல்லுகிறோமென்று அடிக்கடி கேட்க ஆரம்பித்தது. அது வங்காளம் பிரிக்கப்பட்ட காலம். இந்தியர் உள்ளத்தில் குமுறலும் கொதிப்பும் தாண்டவ மாடின. எங்கு நோக்கினும் அதிகாரிகளுக்கு அடங்க மறுக்கும் புரட்சியுணர்ச்சியே நர்த்தனமாடிற்று. இளமை ததும்பி நின்ற ஆஜாதின் உள்ளம் இப்புரட்சியில் பங் கெடுத்துக் கொண்டாலொழிய நிம்மதியடையாது போல் தோன்றிற்று. அபுல்கலாம் ஆஜாத் பல பயங்கர இயக்க வாதிகளைச் சந்தித்துப் பேசினார். இது சர்க்காருக்குச் சந்தேகத்தை யுண்டுபண்ணிற்று. ஸி. ஐ. டி. இலாகாவின் பார்வை ஆஜாதின்மேல் பதிந்தது.

ஆனால், இவர் மனத்தில் மேலோங்கியிருந்த எண்ணம் இஸ்லாத்தின் எதிர்காலமும் முஸ்லிம்களின் நிலையுமே யாகும். ஸர் செய்யத் அஹமத்கானின் பேச்சும் எழுத்தும் முதலில் இவர்மனத்தில் சமூகத்துக்குச் சேவை செய்ய வேண்டுமென்ற ஆசையையும், மனப்போக்கை விசாலப் படுத்திக்கொள்ள வேண்டுமென்ற பேரவாவையும், அப் போது நிலவிநின்ற கருத்துக்களைக் கற்றறிந்து அவற்றைப் பற்றிய தம் அபிப்பிராயங்களை உருவகப்படுத்த வேண்டிய தன் அவசியத்தையும் உறுதியாகப் பதிப்பித்தன. ஏற் கெனவே, இவர் தம் பெற்றோரிடமிருந்து ஒப்பற்ற அறிவுச் செல்வத்தையும் ஆத்மீகச் சொத்தையும் பெற் றிருந்தார். ஆனால், இவருடைய ஆத்ம தாகத்தைத் தணிப் பதற்கு அவை போதுமா? பழைய வைதிகம் மிகக் குறுக லாகத் தோன்றிற்று; ஆண்டவன்மேலுள்ள நம்பிக் கைக்கும் அங்கீகரிக்கப்பட்ட சித்தாந்தங்களுக்குங்கூட ஒரு அதிர்ச்சி ஏற்பட்டது. எவ்வளவுக்கெவ்வளவு அதிக மாகக் கேட்டாரோ, படித்தாரோ, அவ்வளவுக்கவ்வளவு சந்தேகங்களும் எழ ஆரம்பித்தன, தாம் படித்த, நம்பிய

எவ்லாவற்றிலுமே சந்தேகம் தோன்றிற்று. பழைய நிதானம் தூங்கப் போய்விட்டது. அலைகடலில் நங்கூரமற்ற கப்பலைப்போல, அவர்மனம் சந்தேகச் சுழலில் அகப்பட்டுத் தத்தளிக்க ஆரம்பித்தது. மறுபடியும் குர்-ஆனை யெடுத்துப் படிக்க ஆரம்பித்தார், ஒவ்வொரு வாக்கியத்தையும் கூர்மையாக ஆராய ஆரம்பித்தார். துடிப்பற்ற சிந்தனையின் காரணமாக மறுபடியும் நம்பிக்கை உதயமாயிற்று. ஒருகணம் தம்முயிரை மாய்த்துக்கொள்ள வேண்டுமென்று அவரைப் பிடித்துக்கொண்டிருந்த எண்ணம், ஓர் அவலக்ஷணமான கனவைப்போல மறுகணத்தில் மறைந்தது. சேவையும் லக்ஷ்யமும் நிறைந்த புதிய வாழ்க்கையின் சித்திரம் இவர் மனக்கண் முன்னே தோன்றிற்று. பழைய வைதிகம் பறந்துவிட்டது. எனினும் அது வெற்றிடமாக்கி விட்டுப்போகவில்லை. மனத்தில் தோன்றிய ஐயந்திரிபுகளோடு போரிட்டதின் காரணமாகப் புதிய உயிரும் நம்பிக்கையும் தோன்றின. சீர்திருத்தம், புரட்சி ஆகியவற்றின் ஒரு தீவிர உணர்ச்சி பிறந்தது. தந்தையின் மூலமும், முன்னோர்களின் மூலமும் கற்ற வைதிக மதக் கல்வியின் திடமான அஸ்திவாரத்தின்மேல் நவீனக் கருத்துக்களின் அழகான மாளிகையை அற்புதமாகக் கட்டி முடிக்கும் ஆற்றலும் திறமையும் அந்தப் புத்துணர்ச்சியின் காரணமாகப் பிறந்தன. இம் மனப்புரட்சிக்குப் பிறகுதான் மௌலானா அபுல்கலாம் ஆஜாத் மனித சேவையில் பூரணமாக ஈடுபட்டார். இதுவரையில் இவர் தம் அறிவுத் தாகத்தைத் தணிக்க முயன்று கொண்டிருந்தார். இப்போது இவர் மனிதரின் சுதந்திர வேட்கையைத் தணிப்பதற்காக வெளிக்கிளம்பி விட்டார்.

## 4. அல் - ஹிலாலின் ஆட்சி

**1857**-ல் ஏற்பட்ட 'சிப்பாய்க் கலக' மென்னும் இந்தியாவின் முதல் சுதந்திரயுத்தம் தோல்வியுற்ற பிறகு, சில வருஷங்களுக்கு மக்களின் உள்ளத்தில் ஏமாற்றமே மிகுந்திருந்தது. அவர்களுக்குச் சுதந்திர

வேட்கையும், தங்கள் நாட்டு ஆட்சியில் தாங்கள் பங்கு பெறவேண்டுமென்ற அவாவும் சிறிதுமே குறையவில்லை. இவைகளின் பலனாக 1885-ல் இந்திய தேசியக் காங்கிரஸ் முதல் முதலாக நிறுவப்பட்டது. ஆனால், ஆரம்பத்தில் முஸ்லிம்கள் ஏராளமாகக் காங்கிரஸில் சேரவில்லை. ஸர் செய்யத் அஹமத்கான் அறியாமையிலும் மௌடீகத்திலும் மூழ்கிக் கிடந்த முஸ்லிம்களைத் தட்டியெழுப்ப அரும்பாடுபட்டார். அவருடைய மின்சாரம்போன்ற சக்தியாலும், வியக்கத்தக்க நாவன்மையாலும் முஸ்லிம் சமூகம் விழிப்படைந்தது. ஆங்கிலக் கல்வியின் அவசியத்தையும், நவீனக் கலைகளைக் கற்றுப் புதிய நாகரிகத்தை அனுஷ்டிப்பதிலுள்ள நன்மைகளையும் முஸ்லிம் இளைஞர்களின் உள்ளங்களில் நன்றாகப் பதியுமாறு எடுத்துக் கூறினார். மேலை நாட்டுக் கல்வியில் அவருக்கிருந்த மோகம் ஆங்கில ஆட்சியை அப்படியே ஆதரிக்குமாறு செய்தது. எனவே, முஸ்லிம்கள் ஒருவாறு மேலைநாட்டுக் கல்வியைக் கற்றுக்கொண்டாலும், அவர்கள் பெரும்பாலும் அரசியலைவிட்டு விலகியே நின்றார்கள். ஆங்கில ஆட்சியை ஆதரிப்பதே தங்கள் கடமையென்று கருதினார்கள். இவ்வபிப்பிராயங்களுக்கெல்லாம் பிரதிநிதியாகத் தான் அலிகார் இயக்கம் ஏற்பட்டது.

யார் எக்கேடு கெட்டாலும், தங்கள் காரியத்திலேயே கண்ணாயிருந்த ஆங்கிலேய அதிகாரவர்க்கத்தார், தினந்தினம் வளரும் தேசீய காங்கிரஸின் செல்வாக்கைக் கண்டு பயந்தார்கள். தங்களுடைய ஆட்சியை ஸ்திரப்படுத்துவதற்கு, பிரித்தாளும் முறையே சிறந்தது என்று கண்டார்கள். எனவே, பிரிட்டிஷ் ஆட்சியை ஆதரித்துவந்த ஸர் செய்யத் அஹமத்கானையும், அவருடைய அலிகார் இயக்கத்தையும் தங்கள் எண்ணம் ஈடேறுவதற்கு ஆயுதமாக உபயோகித்துக்கொள்ள ஸர்க்கார் விரும்பினர். இதன் பலனாகத் தான் 1905-ல் முஸ்லிம் லீக் ஸ்தாபிக்கப்பட்டது. முஸ்லிம் லீகின் பிரதான நோக்கம் காங்கிரஸை எதிர்ப்பதும், ஆங்கில ஆட்சியைப் பலமாக ஆதரிப்பதுமென்று பகிரங்க

மாக அறிவிக்கப்பட்டது. பிரிட்டிஷ் சர்க்காருக்கு ராஜ விசுவாசம் தெரிவிப்பதே முஸ்லிம் லீகின் லக்ஷ்யங்களில் முதற் பிரிவாக இருந்தது. எனவே, ஹிந்துக்கள் ஒரு புறத்தில் தேசிய வெள்ளத்தில் மூழ்கி, நாட்டுக்காகத் தங்கள் உயிரைத் திருணமாக மதித்து, அந்நிய ஆட்சியோடு நடத்தும் போரில் சுதந்திர வீரர்களாக விளங்கினார்கள். மற்றொரு புறத்தில், இந்திய முஸ்லிம்கள் ஆண்டுதோறும் தவருமல் ஆங்கில ஆட்சிக்கு ராஜவிசுவாசம் தெரிவித்து விட்டு, அந்நிய ஆட்சியை இந்நாட்டில் நிரந்தரமாக நிலைநாட்டுவதற்கு உடந்தையாக இருந்தார்கள். முஸ்லிம் லீகை அமைக்கும் விஷயத்தில் பிரதானப் பங்கெடுத்துக் கொண்ட அலிகார்க் கலாசாலையின் காரிய தரிசியான நவாப் முஷ்தக் ஹுஸைன், தம்முடைய முதற் பிரசங்கத்திலேயே, "இஸ்லாத்தின் வாள் பிரிட்டிஷ் ஆட்சியின் சேவைக்கு என்றும் காத்திருக்கிறது" என்று கூறினர்.

1908-ல் மௌலானா அபுல்கலாம் ஆஜாத் இந்தியாவின் பொது வாழ்வில் ஈடுபட முன்வந்தபோது இது தான் தேசத்திலிருந்த நிலைமை. இவர் தீவிரமாகச் சிந்திக்க ஆரம்பித்தார். முஸ்லிம்களிடையே ஏதோ அடிப்படையிலேயே தவறு இருந்த தென்பதில் இவருக்குக் கொஞ்சங்கூடச் சந்தேகமில்லை. ஸர் ஸையத் அஹமத்கான் தம்முடைய மகத்தான சேவைக்கிடையே ஒரு மகத்தான தவற்றையும் செய்துவிட்டாரென்று மௌலானா உணர்ந்தார். அஞ்ஞானத்தையும், அர்த்தமற்ற மதவெறியையும் எதிர்த்து வெற்றிகரமாக ஸர் ஸையத் அஹமத் போரிட்டதுபோல், அரசியல்-பிற்போக்குச் சக்திகளையும் குறுகிய வகுப்புவாதத்தையும் எதிர்த்து அறப் போர் புரிய வேண்டியது தமது கடமையென்பதில் மௌலானாவுக்குச் சிறிதும் சந்தேகமில்லை. இரண்டு வருஷங்கள் தீவிரமாகச் சிந்தித்துக் கொண்டிருந்த மௌலானா கடைசியாக ஒரு முடிவுக்கு வந்தார். அந்த முடிவின் பலனகப் பிறந்தது தான் அல்-ஹிலால்.

"அல்-ஹிலால்" (இளம்பிறை) என்பது மௌலானா அபுல்கலாம் ஆஜாதின் உர்து வாரப் பத்திரிகை. அப் பத்திரிகையின் முதலிதழ் 1912-ம் ஆண்டு ஜூன் மாதம் முதல் தேதி கல்கத்தாவில் வெளியாயிற்று. இந்தியப் பத்திரிகை யுலகிலேயே அதற்குமுன் நடந்திராத ஒரு புரட்சியை அல்-ஹிலால் உண்டுபண்ணிற்று. அதன் இரண்டாவது இதழிலேயே மௌலானா தம்முடைய நோக்கத்தை ஆணித்தரமாகவும் தெளிவாகவும் எடுத்துக் கூறிவிட்டார். தேசிய வெள்ளத்திலிருந்து முஸ்லிம்களை ஒதுக்கி வைத்துக்கொண்டிருந்த பிற்போக்குச் சக்திகளைச் சிதற அடிப்பதே இவர் பத்திரிகையின் நோக்கம். இந்திய முஸ்லிம்கள் உலக மனித வர்க்கத்தினரின் ஒரு பகுதியினர்; அடிமைகளின் சுதந்திரத்துக்காக அரசியற் போர் நடத்திக் கொண்டிருக்கும் ஹிந்துக்களுடன் தோளோடு தோள் சேர்ந்து தெய்வப்பணி ஆற்றுமாறு முஸ்லிம்களைக் கூப்பிடுவதே அல்-ஹிலாலின் அழைப்புக் குரல். அறிவுக்கும் நியாயத்துக்கும் முரணாகக் காணப் படும் எதையும் எங்கேயும் எதிர்ப்பதற்காகத் தாம் கங்கணங் கட்டிக்கொண்டிருப்பதை மௌலானா உறுதியுடன் வெளியிட்டார். தேசிய வளர்ச்சியின் வேகத்திலிருந்து படுதா இட்டுக் காக்கப்பட்டிருந்த முஸ்லிம்களுடைய மனத்தில், இப் பத்திரிகையின் குரல் விசித்திர உணர்ச்சியை உண்டுபண்ணிற்று.

அழகிய உர்துவில், பொறுக்கி யெடுக்கப்பட்ட சொற்களைக் கொண்டு, அற்புதமான கற்பனைகளோடு மௌலானாவால் எழுதப்பட்ட கட்டுரைகள் ஓர் இலக்கிய விருந்தாகவே யிருந்தன. இவருடைய சாதாரண வசனமும், செய்யுளின் சிறப்புடன் விளங்கிற்று. இவருடைய உர்து நடையில், ஒரு பிரத்தியேகமான வசீகரம், தனிப்பட்ட கம்பீரம், துடிப்புச் சக்தி, புத்துயிர் வேகம், தட்டி யெழுப்பும் அதிர்ச்சி யாவும் ஒருங்கே குடிகொண்டிருந்தன. படித்த பண்டிதர்களும் சரி, நூலறிவு அற்றவர்களும் சரி, அல்-ஹிலாலின் கவர்ச்சிக்கு ஆளானார்கள். "காம்ரேட்" (Comrade) என்ற வாரப் பத்திரிகையை

நடத்திக் கொண்டிருந்த மௌலானா முஹம்மத் அலி அல்-ஹிலாலைப்பற்றித் தம் பத்திரிகையில் கீழ்க் கண்டவாறு எழுதினார்: "இவ்வாரச் சஞ்சிகையை வெளிக் கொணர்வதற்கு முன்னே, அதன் திறமை வாய்ந்த ஆசிரியரான மௌலானா அபுல்கலாம் ஆஜாத் அனுபவிக்க வேண்டியிருந்த ஏராளமான கஷ்டத்தையும் பணச் செலவையும் நாம் நன்றாக உணரமுடியும். தம்முடைய பகுதியில் சித்திர விளக்கத்தை ஒரு நிரந்தரமான அம்சமாகச் சேர்த்துக்கொண்ட முறையில் அது பத்திரிகை யுலகுக்கே ஒரு புதிய வழியைக் காண்பிக்கிறது. தேசத்திலுள்ள உர்துப் பத்திரிகைகளைக் குரங்குப் பிடியாகப் பிடித்துக் கொண்டிருந்த வழக்கொழிந்த சில முறைகளுக்குப் பதிலாக, புதிய துருக்கி முறையை அனுஷ்டித்திருப்பது—இது ஒரு புதிய சீர்திருத்தமல்லாவிடினும்—வரவேற்கத்தக்கது. பொதுவாக, முஸ்லிம் உலகிலும், குறிப்பாகத் துருக்கி, பாரசீகம், மொராக்கோ முதலிய நாடுகளிலும் காணப்படும் நிலைமையை எடுத்துக் கூறுவதோடு, இலக்கிய விஞ்ஞான விவாதங்களுக்கும் முஸ்லிம்களின் கல்வி சம்பந்தமான பிரச்னைகளுக்கும் இதில் நிரந்தரமான இடமளிக்கப்படும்." இப்பத்திரிகையின் அரசியல் கொள்கையைப் பற்றி 'காம்ரேட்'' எதுவும் சொல்லவில்லை. மௌலானா அபுல்கலாம் ஆஜாதின் காதுகளுக்கு நாராசமாயிருந்த ராஜ விசுவாசமென்ற வார்த்தை அக்காலத்தில் மௌலானா முஹம்மத் அலிக்கு 'கலிமா'வாக (முஸ்லிம்களின் அடிப்படையான வேதமந்திரமாக) இருந்தபடியால், அவர் இதைப்பற்றி எதுவும் கூறாததில் ஆச்சரியமில்லை.

அல்-ஹிலால் தோன்றிய சில வாரங்களுக்குள்ளேயே அதன் செல்வாக்கு தேசத்தில் நிலைபெற்றுவிட்டது. ஆறு மாதங்களில், பத்திரிகையின் பிரசுரம் பதினோராயிரத்துக்கு வந்துவிட்டது. அதன் சந்தாத் தொகை ரூ. 12 என்பதையும், அதை வாங்கிப் படித்தவர்களில் பெரும்பாலோர் முஸ்லிம்கள் என்பதையும் ஞாபகத்தில் வைத்துக்கொண்டால், 11 ஆயிரம் என்பது எவ்வளவு

பெரிய அளவு என்பது விளங்கும். அது, தேசத்தில் உண்டுபண்ணிய கிளர்ச்சிக்கு, அப்பத்திரிகைக்கு விரோத மாகக் கிளப்புப்பட்ட இயக்கங்களே போதிய அத்தாட்சி யாகும். சாஹிப் ஜாதா அப்தாப் அஹ்மத் கானும் வேறு சிலரும் அல்-ஹிலாலுக்கு விரோதமாகப் பிரசாரம் செய்ய ஆரம்பித்து, கல்கத்தாவில் ஓரளவு வெற்றியும் பெற்றார்கள். இதற்குக் காரணம், மௌலானாவின் அற்புதமான உர்துவை விளங்கிக்கொள்ளக் கூடியவர்கள் கல்கத்தாவில் மிகச் சொற்பமே. ஐக்கிய மாகாணத்தில் அதன் செல்வாக்கு நாள்தோறும் வளர்ந்து கொண்டே வந்தது. அங்கங்கே வகுப்புக்கள் அமைக்கப் பட்டன; ஒருவர் அல்-ஹிலாலை வாசிக்க, நூற்றுக்கணக் கானவர்கள் அமர்ந்திருந்து கேட்டுவந்தனர்.

முதலில் ஏற்பட்ட பிரமை மாறியதும், முஸ்லிம்கள் அல்-ஹிலாலின் வாதங்களின் வேகத்தை உணர ஆரம்பித் தார்கள். உண்மையான மத அறிவும், புத்தி தீக்ஷண்யமு முடைய முஸ்லிம்களால் மௌலானாவின் வாதங்களை ஒப்புக் கொள்ளாமலிருக்க முடியவில்லை. மௌலானா தம்முடைய ஒவ்வொரு கருத்தையும் குர்-ஆனின் ஆதா ரத்தின் மேலும் முஹம்மத் நபியின் வாழ்க்கையின் அடிப்படையின் மேலுமே உறுதியாக நிலைநிறுத்தி ஆணித் தரமாக வாதித்து வந்தார். எனவே, முஸ்லிம்கள் கொஞ்சங் கொஞ்சமாக மௌலானா பக்கம் திரும்பி இவ ருடைய கருத்துக்களை ஏற்க ஆரம்பித்தார்கள். ஆனால், நீண்டகாலம் வைதிகத்திலும், மௌடீகத்திலும் மூழ்கி யிருந்தவர்களால் ஒரே மூச்சில் கரையேறி மௌலானா வின் முற்போக்கான கருத்துக்களை உடனே ஒப்புக் கொள்ள முடியவில்லை. என்றாலும் மௌலானா தம் முயற்சி யையும் உற்சாகத்தையும் தளரவிடவில்லை. இவருடைய பேனா தன் பூரணத் திறமையையும் காட்ட ஆரம்பித்தது. மௌலானாவின் தைரியமும் உறுதியும் எல்லா எதிர்ப்புக் களையும் சிதற அடித்துச் சந்தேகங் கொண்டவர்களை யெல்லாம் நம்பிக்கையில் மூழ்கியவர்களாக ஆக்கி விட்டன.

மௌலானா மதம், சமூகம், அரசியல் ஆகிய எல்லாப் பிரச்னைகளையுமே சாங்கோபாங்கமாகத் தம் பத்திரிகையில் விவாதித்து வந்தார். 1913-ல் 'பசுபலி'யின் காரணமாக, வழக்கம்போல், அயோத்யாவில் கலகங்கள் தோன்றின. பசுக்களையே பலிகொடுக்க வேண்டுமென்று முஸ்லிம்கள் வீண் பிடிவாதம் பிடிப்பது வகுப்பு - ஒற்றுமைக்கு உகந்ததாக இல்லையென்று மௌலானா தைரியமாகக் கூறினார். முஸ்லிம்களுக்கு இக் கூற்று மிகப் புதுமையாகத் தோன்றிற்று. மௌலானாவின் அத்யந்த நண்பரான ஹகீம் அஜ்மல்கான் கூட மௌலானாவோடு மாறுபடவே அது சம்பந்தமாக ஒரு தகராறு கிளம்பியது. 1920-ல் தான் ஹகீம் அஜ்மல்கான் தமது தவறுதலை யுணர்ந்து மௌலானாவிடம் மன்னிப்புக் கேட்டுக்கொண்டு, அன்று முதல் மௌலானாவைப் போலவே இது விஷயத்தில் திடமான அபிப்பிராய முடையவரானார். மௌலானா முஹம்மத் அலியும் மௌலானா அபுல் கலாம் ஆஜாதைப் பலமாகத் தாக்கிக்கொண்டு வந்தார். முஹம்மத் அலி ஆஜாதின் பக்கம் சேர்வதற்கு நீண்டநாள் செல்லவில்லை. அல்-ஹிலாலின் செல்வாக்கு இந்தியாவில் மட்டுமல்லாமல் வெளிநாடுகளிலும் பெரிதும் பரவியிருந்தது.

அல்-ஹிலால் தோன்றிய ஆறுமாதங்களுக்கெல்லாம், படித்த முஸ்லிம்கள் அனைவரும் அரசியல் விழிப்பைப் பெற்றார்கள். அரசியலில் ஈடுபட்டுத் தேசிய இயக்கத்தில் பூரணப் பங்கெடுத்துக் கொள்வதற்குத் தடையாக நின்ற அலிகார் இயக்கமும் முஸ்லிம் லீகும் செயலற்றுப் போயின. ஆஜாதின் பேனாவிலிருந்து புறப்படும் அரசியலுணர்ச்சி - வெள்ளப் பெருக்கை இவ்விரு பிற்போக்கு-இயக்கங்களாலும் தடுத்து நிறுத்த முடியவில்லை. இவ்விளை ஆசிரியரின் கூப்பாட்டுக்கு முஸ்லிம் இளைஞர்களின் உள்ளங்கள் பெருமிதத்தோடு பதிலளித்தன. அச்சமயத்தில் ஜஸ்டிஸ் பத்ருத்தீன் தையாப்ஜியும், ரஹிமத்துல்லா ஸயானியும் காங்கிரஸோடு இருந்து அதன் நடவடிக்கைகளில் மனப்பூர்வமாகக் கலந்துகொண்டனர். ஷேக் ரிஜா ஹுஸைன் லக்ஷ்மணபுரி ஸுன்னி முஸ்லிம்களின் தலைவ

ரிடமிருந்து முஸ்லிம்கள் காங்கிரஸில் சேரவேண்டு மென்று ஒரு பத்வா (மார்க்கத் தீர்ப்பு) வாங்கி வெளியிட்டார். இங்கிலேயில் மௌலானு அபுல்கலாம் ஆஜாதின் செல்வாக்கின் காரணமாக, முஸ்லிம்களிடையே ஏற்பட்ட மனமாறுதலேத் திருப்திசெய்ய வேண்டியதின் அவசியத்தை முஸ்லிம் லீக் உணர்ந்தது. அப்போது அதன் காரியதரிசியாக இருந்தவர் செய்யத் வாஜிர் ஹாஸன் (பின்னர் ஜஸ்டிஸ் ஸர் வாஜிர் ஹாஸன்). ஆரம்பத்தில் அவர் அல்-ஹிலாலே யெதிர்த்தபோதிலும், அதன் வேகத்தைத் தடுக்க முடியவில்லே. எனவே, முஸ்லிம் லீகின் லக்ஷ்யத்தைத் தேவைக் குகந்தவாறு மாற்றியமைக்கும் நோக்கத்துடன் அவர் இந்தியா முழுதும் சுற்றுப் பிரயாணம் செய்தார். அவர் கல்கத்தாவுக்குப் போய் மௌலானுவைச் சந்தித்து நீண்ட சம்பாஷணைகள் நடத்தினர். பின்னர், 1913 ஏப்ரலில் முஸ்லிம் லீகின் வருஷாந்தரக் கூட்டம் லக்ஷ்மணபுரியில் நடந்தபோது முஸ்லிம் லீக் கொண்ட 'பிரிட்டிஷ் சர்க்காருக்கு ராஜ விசுவாசமும், முஸ்லிம்களின் உரிமைகளே யடைதலும்' என்ற லக்ஷயம் 'பொருத்தமான சுய ஆட்சியை இந்தியாவுக்குப் பெறுதல்' என்பதாக மாறியது. முதல் முதலாக லீகுக்கு ஒரு திட்டமான அரசியல் - லக்ஷ்யம் ஏற்பட்டது.

இவைகளுக்கிடையே, உலக யுத்தம் மூண்டுவிட்டது. யுத்த ஆரம்பத்திலேயே உலக மக்களின் சுயேச்சையே தங்கள் யுத்த லக்ஷ்யமென பிரிட்டிஷ் சர்க்கார் அறிவித்தார்கள். மேலும், துருக்கி சுல்தானுடைய உடைமைகளே அபகரிக்கும் உத்தேசம் தங்களுக்கில்லே யென இந்திய முஸ்லிம்களுக்கு உறுதியளித்தார்கள். இந்தியர்கள் இப் பிரகடனங்களே அப்படியே நம்பினர்கள். இந்திய வீரர்கள் ஐரோப்பா, மெஸபொடேமியா, பாலஸ்தீன் ஆகிய யுத்த ரங்கங்களில் தீவிரமாகப் போரிட்டார்கள். மௌலானு மிகக் கூர்மையாகச் சம்பவங்களேக் கவனித்து வந்தார். எப்போதாயினும் சர்க்கார் தாங்கள் பகிரங்கமாகக் கூறிய கொள்கைகளுக்கு விரோதமாகப் போவார்

களானல், அவர்களைத் தம் பத்திரிகையின் மூலம் பலமாகக் கண்டித்து வந்தார். அப்போது, அல்-ஹிலாலின் செல்வாக்கு அதன் உச்ச நிலையை யடைந்திருந்தது. வாரந் தோறும் 25,000 பிரதிகள் விற்பனையாயின. அதன் செல்வாக்குக்கு இரண்டு உதாரணங்களே போதும். மிஸ்டர் பில்பி (Mr, Philby) என்பவர் மூல்தானிலிருந்த ஒரு ஐ. ஸி. எஸ். உத்தியோகஸ்தர். ஐ. ஸி. எஸ். உத்தியோகஸ்தர்களுக்குப் பரீக்ஷை நடத்தும் போர்டின் அங்கத்தினராக அவர் கல்கத்தா போக நேர்ந்தது. அல்-ஹிலாலின் நடையினல் வசீகரிக்கப்பட்ட அவர், மௌலானவிடம் தம் மரியாதைகளைச் செலுத்துவதற்காகவும், இவருடைய பத்திரிகையின் சிறப்புக்காக இவரைப் பராட்டுவதற்காகவும் ஒரு பேட்டி கேட்டு இவரை நேரிற் கண்டு பேசினர். மௌலானவோடு அவருக்கு ஏற்பட்ட தொடர்பினலேயே, அவர் அரபி பாஷையைக் கற்க ஆரம்பித்து, பின்னர் மெசபொடேமியாவுக்குப் போனபிறகு, "அரேபியாவின் ஹிருதயம்" (Heart of Arabia) என்ற நூலை யெழுதினர்.

வங்காளத்தின் புரட்சிக்காரர்களோடு மௌலானவுக்கிருந்த பழைய தொடர்பு முன்னேயே அதிகாரிகளின் கவனத்தைக் கவர்ந்திருந்தது. யுத்தம் ஆரம்பித்த பிறகு மௌலானவின் மேலிருந்த கவனம் அதிகமாயிற்று. ஸி. ஐ. டி. இலாகாவின் தலைவர் ஸர் சார்லஸ் க்லீவ்லன்ட் சமயம் பார்த்திருந்தார். அப்போது "பயோனீர்" (Pioneer) பத்திரிகை அலகபாத்தில் நடந்துவந்தது. அதுவே பொதுவாகச் சர்க்கார் அபிப்பிராயங்களைப் பிரதிபலித்து வந்தது. ஐ. மா. கவர்னர் ஸர் ஜேம்ஸ் மெஸ்டனின் தூண்டுதலின்மேல் அப்பத்திரிகை "கல்கத்தாவில் ஜெர்மானிய ஆதரிப்பு" (Pro-Germanism in Calcutta) என்ற கட்டுரையை யெழுதி மௌலான அபுல்கலாம் ஆஜாத் ஜெர்மனியை ஆதரிப்பவரென்று குற்றம் சாட்டிற்று. அது ஒரு நீண்ட கட்டுரை. அதனல் அல்-ஹிலாலின் செல்வாக்கின் அளவும் நன்கு வெளியாயிற்று. அக்கட்டுரை வருமாறு:—

"அல்-ஹிலால் என்பது கல்கத்தாவிலிருந்து உர்துவில் வெளியாகும் ஒரு சித்திர வாரப்பத்திரிகை. இதன் ஆசிரியர் அபுல்கலாம் என்னும் ஒரு டில்லி முஸ்லிம். இம் மாகாணத்திலும், இந்தியாவின் இதர பாகங்களிலும் இது பெரிதும் பரவியிருக்கிறது. யுத்த ஆரம்பத்திலிருந்து இதனுடைய போக்கு ஜெர்மனியை ஆதரிப்பதாகவே இருக்கிறது. அப்பத்திரிகையைப் படிப்பவர்கள் யாவர்க்கும் இத்தகைய எழுத்தை அடக்காமல் சர்க்கார் பரவ விட்டுக்கொண்டிருப்பது ஆச்சரிய நிகழ்ச்சியாகத் தோன்றும். அது உர்துவில் வெளியாவதால், கல்கத்தாவில் அதிகமான கவனத்தை ஈர்க்கவில்லை யென்பது ஒருகால் இதற்குக் காரணமாக இருக்கலாம்; கல்கத்தாவைத் தம் பிரசுர ஸ்தலமாக இந்த ஆசிரியர் பொறுக்கியதற்கும் இதுவே காரண மென்பதில் சிறிதும் சந்தேகமிருக்க முடியாது. மற்றொரு காரணம் அதன் நடை ஜாடையானதாகவும், மறைமுகமான ஏளனம், பரிகாசம், பழிச்சொல் நிறைந்ததாகவும் இருப்பதே; இவைகள் ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கப்படும்போது, ஒன்று இவை மறைந்து விடுகின்றன; அல்லது தங்கள் வேகத்தை யிழந்துவிடுகின்றன. பெரும்பாலான ஐரோப்பிய உத்தியோகஸ்தர்கள் இப்பத்திரிகையை உர்துவில் படிப்பதும் சாத்தியமில்லை."

மேற்கூறிய தம் கண்டனத்துக்கு ஆதாரமாக "பயோனீர்" மௌலானாவின் கட்டுரைகளிலிருந்து மேற்கோள்கள் காட்டிற்று. அக்கட்டுரைகளில் பிரிட்டிஷாரின் தோல்விக்கான காரணங்களை எடுத்துக்காட்டி, அவைகளில் தவிர்க்கக்கூடியனவற்றைத் தவிர்க்கத் தவறியதாக பிரிட்டிஷ் சர்க்காரை நிர்த்தாக்ஷண்யமாகக் கண்டிக்கப்பட்டிருந்தது. ஜெர்மானியரின் ராணுவத் தந்திரங்களையும் முஸ்திபுகளையும் பிரிட்டிஷாரின் முறைகளோடு ஒப்பிட்டு, பிரிட்டிஷார் தங்களுடைய முறைகளில் தீவிர மாறுபாடுகளைச் செய்தாலொழிய மக்கள் மனத்தில் நம்பிக்கை யேற்படாதென்றும் கூறியிருந்தது. ஆசிரியர் தம்முடைய இக் கருத்துக்களை யெல்லாம் யுத்தத்தில் நடந்த சில சம்பவங்களை விவரமாகக் கூறித் தெளிவு

படுத்தினர். இத்தகைய கட்டுரைகளின் பகுதிகளைப் பிர சுரித்துவிட்டு, "பயோனீர்" முடிவாகக் கூறியதாவது :— "இத்தகைய வாக்கியங்களை எழுதிய ஆசிரியரின் தெளி வான நோக்கம் 'ஜெர்மனி தோற்கடிக்கப்பட முடியாதது ; பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் சக்தியால் அதன் தாக்கு தல்களை எதிர்த்து எதுவும் செய்ய முடியாது' என்று தம் முடைய மதத்தைச் சேர்ந்தவர்களை நம்பச் செய்வதே. இத்தகைய சந்தர்ப்பத்தில், பிரிட்டிஷ் ஸோல்ஜர்களுக்கும் மாலுமிகளுக்கும் விரோதமாக, இப்படிப்பட்ட கட்டுப் பாடற்ற பழிச் சொற்களை எழுத ஒரு பிரிட்டிஷ் பிர ஜையை அனுமதிக்கும் ஒரு சர்க்கார், ஜெர்மனிக்குக் கொஞ் சமும் அமையாத தாராள குணத்துக்கு உரிமை கொண் டாட முடியுமென்று நாம் தாராளமாகச் சொல்லலாம்."

உண்மை எப்படியிருந்த போதிலும், ஒரு சக்தி வாய்ந்த பேனாவை மௌலானா கையில் வைத்திருந்தா ரென்பதில் சந்தேகமில்லை. இவருடைய கட்டுரையில் விஷயங்களும் விவரங்களும் பொதிந்து கிடந்தன. அத்தகைய விவரங்கள் பெரும்பாலான ஆங்கில சஞ்சிகை களில் கூட வெளியானதில்லை. அல்-ஹிலாலின் செல் வாக்கைக் கண்ட சர்க்கார் மௌலானா மீது நடவடிக்கை யெடுக்கத் தயங்கினர்கள். கடைசியாக, பார்லிமெண்டில் இந்தியா மந்திரிக்குச் சரமாரியான கேள்விகள் வந்து குவிந்தன. எனவே, சர்க்கார் நடவடிக்கை யெடுக்க உறுதி கொண்டது. அல்-ஹிலாலின் ஜாமீன் தொகை பறிமுதல் செய்யப்பட்டது. பதினயிர ரூபாய்க்குச் சர்க்கார் புதிய ஜாமீன் கேட்டார்கள். எனவே, அல்-ஹிலால் பிரசுரம் நின்றுவிட்டது. ஆனல், ஆஜாத் வாளாவிருக்கவில்லை. "அல்பலாக்" (பிரசாரகன்) என்ற புதிய பத்திரிகையைத் தொடங்கினர். பெயர் புதிதேயன்றி, அதே உணர்ச்சியும், அதே வேகமும் அப்படியே காணப்பட்டன. இனியும் சர்க்காரால் சும்மா இருக்க முடியவில்லை. கடுமையான நடவடிக்கையை ஆரம்பித்தார்கள் ; ஐக்கிய மாகாணம், டில்லி, பஞ்சாப், மத்திய மாகாணம், சென்னை ஆகிய மாகாணங்களுக்குள் இவர் நுழையக் கூடாதென்று தடை

விதித்தார்கள். 1915-ம் ஆண்டு ஏப்ரல் மாதம் 7-ம் தேதியன்று, தம் சொந்த மாகாணமாகிய வங்காளத்தை விட்டே இவர் துரத்தப்பட்டார். இவர் அச்சமயத்தில் தடையுத்தரவை மீறிச் சிறை செல்ல விரும்பவில்லை. வெளியேயிருந்து இன்னும் மக்களின் உணர்ச்சியைச் செப்பனிட விரும்பினார். ஆகையால், பீஹார் மாகாணத்திலுள்ள ராஞ்சியில் போய்த் தங்கினார். சர்க்கார் இவ்வூரை விட்டு இவர் வெளியே செல்லக் கூடாதென்று தடையுத்தரவிட்டுக் காவல் வைத்தார்கள்.

இதே சமயத்தில் சர்க்காரின் அடக்குமுறையால் மௌலானா முஹம்மத் அலி நடத்திக் கொண்டிருந்த "காம்ரேடு"ம், மௌலானா ஷௌக்கத் அலி நடத்திக்கொண்டிருந்த "ஹம்தர்த்" (அநுதாபி) என்ற உர்து தினசரியும் நின்றுவிட்டன. அலி சகோதரர்களிருவரும் மௌலானா ஆஜாதைப் போலவே காவலில் வைக்கப்பட்டார்கள். ஒவ்வொரு காங்கிரஸ் கூட்டத்திலும் இம்மூன்று மௌலானாக்களினுடைய நிபந்தனையற்ற விடுதலையைக் கோரித் தீர்மானங்கள் நிறைவேறின. இவர்களின் விடுதலையைக் கோரி அறுபதினாயிரம் பிரபலஸ்தர்களின் கையெழுத்துக்களைக் கொண்ட வேண்டுகோளொன்று அதிகாரிகளிடம் சமர்ப்பிக்கப்பட்டது. எதற்கும் அதிகாரிகள் செவிசாய்க்கவில்லை.

ராஞ்சியிலிருந்த மௌலானா அபுல்கலாம் ஆஜாத் மசூதிக்குச் சென்று வெள்ளிக்கிழமைகளில் குத்பாப் பிரசங்கஞ் செய்வார். இவர் புத்தகங்கள் வைத்துக் கொள்ள அனுமதிக்கப்பட்டார். "தஜ்கீரா" என்ற சொந்த அனுபவங்கள் நிறைந்த நூலை இங்கேதான் இயற்றினார். ஆரம்பத்திலிருந்து முடிவுவரை படிப்போரின் மனத்தைக் கவரும் அழகிய நடையில் அமைந்ததோர் இலக்கிய ரத்தினமாக அது திகழ்கிறது. இங்கேதான் இவர் தம்முடைய மகத்தான குர்-ஆன் வியாக்கியானத்தையும் ஆரம்பித்தார். 1919 டிஸம்பர் 25-ல் வெளியான ராஜப் பிரகடனத்தின் பலனாக, ஆஜாத் 1920-ம் வருஷ ஆரம்பத்தில் விடுவிக்கப்பட்டார். இவர் நான்கு ஆண்டுகள் காவலிலிருந்தார்.

# 5. புயல்

**1920**-ல் காவலிலிருந்து வெளிவந்த மௌலானா, தாம் எதிர்பார்க்காத ஒரு காட்சியைத் தேசத்தில் கண்டார். ரௌலட் சட்டத்தின் பலனாக, காந்திஜி தம் உடல் நோவையும் பொருட்படுத்தாது, உலகிலேயே அகம்பாவ மிகுந்த ஏகாதிபத்தியத்தைப் பெருமிதத்தோடு அறை கூவிக்கொண்டிருந்தார். அவருடைய அழைப்பின் மேல், நசித்துக் காய்ந்து, பட்டு, உளுத்து, மாண்டுபோன மனித இயற்கைகூடப் புத்துயிர் பெற்று எழுந்துகொண்டிருந்தது. அவருடைய போரின் அஹிம்ஸைத் தன்மை, விஷய மறியாதவர்களையும் கல்வியற்றவர்களையுங்கூட அதில் பங்குபெறச் செய்தது. ஜாலியன்வாலாபாதும் பஞ்சாபில் ராணுவ ஆட்சியில் நடந்த அக்கிரமங்களும் இந்தியர்களின் உள்ளத்தில் விஷத்தையும் வெறியையும் ஏற்றியிருந்தன. நான்கு புறங்களிலும் சுவர்களால் சூழப்பட்டு ஒரே குறுகிய வாசலையுடைய ஜாலியன்வாலாபாகில் கூடியிருந்த பிரும்மாண்டமான ஆயுதமற்ற நிரபராதிகளின் கூட்டத்தில் ராணுவப் போலீசார் 1600 ரௌண்டுகள் சுட்டதையும், பஞ்சாபில் ராணுவ ஆட்சியிலே நடந்த, நாகரிகமே கண்டு வெட்கித் தலைகுனியும்படியான, மிருகத் தன்மை கொண்ட அடக்குமுறையையும் இந்தியர்களால் ஒருகணமும் மறக்க முடியவில்லை. எனவே, ஜனங்களைப் பயத்தில் ஆழ்த்த எண்ணிய அதிகாரவர்க்கம் அவர்களுடைய உறுதியையே அதிகப்படுத்திற்று. மௌலானா முஹம்மத் அலி அப்போது பின்வருமாறு கூறினார்:—

“முப்பது ஆண்டுகளுக்குமுன், தாற்காலிகமாக, ஸர் ஸையத் அஹமத்கான் கட்டிவைத்திருந்த அணையைப் பூரணமாக உடைத்தெறிந்துவிட்டு, ஐயந்திரிபுக் கிடமில்லாமல் இந்திய தேசியத்தின் தூதன் காங்கிரஸே யென்னும்படி 1919-ல் அமிர்தஸரஸில் நடந்த காங்கிரஸுக்கு முஸ்லிம்களை வந்து சேருமாறு அழைத்த பெருமை ஜெனரல் டயரைச் (General Dyer) சேரும். அவருடைய சோல்ஜர்களின் துப்பாக்கிக் குண்டுகள் ஹிந்துக்களுக்கும் முஸ்

லிம்களுக்குமிடையே வேற்றுமை கற்பிக்கவில்லை. முஸ்லிம் வகுப்பினரைவிட அதிக ராஜவிசுவாசமுள்ள நம் வீர ஸீக்கியச் சகோதரர்கள், தங்களுடைய மதத்தின் தலை நகராகிய அமிர்தசரஸை, ஹிந்து முஸ்லிம் இரத்தத் தோடு தங்கள் சொந்த இரத்தத்தாலும் மெழுக வேண்டு மென்றிருந்தது தெய்வ நியதி என்பதில் கொஞ்சமும் சந்தேகமில்லை. கடவுளின் கையை அங்கே காணலாம்!"

இந்த அநீதிக்கு மேலாக, கிலாஃபத் அநீதியும் நிகழ்ந் தது. முஸ்லிம்களுடைய பரிசுத்த ஸ்தலங்களை முஸ்லிம் அல்லாதாரின் ஆட்சியின் கீழ் விடுவதில்லை என்று தங்க ளுடைய கஷ்டகாலத்தில் இந்திய முஸ்லிம்களுக்கு அளித் திருந்த வாக்குறுதியை, யுத்தம் முடிந்ததும் பிரிட்டிஷ் பிரதம மந்திரி காற்றுவாக்கிலே விட்டுவிட்டார். இத் தகைய அநீதியை யெதிர்க்க முஸ்லிம் சமூகமே ஒருங்கு திரண்டு எழுந்தது. தங்கள் பணத்தையும், உயிரையும், பண்டங்களையும் தாராளமாகக் கொட்டி யுத்தத்தில் பிரிட்டனுக்கு உதவி புரிந்த இந்தியர்கள் ரௌலட் சட்டத்தை நன்றியின்மையின் சிகரமெனக் கருதினார்கள். தங்களுடைய சொந்த மதத்தினருக்கு விரோதமாக, பிரிட்டிஷாரோடு சேர்ந்து போரிட்ட முஸ்லிம்கள் கிலாஃபத் அநீதியை, சகிக்க முடியாத துரோகச் செய லாகக் கருதினார்கள். இந்தியாவே குமுறிக் கொண் டிருந்தது. இந்திய மக்களின் முன்னே காந்திஜி தம் ஒத் துழையாமைத் திட்டத்தைச் சமர்ப்பித்தார். முஸ்லிம்கள் வைஸ்ராய்க்குத் தூது போவதிலிருந்தார்கள். 1920-ம் ஆண்டு ஜனவரி மாதம் 8-ம் தேதி டில்லியில் காந்திஜியை மௌலானா அபுல்கலாம் ஆஜாத் முதல் முதலாகச் சந்தித் தார். எல்லா ஹிந்து முஸ்லிம் தலைவர்களும் வைஸ்ரா யிடம் தூது போவதற்காக டில்லியில் கூடியிருந்தனர். லோகமான்ய திலகரும் அங்கே யிருந்தார். தூது கோஷ்டி யின் அங்கத்தினர் என்ற முறையில் வைஸ்ராயிடம் சமர்ப் பிக்க வேண்டிய யாதாஸ்தில், மௌலானா முன்னதாகவே கையெழுத்திட்டு விட்டார். ஆனால், வைஸ்ராய் மாளிகைக் குப் போக இவருக்கு விருப்பமில்லை. மௌலானா முஹம்மத்

அலி முதலியோர் இவரும் வரவேண்டுமெனப் பெரிதும் வற்புறுத்தினர்கள். தூதினல் பலனென்றும் ஏற்படாது என்பதே இவருடைய எண்ணம். அப்படியே தூதும் முடிந்தது; வைஸ்ராய் கையை விரித்துவிட்டார். லண்டனுக்குத் தூது சென்றால் வேண்டிய வசதிகள் அளிப்பதாக வாக்களித்தார். மௌலானா முகம்மத் அலி தலைமையில் தூது கோஷ்டி லண்டன் போக இருந்தது. இடையே, "தூது போவதையும், யாதாஸ்துகள் சமர்ப்பிப்பதையும் விட்டால் முஸ்லிம்கள் செய்யக்கூடியது எதுவுமில்லையா? இந்தப் பழைய யாசக முறைகளுக்கு முற்றுப்புள்ளி வைத்துவிட்டு, பலனளிக்கக்கூடிய நேரடியான செயல் முறையைக் கையாளவேண்டும்" என்று மௌலானா அபுல் கலாம் ஆஜாத் இறுதியாகக் கூறினர்.

எனவே, மௌலானா அபுல்கலாம் ஆஜாத், மௌலானா முஹம்மதலி, மௌலானா ஷௌக்கத்தலி, டாக்டர் அன்சாரி, ஹகீம் அஜ்மல்கான், டாக்டர் கிச்சுலு ஆகிய முஸ்லிம் தலைவர்கள் ஹகீம் அஜ்மல்கானின் அறையில் கூடி ஆறு மணி நேரம் ஆலோசித்தார்கள். இரண்டு அல்லது மூன்று பேர் கூடிய ஒரு உப கமிட்டி தம்மோடு சேர்ந்து விவாதிக்கட்டுமென காந்திஜி யோசனை கூறினர். மௌலானா அபுல்கலாம் ஆஜாதும், ஹகீம் அஜ்மல்கானும் உபகமிட்டியாக நியமிக்கப்பட்டார்கள். இவர்களிருவரும் காந்திஜியோடு பிரின்ஸிபால் ருத்ராவின் வீட்டில் சுமார் மூன்று மணி நேரம் ஆலோசனை செய்தார்கள். அங்கேதான் ஒத்துழையாமை பூர்ண உருவுடன் பிறந்தது. பின்னர் இந்தத் திட்டம் மேற்கூறிய எல்லா முஸ்லிம் தலைவர்களின் முன்பும் சமர்ப்பிக்கப்பட்டது. மௌலானா ஆஜாதும் ஹகீம் அஜ்மல்கானும் அத்திட்டத்தை அப்படியே ஏற்றுக் கொண்டார்கள். மௌலானா அப்துல் பாரியும் அலி சகோதரர்களும் சற்றுத் தயங்கினர்கள். ஆனல், இதை விட்டால் வேறு வழியில்லை யென்பது மாத்திரம் யாவர்க்கும் தெளிவாயிற்று. அப்போது மீரத்தில் நடந்த கிலாஃபத் மகாநாட்டுக்குக் காந்திஜி சென்று தம்முடைய ஒத்துழையாமைத் திட்டத்தை

முஸ்லிம்கள் முன் சமர்ப்பித்தார். டில்லியில் நடந்த மகா நாட்டுக்குக் காந்திஜியே தலைமை வகித்தார். 1920 பிப்ரவரியில் மௌலானா அபுல்கலாம் ஆஜாதின் தலைமையில் கல்கத்தாவில் கிலாஃபத் மகாநாடு நடந்தது. முடிவில் முஸ்லிம்கள் காந்திஜியின் ஒத்துழையாமைத் திட்டத்தை ஏற்றுக்கொண்டு விட்டனர்.

அமிர்தசரஸ் காங்கிரஸில் புதிய சீர்திருத்தச் சட்டத்தை ஏற்றுக் கொள்வதென்று தீர்மானிக்கப் பட்டது. பின்னர் நடந்த சம்பவங்களால், அந்தத் தீர்மானத்தை மாற்ற வேண்டிய நிர்ப்பந்த மேற்பட்டது. அ. இ. கா. க. காசியில் கூடி, 1920 செப்டம்பரில் கல்கத்தாவில் ஒரு விசேஷ காங்கிரஸைக் கூட்டுவதெனத் தீர்மானித்தது. விசேஷ காங்கிரஸ் லாலா லஜபத்ராயின் தலைமையிற் கூடிற்று. இக்காங்கிரஸில் தான் காந்திஜி முதல் முதலாகத் தம் ஒத்துழையாமைத் திட்டத்தைச் சமர்ப்பித்தார். லாலா லஜபத்ராய், ஸி. ஆர். தாஸ் முதலியோர் இத்திட்டத்தை யெதிர்த்தனர்; மௌலானா அபுல்கலாம் ஆஜாத், டாக்டர் அன்சாரி, அலி சகோதரர்கள் முதலியோர் மனப்பூர்வமாக ஆதரித்தார்கள். ஒத்துழையாமைத் தீர்மானம் ஒரு சிறிய மெஜாரிட்டியால் நிறைவேறிற்று. இயக்கத்தை ஆரம்பிக்கும் பொறுப்பு டிஸம்பரில் நடக்கவிருந்த நாகபுரி காங்கிரஸுக்கு விடப்பட்டது.

1920 டிஸம்பரில், நாகபுரியில் பழுத்த கிழவரான சேலம் சி. விஜயராகவாச்சாரியார் தலைமையில் காங்கிரஸ் கூடிற்று. அதே சமயத்தில் அதே யிடத்தில் அகில இந்திய கிலாஃபத் கமிட்டிக் கூட்டம் மௌலானா அபுல் கலாம் ஆஜாத் தலைமையில் கூடிற்று. இவ்விரு கூட்டங்களிலும், முடிவாக ஒத்துழையாமைப் போர் ஏற்றுக் கொள்ளப்பட்டது. மௌலானா அபுல்கலாம் ஆஜாத் அற்புதமாய்ப் பிரசங்கம் செய்தார். கிலாஃபத் இயக்கத்துக்கு இவர் சர்வதேசத் தோற்றத்தைக் கொடுத்தார்; ஒத்துழையாமைக்குக் குர்-ஆனின் ஆதரவு உண்டென்பதை ஆணித்தரமாகக் கூறினார். இவர் பேசியதாவது :—

"கிலாஃபத் கிளர்ச்சி ஆரம்பமானபோது, நம் புண்ணிய ஸ்தலங்களைப் பாப கரங்களிலிருந்து மீட்பதும், துருக்கியின் ஏகாதிபத்தியத்தைக் காப்பதுமே நம் கூக்குரலாக இருந்தது. ஆனால், காலம் நமக்கு வேறு உண்மைகளையும் உணர்த்தியிருக்கிறது. நம் கிலாஃபத் இயக்கம் எல்லாத் தேசங்களினுடைய சுதந்திரத்துக்காகவும் நடக்கும் உலகப் போரோடு ஒன்றாக இணைந்து நிற்கிறது.

"எனவே, கிலாஃபத் சேவகர்களின் முதற் கடமை, இந்தியாவின் சுதந்திரத்தைப் பெறுவதிலே தங்கள் கவனத்தைக் கட்டுப்படுத்துவதே யாகும்.

"இந்தியாவின் சுதந்திரத்தை அடைவதற்குள்ள ஒரே வழி ஒத்துழையாமைதான். இது நமக்கு இஸ்லாம் உதவியிருக்கும் 'ஜிஹாத்' ஆகும். இத்தகைய 'ஜிஹாத்' என்னும் ஒத்துழையாமைப் போர்கள் இஸ்லாத்தின் சரித்திர முழுவதிலும் நிறைந்திருக்கின்றன. ஒத்துழையாமைக்குக் குர்-ஆனின் கட்டளையிருக்கிறது.

"யுத்த பேரிகைகள் முழங்கிவிட்டன ; இனி இந்தியா தன்னுடைய சுயேச்சையைப் பெறுவதற்காக எதையும் தியாகம் செய்யத் தயார் என்பதை நிரூபிக்க வேண்டியது தான் இந்தியாவின் பொறுப்பு."

தேசம் இதற்குமுன் கண்டிராத உணர்ச்சி வெள்ளம் பெருக்கெடுத்தோடிற்று. எங்கும் சண்டமாருதப் பிரசாரம் நடந்துகொண்டிருந்தது. தேசமுழுதும் கூட்டங்கள் நடந்தன. ஒரு புறத்தில் காந்திஜியும் ஆஜாதும், இன்னொரு புறத்தில் அலி சகோதரர்கள், மற்றுமொரு இடத்தில் தேசபந்து தாஸ், பண்டித மோதிலால், ஜவஹர்லால் நேரு ஆகியோருமாக, வீரப் பிரசங்கங்கள் செய்து கொண்டிருந்தார்கள். ஆஜாதின் அழகான உர்துவும், இனிமையான நடையும், கடல் மடை திறந்தாற்போற் பேசும் சொல் வன்மையும், லக்ஷக்கணக்கான மக்களை மந்திரத்தாற் கட்டுப்பட்டவர்களைப்போல், மணிக்கணக்காக வைத்துக்கொண்டிருக்கும். இயக்கத்தின் வெற்றி அபாரம். பண்டித மோதிலால் நேரு, தேசபந்து தாஸ்,

சர்தார் வல்லபாய பட்டேல், பாபு ராஜேந்திர பிரசாத், சக்ரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார் ஆகியோர் தங்கள் ஆயிரக்கணக்கான வருமானத்தை விட்டுவிட்டு, கோர்ட்டைப் பகிஷ்கரித்து வெளியேறினார்கள். ஆயிரக்கணக்கான பெண்கள் பொதுக் கூட்டங்களுக்கு வந்து, தங்களுடைய ஆபரணங்களால் காந்திஜியின் பிக்ஷா பாத்திரத்தை நிரப்பினார்கள். ஹிந்து முஸ்லிம் ஒற்றுமை அற்புதமாக இருந்தது. ஒரே பாத்திரத்திலிருந்து ஹிந்துக்களும் முஸ்லிம்களும் உணவருந்தினார்கள்; ஒரே பானையிலிருந்து இருவரும் நீர் பருகினார்கள்; கூட்டமாகச் சேர்ந்து பொதுக் கூட்டங்களுக்கு ஏற்பாடு செய்தார்கள்; ஒரே மேடையிலேறிப் பிரசங்கங்கள் செய்தார்கள். ஸ்வாமி சிரத்தானந்தாவுக்கு டில்லி ஜும்மா மசூதியில் முஸ்லிம்கள் மகத்தான வரவேற்பளித்து ராஜோபசாரம் செய்தார்கள். மசூதி மேடைமீதேறி, முஸ்லிம்களுக்கு அவர் பிரசங்கம் செய்தார். உண்மையான மதாபிமானமும், இதய ஒற்றுமையும் நிலவியிருந்த காலம் அது. இன்றைய மதவெறியிலும், துவேஷத்திலும், ஒரு ஹிந்து சந்நியாசி யெங்கே, ஜும்மா மசூதியின் மேடையெங்கே! அந்தக் காலம் திரும்பி வராமற் போகாது; சத்தியத்துக்கு அழிவில்லை.

இரண்டாவது ஜமீயத்துல் - உலமாயே - ஹிந்த் (முஸ்லீம் மத அறிஞர்களின் கூட்டம்) மகாநாடு டில்லியில் ஹஜாத் ஷெய்குல் ஹிந்த் தலைமையில் நடந்தது. மௌலானா அபுல்கலாம் ஆஜாத் ஓர் அபூர்வமான பிரசங்கம் செய்தார். இந்திய சுதந்திரத்துக்காகவும், கிலாஃபத் அநீதிகளுக்குப் பரிகாரம் தேடுவதற்காகவும் ஒத்துழையாமைத் திட்டத்தை ஏற்றுக்கொள்ள வேண்டுமென்பதே அவருடைய பல்லவி. கூடியிருந்த உலமாக்கள் (மார்க்க அறிஞர்கள்) 500 பேருக்கு மேல் கையெழுத்திட்டு, முஸ்லிம்கள் தங்கள் பட்டங்களைத் துறக்க வேண்டுமென்றும், சர்க்கார் உத்தியோகங்களை விடவேண்டுமென்றும், சட்ட சபைகளிலிருந்தும் நகரசபைகளிலிருந்தும் வெளியேற வேண்டுமென்றும் ஒரு பத்வா (மார்க்கத் தீர்ப்பு) வெளியிட்டார்கள்; அது அச்சிடப்பட்டு இந்தியா முழுதும்

வழங்கப்பட்டது. ஆனால், சாககார் அதைப பறிமுதல் செய்து விட்டார்கள். மௌலானா அபுல்கலாம் ஆஜாத்துக்குப் பொதுக்கூட்டங்களில் மாத்திரமல்ல, முஸ்லிம் வேதாந்திகளின் கூட்டங்களிலும் அதிகமான செல்வாக்கு இருந்தது. இவருடைய ஒப்பற்ற சொல் வன்மை யாரையும் இவருக்கு அடிமையாக்கிற்று. இந்தியாவிலுள்ள முஸ்லிம் பண்டிதர்களும், வேதாந்திகளும், மத குருக்களும் லாகூரில் ஒரு விசேஷ மகாநாடாகக் கூடினார்கள். அம் மகாநாட்டில், அகில இந்தியாவுக்கும் பிரதான ஆத்மார்த்திகத் தலைவராக - இமாமுல் ஹிந்த் - மௌலானா அபுல்கலாம் ஆஜாதை நியமிப்பதாகத் தீர்மானித்தார்கள். ஆஜாத் மிக்க வணக்கத்துடன் அதை யேற்க மறுத்துவிட்டார். இவருடைய திவிரக் கொள்கைகளையும் பொருட்படுத்தாது, லக்ஷ்மணபுரி, தேவபண்ட் முதலிய இடங்களிலிருந்து வந்த அதி வைதிகப் பண்டிதர்கள் கூட இவரைப் பெரிதும் வற்புறுத்தினார்கள். ஆனால், ஆஜாத் அதற்கு இணங்கவில்லை. பின்னர், ஜமியத்துல் உலமாவின் நிர்வாகக் கமிட்டிக்குத் தாம் மறுத்த காரணங்களை விளக்கிக் கூறும்போது, அப்படித் தனி மனிதரொருவரை—இவர் எவ்வளவு உயர்ந்தவராயினும் சரி—அகில இந்தியாவுக்கும் பிரதான ஆத்மார்த்திகத் தலைவராக நியமிப்பதில் ஆபத்து இருக்கிறதென்றும், அது முஸ்லிம் வகுப்பின் முன்னேற்றத்தைத் தடைப்படுத்துமென்றும் கூறினர்.

அதிகார வர்க்கம் சும்மா இருக்கவில்லை. தன் அடக்குமுறைப் பாணத்தைத் தொடுக்க ஆரம்பித்தது. முக்கியமான தலைவர்கள் அனைவரும் ஒவ்வொருவராகக் கைது செய்யப்பட்டார்கள். மௌலானா முஹம்மதலி காந்திஜியுடன் ஒரு பொதுக்கூட்டத்தில் பேசுவதற்காகப் போய்க் கொண்டிருக்கும்போது கைது செய்யப்பட்டார். அரசாங்கம் அப்போது அதற்குக் காரணமொன்றும் கொடுக்கவில்லை. ஆனால், காந்திஜி கிளப்பிய கண்டனக் குரல் தேசமெங்கும் எதிரொலித்தது. "மௌலானா முஹம்மதலியைக் கைது செய்ததின் மூலம் அரசாங்கம்

கிலாபத்தையே கைது செய்துவிட்டது; ஏனெனில் அலி சகோதரர்கள் கிலாஃபத்தின் உண்மையான பிரதிநிதிகள். அவர்களுடைய தைரியத்தையும், நம்பிக்கையையும், அஞ்சாமையையும், உண்மைத் தன்மையையும், இடைவிடாது விழிப்புற்ற சுறுப்பையும் நாம் பின்பற்றுவோமாக” என காந்திஜி கூறினார். கராச்சியில் நடந்த கிலாஃபத் மகாநாட்டில், எந்த உண்மையான முஸ்லிமும் ராணுவத்தில் சேர்வதோ, அதில் உழைப்பதோ, அல்லது அதற்கு உதவி செய்வதோ நியாய விரோதமானது என்று ‘பத்வா’ வெளியாயிற்று. இதற்காகத் தான் முஸ்லிம் தலைவர்களும் அலி சகோதரர்களும் கைது செய்யப்பட்டார்கள். இதற்குத் தான் கராச்சி சதியாலோசனை வழக்கு என்று பேரிட்டார்கள். மௌலானா முஹம்மதலி கைதியான இரண்டு நாட்களுக்குப் பிறகு, பம்பாய் கவர்னர் விடுத்த அறிக்கையொன்றில், சிப்பாய்களின் ராஜவிசுவாசத்திலே தலையிடக் கூடிய தீர்மானமொன்றைக் கராச்சியில் நிறைவேற்றியதற்காகவே, முஹம்மதலி கைது செய்யப்பட்டதாகவும், இம்மாதிரி ராஜத்துரோகச் செயல்களை இனியும் சர்க்கார் சகித்துக்கொண்டிருக்கப் போவதில்லையென்றும் கூறினார். அதிகார வர்க்கம் இவ்வாறு விடுத்த அறைகூவலைத் தேசம் ஏற்றுக் கொண்டு விட்டது. தேசத்தின் பிரதிநிதியான காந்திஜி அதைத் தெளிவாக்கினார். காந்திஜி கூறியதாவது :—“ இந்திய தேசீயக் காங்கிரஸ் சென்ற வருஷம் செப்டம்பரிலேயே, சிப்பாய்களின் ராஜ விசுவாசத்திலே தலையிட ஆரம்பித்துவிட்டதென்பதையும், மத்திய கிலாஃபத் கமிட்டி இதற்கும் முன்னதாகவே இவ்வேலையை ஆரம்பித்து விட்டதென்பதையும், இதற்கெல்லாம் முன்னதாகவே நான் இதை ஆரம்பித்து விட்டேனென்பதையும் பம்பாய் கவர்னர் அறியார் போலும். ஒவ்வொரு சிப்பாயிடமும், ஒவ்வொரு உத்தியோகஸ்தரிடமும், ‘சர்க்கார் செய்யும் அநீதிகளுக்கெல்லாம் நீங்கள் உடந்தையாக இருக்கிறீர்கள்’ என்று பகிரங்கமாகச் சொல்லும் உரிமை இந்தியாவுக்கு உண்டென்பதை எடுத்துக்காட்டிய பொறுப்பை நான் ஏற்றுக்கொள்ள அநுமதிக்கப்படவேண்டும். கராச்சி மகாநாடு காங்கிரஸ் பிரகடனத்தை வெறுமனே இஸ்லாத்

தின் பெயரால் திருப்பிச் சொல்லிற்று. மனிதத் தன்மையில் ஓர் அணுவாயினும் தனக்குள்ளே யுள்ள எவனும், தன்னுடைய மதத்தில் பெருமை கொண்டுள்ள எந்த முஸ்லிமும், அலி சகோதரர்கள் செய்ததைவிட வேறு விதமாக என்ன செய்ய முடியும்; வேறு எப்படி உணர முடியும்?.........ராஜத்துவேஷ மென்பது காங்கிரஸின் லட்சியமாகிவிட்டது என்பதை மேன்மை தங்கிய கவர்னர் தெரிந்து கொள்ள வேண்டும். ஒவ்வொரு ஒத்துழையாமைக்காரனும் சட்ட முறைப்படி நிறுவப்பட்ட அரசாங்கத்தினிடம் வெறுப்பைப் பரப்புவதென்று விரதமெடுத்துக் கொண்டிருக்கிறுன்.” இதைத் தொடர்ந்தாற் போல், இந்தியாவின் முக்கியத் தலைவர்கள் யாவரும் கையெழுத்திட்டு, சர்க்காரை யறைகூவி யழைத்து ஒரு பிரகடனத்தை வெளியிட்டார்கள். அப்பிரகடனம் கூறியதாவது:—“நகரவாசிகள், சர்க்காரின் சிவில் அல்லது ராணுவ இலாகாவில் சேர்ந்து பதவி வகிப்பதினுடைய பொருத்தத்தைப் பற்றிக் கட்டுப்பாடற்ற தன்னுடைய அபிப்பிராயத்தை வெளியிடுவது ஒவ்வொருவருடைய பிறப்புரிமையாகு மென்பதை அடியில் கையொப்பமிட்டிருக்கும் நாங்கள் எங்கள் சொந்த ஹோதாவில் தெளிவாக்க விரும்புகிறோம். இந்தியாவினுடைய பொருளாதார, தார்மீக, அரசியல் பங்கத்தைத் தேடியதும், ரௌலட் சட்டக் கிளர்ச்சியின் போது செய்தது போல் தன்னுடைய ராணுவத்தையும் போலீஸையும் தேசிய அபிலாஷைகளை யடக்குவதற்கு உபயோகித்ததும், இந்தியாவுக்கு எவ்விதத் தீங்கும் இழைக்காத துருக்கியர்கள், அராபியர்கள், எகிப்தியர்கள் இன்னும் பல தேசங்களுடைய சுதந்திரத்தை நசுக்குவதற்காகத் தன் ராணுவத்தை யுபயோகித்ததுமான ஒரு அரசாங்கத்தின்கீழ் எந்த இந்தியனும் சிவிலியனுகவும், குறிப்பாக, சிப்பாயாகவும் சேவை செய்வது தேசிய கௌரவத்துக்கு விரோதமானதென்ற அபிப்பிராயத்தை அடியிற் கையொப்பமிட்டிருக்கும் நாங்கள் வெளியிடுகிறோம். அரசாங்கத்தோடு தனக்குள்ள சம்பந்தத்தை யறுத்துவிட்டுப் பிழைப்புக்கு வேறு வழியைத் தேடிக்கொள்ள வேண்டுவது ஒவ்வொரு

இந்திய சிவிலியனுடையவும் சிப்பாயினுடையவும் கடமையாகும் என்பதும் எங்கள் அபிப்பிராயம்." காந்திஜி முதலில் கையெழுத்திட்டார். இரண்டாவதாக மௌலானா அபுல்கலாம்ஆஜாத் கையெழுத்திட்டிருந்தார். பின்னால் ஆயிரக் கணக்கானவர்கள் கையெழுத்திட்டார்கள். இத்தகைய பகிரங்கப் புரட்சியை யெதிர்பார்க்காத அதிகார வர்க்கம் அப்படியே திகைத்துவிட்டது.

1921 நவம்பரில் ஜமீயத்துல் உலமாயே ஹிந்தின் வருஷாந்தர மகாநாடு லாகூரில் நடைபெற்றது. மௌலானா ஆஜாத் மகாநாட்டுக்குத் தலைமை வகித்தார். ஏராளமான ஹிந்துக்கள் வந்திருந்தார்கள். "ப்ராட்லா ஹாலில்" (Bradlaugh Hall) மகாநாடு நடைபெற்றது. ஹால் முழுதும் கதரினாற் செய்யப்பட்ட புஷ்பங்களாலும், தோரணங்களாலும் அலங்கரிக்கப்பட்டிருந்தது. ஹாலில் இடமின்றி மகாநாட்டுக்கு வந்து திரும்பிப் போனவர்கள் எண்ணிறந்தோர். மகாநாட்டுக்கு வந்திருந்தவர்களுள் மௌலானா கிபாயத்துல்லாவும், ஹக்கீம் அஜ்மல்கானும் இருந்தார்கள். கூட்டத்தில் அநேக தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன. அவைகளில் முக்கியமானது ஹிந்துக்களைப் பலவந்தமாக முஸ்லிம்களாக மதமாறச் செய்த "மாப்பிள்ளை" (Moplahs) களின் செய்கையைக் கண்டித்து நிறைவேற்றிய தீர்மானமாகும். இத் தீர்மானத்தின்மேல் மௌலானா ஒரு காரமான சொற்பொழிவாற்றினார். பலாத்கார மதமாற்றத்தைச் சிறிதும் இஸ்லாம் அனுமதிக்கவில்லை யென்று அழுத்தந்திருத்தமாக எடுத்துச் சொன்னார். மகாநாடு கலைவதற்கு முன்னதாகவே, வேல்ஸ் இளவரசரின் விஜய சம்பந்தமாகப் பம்பாயில் ஏற்பட்ட குழப்பத்தை முன்னிட்டு, காந்திஜியின் அழைப்பின்மேல் மௌலானா பம்பாய் சென்றார்.

1917-ம் ஆண்டு நவம்பர் மாதம் 17-ம் தேதி வேல்ஸ் இளவரசர் (இப்போது விண்ட்ஸர் கோமகன்) பம்பாய் வந்து இறங்குவதாக விருந்தது. பாஞ்சாலப் படுகொலை

யின் காரணமாகவும், கிலாஃபத் அநீதியின் காரணமாகவும் மக்களின் மனத்திலிருந்த அதிருப்தியை வெளிப்படுத்து வதற்கறிகுறியாக, இவ்விஜயத்தைப் பகிஷ்கரிப்பதென்று காங்கிரஸ் தீர்மானித்தது. அக்டோபர் மாதம் 7-ம் தேதி காங்கிரஸ் காரியக் கமிட்டி அலகபாத்திலே கூடி இளவரசர் இந்தியாவில் வந்திறங்கிய அன்று தேசமெங்கும் ஹர்த்தால் அநுஷ்டிப்பதென்றும், எல்லா வரவேற்புக் களையும் பஹிஷ்கரிப்பதென்றும் முடிவுசெய்தது. இதற் காகத் தேச முழுதும் தொண்டர் படைகள் திரட்டப் பட்டன. இத் தொண்டர்படைகள் சட்ட விரோத மானவை யென்றும், தொண்டர்களைச் சேர்ப்பது ஒரு குற்றமென்றும், ஐ. மா., பஞ்சாப், வங்காள மாகாண சர்க்கார்கள் அறிவித்தார்கள். ஆனால் இந்த அறைகூவல் தேசமெங்கும் ஏற்றுக்கொள்ளப்பட்டது. தொண்டர்கள் சேர்க்கப்பட்டதுமன்றி அவர்களுடைய பெயர்களும் பத்திரி கைகளிற் பிரசுரிக்கப்பட்டன. பண்டித மோதிலால், ஜவஹர்லால் நேரு ஐ. மா. வின் பிரதானத் தொண்டர்கள், தேசபந்து சி. ஆர். தாஸும், மௌலானா அபுல்கலாம் ஆஜாதும் வங்காளத்தின் பிரதானத் தொண்டர்கள். இளவரசரின் விஜயத்திற்கு வரவேற்பு சூன்யமாகவே யிருந்தது. காங்கிரஸின் கோரிக்கைக்குத் தேசம் ஆர்வத் துடனும் பெருமையுடனும் பதிலளித்தது. ஹர்த்தால் வெற்றிகரமாக முடிந்தது. விரல்விட்டு எண்ணக் கூடிய சில ஏகாதிபத்திய தாஸர்களைத் தவிர இளவரசரை வரவேற்பார் யாருமில்லை. அதிகார வர்க்கம் ஆத்திரங் கொண்டது. கண்டபடி கைதுசெய்ய ஆரம்பித்தது. ஐ. மா. வில் இரு நேருக்களும், பஞ்சாபில் லாலா லஜபதி ராயும், வங்காளத்தில் தேசபந்து தாஸும், மௌலானா ஆஜாதும் இன்னும் ஆயிரக்கணக்கானவர்களும் சிறைப் பட்டார்கள். டிஸம்பருக்கும் ஜனவரிக்கு மிடையில் முப்பதினாயிரம் பேருக்குமேல் சிறை சென்றார்கள். அவர்கள் நியாயஸ்தலங்களில் பிரதிவாதமாட மறுத்துச் சமர்ப்பித்த ஆணித்தரமான அறிக்கைகள் பிரிட்டிஷ் அரசியல் நீதியினுடைய வண்டவாளத்தை வெளிப் படுத்தின.

தேசபந்து தாஸ் அவ்வருஷத்தியக் காங்கிரஸுக்கும், மௌலானா அபுல்கலாம் ஆஜாத் அவ்வருஷத்திய முஸ்லிம் லீகுக்கும் தலைமைவகிக்க இருந்தார்கள். அம்மகாநாடு களுக்கு முன்னதாகவே அவர்கள் கைது செய்யப்பட்டார் கள். கைதியாவதற்கு ஆஜாத் தயாராகவே யிருந்தார். பலமுறையும் தம்மைக் கைது செய்யுமாறு இவர் சர்க் காரை அறைகூவி அழைத்திருந்தார். 1921, மார்ச்சில் மூன்றுவது முறையாக இவர் பஞ்சாபில் சுற்றுப் பிர யாணம் செய்தார். லாகூர், அமிர்தசரஸ் ஜில்லாக்களில் இவர் பேசுவதற்குத் தடை விதிக்கப்பட்டது. தடை யுத்தரவை மீறி, ஆஜாத் லாகூரிலும், அமிர்தஸரஸிலும் பொதுக் கூட்டங்களில் பேசப் போவதாக அறிவித் தார். அதன்படி, டாத்ஷாஹி மசூதியில் வெள்ளிக்கிழமை 'ஜும்மா' தொழுகைக்குப் பிறகு மௌலானா பிரசங்கம் செய்தார். பஞ்சாப் மந்திரி சபை காந்திஜிக்குப் புகார் செய்தது. காங்கிரஸ் சட்டமறுப்பில் ஈடுபடாவிட்டா லும், மௌலானா ஆஜாத் போன்ற பொறுப்பு வாய்ந்த தலைவர்களுக்கு அப்படிச் செய்ய உரிமையுண்டென்று காந்திஜி பதில் கூறிவிட்டார். மௌலானாவின் பிரசங்கம் ஒத்துழையாமையைப் பற்றிய உறுதியும் வீரமும் நிறைந்த பிரசங்கமாயிருந்தது. "சிவில் அண்ட் மிலி டெரி கெஜட்" என்ற ஆங்கிலோ இந்தியப் பத்திரிகை இப்படிச் சர்க்காரின் கண்ணுக்கு முன்னுலேயே சட்டம் மீறப்படுவதைக் கண்டு ஓலமிட்டது. இப்படியாகவே, மௌலானா ஆஜாத் அமிர்தசரஸிலும் சட்டத்தை மீறினார். ஆனால் பஞ்சாப் சர்க்கார் இவரைக் கைது செய்யத் துணியவில்லை.

மௌலானா முஹம்மதலி கராச்சி கிலாஃபத் மகாநாடு சம்பந்தமாகக் கைது செய்யப்பட்டபோது, ஆஜாத் கல்கத்தாவில் ஹாலிடே பார்க்கில் நடந்த கூட்டத்தில் அடியிற்கண்டவாறு பேசினார்:—"எந்தத் தீர்மான சம் பந்தமாக அலி சகோதரர்கள் இன்று கைது செய்யப்பட் டிருக்கிறார்களோ, அந்தத் தீர்மானம் இஸ்லாத்தின் ப்கிரங்கமான உலகறிந்த பிரச்னை. அந்த பிரகடனத்தைச்

செய்ய வேண்டியது ஒவ்வொரு முஸ்லிமின் கடமையாகும். அந்தத் தீர்மானம் தயாரிக்கப்பட்டது என்னுல், கல்கத்தா டவுன் ஹாலில் என் தலைமையின் கீழ் நடந்த கூட்டத்தில் அது நிறைவேற்றப்பட்டிருக்கிறது. இவற்றை யெல்லாம் விட, அத்தீர்மானத்திலுள்ளவற்றை அழுத்தந் திருத்தமாக நான் இங்கே கூறுகிறேன். இங்கிருக்கும் சி. ஐ. டி. உத்தியோகஸ்தர்கள் ஒரு வார்த்தை விடாமல் எழுதிக் கொண்டு போகட்டும். இது ஒரு குற்றமானுல், எல்லாக் காலத்திலும் இக்குற்றம் தொடர்ந்து செய்யப்படுமென்பதைச் சர்க்கார் ஞாபகம் வைத்துக்கொள்ள வேண்டும்."

கராச்சி கேஸ் செஷனுக்கு மாற்றப்பட்டவுடனேயே, மறுபடியும் மௌலானு தம்மைக் கைது செய்யும்படி அறைகூவி யழைத்தார். பத்திரிகைகளுக்கு விடுத்த அறிக்கையொன்றில் இவர் கூறியதாவது:—"இந்தத் தீர்மானத்தைக் கல்கத்தா கிலாபத் மகாநாட்டுக்காகத் தயாரித்தவன் நானே. அதை நான் என் கையாலேயே எழுதினேன். என் தலைமையிலேயே அது நிறைவேறிற்று. பின்னர், ஜமியத்துல் உலமா டில்லியில் கூடியபோது இந்தத் தீர்மானத்தில் பத்வா வுருவில் நான் கையெழுத்திட்டேன். பின்னர் ப்ரைலியில் என் தலைமையில் நடந்த ஜமீயத் கூட்டத்திலும் இத்தீர்மானம் என்னுலேயே பிரேரேபிக்கப்பட்டு நிறைவேறியது. 'கிலாபத் சஞ்சிகை'யில் இதைப்பற்றி நான் ஒரு விசேஷ அத்தியாயம் எழுதியிருக்கிறேன். அச்சஞ்சிகையின் எண்ணற்ற பிரதிகள் விநியோகிக்கப்பட்டிருக்கின்றன. டில்லி, கராச்சி, கல்கத்தா, பம்பாய் முதலிய இடங்களிலும் நான் இதைச் சொல்லியிருக்கிறேன். நான் வாய்ப்பேச்சோடு நின்றுவிடாமல் செய்கையில் நடத்திக் காட்டுவதோடு, பிறரையும் அப்படியே செய்யுமாறு கேட்டுக்கொண்டு வந்திருக்கிறேன் என்பதையும் ஒப்புக்கொள்கிறேன். இது 'ராஜத் துவேஷமோ', அல்லது 'சதியாலோசனையோ'வானுல் இதை நான் ஆயிரந் தடவை செய்திருக்கிறேன். என்னை வெறுமனே பின்பற்றிய அலி சகோதரர்களைக் கைது செய்வதற்குமுன் என்னைக் கைதுசெய்து விசாரணை நடத்துவதுதான் சர்க்காரின் பொருத்தமான செய்கையாகும்."

தாம் கைது செய்யப்படுவதற்கு இரண்டு நாட்களுக்கு முன் ஆஜாத் கீழ்க்கண்ட அறிக்கையை விடுத்தார்:—"நான் கைதியாவதில் இந்திய முஸ்லிம்களிடையே ஒரு புத்துணர்ச்சியின் விழிப்பை நான் காண்கிறேன். பஞ்சாப், பீஹார், எல்லைப்புற மாகாணங்களைக் குறித்து நான் பெரிதும் பெருமைகொள்ள முடியும். என் மேல் நம்பிக்கையோடும், உறுதியோடும், அன்போடும் இம்மூன்று மாகாணங்களிலுள்ள முஸ்லிம்களும் என்னுடைய அழைப்புகளுக்கெல்லாம் பதிலளித்திருக்கிறார்கள். சென்ற பத்தாண்டுகளாக இவர்களிடமே என் நம்பிக்கை. என் கைது அவர்களுடைய உணர்ச்சிகளைச் செயற்படுத்துமென்பதை நான் உறுதியாக நம்புகிறேன்.........தங்களுடைய இஸ்லாமிய மரியாதையை முதற்படியாகக் காப்பாற்றுமாறு நான் முஸ்லிம்களைக் குறிப்பாக வேண்டிக் கொள்ளுகிறேன். அவர்கள் இந்தச் சோதனை வேளையில் தங்கள் பிற சகோதரர்களை மிஞ்சவேண்டும். இன்று அவர்கள் பின்வாங்குவார்களானால், அவர்களுடைய வாழ்வு உலகிலுள்ள 40 கோடி முஸ்லிம்களுக்கும் ஒரு களங்கமாகும்."

தாம் கைது செய்யப்பட்டவுடனே மௌலானா கீழ்க்கண்ட செய்தியைத் தொண்டர்களுக்கு விடுத்தார்:—"எல்லாத் தேசியத் தொண்டர்களும் உறுதியாகவும் திடமாகவும் சுறுசுறுப்பாகவும் தங்கள் காரியங்களைப் பார்க்கவேண்டும். தங்களுடைய இடத்தைவிட்டு, காரியத்தை விட்டு, யாரும் என்னைக் காண வரக்கூடாது. எதிர்பார்க்கப்பட்ட ஒரு சாதாரண சம்பவமாக நான் கைதியானதைக் கருதவேண்டும். அசாதாரணமான பிராதான்யம் எதுவும் அதற்குக் கொடுக்கக் கூடாது. என்னைக் காணவரும் முயற்சியில் யாராவது ஒரு தொண்டன் ஒரு மணி காலத்தைக்கூட வீணாக்குவானாயின் அது என்னைப் பெரிதும் புண்படுத்தும்." இவர் காந்திஜிக்கு அனுப்பிய செய்தியில் கூறியதாவது:—"தங்கள் சகாக்கள் ஒவ்வொருவரும் கைது செய்யப்படும்போது எவ்வளவு மனித உதவி குறைகிறதோ, அந்த அளவுக்கு மேலாகவே தெய்வ உதவி தங்களுக்கு அதிகரித்து வருகிறது.

பம்பாயில் சமீபத்தில் நடந்த கலவரங்கள், உங்களைப் பெரிதும் துன்பத்தில் ஆழ்த்திற்று. உங்களை நிம்மதி யில்லாமலும் ஸந்துஷ்டியற்றும் காண நான் பெரிதும் வேதனையுற்றேன். ஆனால், கடந்த காலத்தில் நிகழ்ந்த துக்ககரமான சம்பவங்களுக்குப் பதிலாக வெற்றியின் ஆனந்தமான பலனை உங்களுக்குப் பரிசாக அளிப்பதற்குக் கல்கத்தா திரண்டு எழுந்துவிட்டது.”

## 6. சத்தியப் பிரகடனம்

**மௌ**லானாவின் வழக்கு விசாரணை வெகு விநோதமாக இருந்தது. கிரிமினல் சட்ட அமெண்ட்மென்ட் ஆக்டின் 18–2 பிரிவுப்படி இவர் கைது செய்யப்பட்டார். அவரை இன்னொரு குற்றத்திலும் மாட்டிவிட சர்க்கார் விரும்பினர். பிரசிடென்ஸி மாஜிஸ்ட்ரேட்டின் முன் விசாரணை ஆரம்பமானபோது, பப்ளிக் பிராஸிகியூடர் ராய்பகதூர் தாரக்நாத் சாது, முற்கூறிய செக்ஷன்கீழ் மௌலானா மீதிருந்த வழக்கை வாபஸ் வாங்கிக்கொண்டு, இந்தியன் பீனல்கோடு செக்ஷன் 124-A (ராஜத்வேஷப்) படி ஒரு வழக்கைத் தாக்கல் செய்தார். 1921-ம் வருஷம் ஜூலை மாதம் 1, 15 தேதிகளில் கல்கத்தா மிர்ஜாபூர் பார்க்கில் ஆக்ஷேபகரமான பிரசங்கங்கள் செய்தாரென்பது இவர் மீது சுமத்தப்பட்ட குற்றச்சாட்டு. விசாரணை நாட்களில் கோர்ட்டுக்கு உள்ளேயும் வெளியேயும் கூட்டங் கூட்டமாக ஜனங்கள் திரண்டு நின்றார்கள். கோர்ட்டு அறைக்குள் மௌலானா கொண்டுவரப்பட்டவுடன் அங்கே பிரசன்னமாயிருக்கும் லாயர்களும், பார்வையாளர்களும், அவருக்கு மரியாதை செய்வதற்காக எழுந்து நின்றார்கள். கோர்ட் ஹால் “வந்தேமாதரம்! அல்லாஹூ அக்பர்!” என்ற கோஷங்களால் எதிரொலித்தது. ஆனால், இந்த ஆர்ப்பாட்டங்கள், அதிகார வர்க்கத்தின் கண்ணையுறுத்தின. எனவே, இவற்றைத் தவிர்ப்பதற்காக, சிவில் பிரசிடென்ஸி ஜெயிலுக்கு வழக்கை மாற்றி, ஜெயிலுக்குள்ளேயே விசாரணையை நடத்த ஏற்பாடு செய்தார்கள். பார்வையாளர்

யாரும் உள்ளே அனுமதிக்கப்படவில்லை, முதல் நாள் பத்திரிகை நிருபர்கள்கூட அனுமதிக்கப்படவில்லை. பிப்ரவரி மாதம் 9-ந் தேதி முற்பகல் 12 மணிக்கு, மாஜிஸ்ட்ரேட் மௌலானாவை ரகசியமாகக் கொண்டுவரச் செய்து இவருக்கு ஒரு வருஷக் கடுங்காவல் தண்டனை விதித்தார். தீர்ப்பையும் தண்டனையையுங் கேட்ட மௌலானா புன்முறுவலுடன், "நான் எதிர்பார்த்ததைவிட ரொம்பக் குறைவு" என்று கூறினார்.

மாஜிஸ்ட்ரேட்டின் தீர்ப்பைக் கேட்ட பீகம் ஆஜாத் கீழ்க்கண்ட தந்தியை காந்திஜிக்கு அனுப்பினார். கல்கத்தா மத்தியதந்தி ஆபீஸ் அத்தந்தியை யனுப்ப மறுத்து விட்டது. தந்தி வருமாறு :—

"என் கணவரான மௌலானா அபுல்கலாம் ஆஜாத்தின் வழக்கில் இன்று தீர்ப்பளிக்கப்பட்டது. அவருக்கு ஒரே ஒரு வருஷக் கடுங்காவல் தண்டனைதான் விதிக்கப்பட்டது. நாங்கள் எதிர்பார்த்து ஆயத்தமாயிருந்ததைவிட இது அதிசயிக்கத்தக்க வகையில் ரொம்பக் குறைவாயிருக்கிறது. தேச சேவைக்குச் சிறைவாசமும் தண்டனையும் பரிசாக இருக்குமானால், அவருக்கு நியாயம் வழங்கப்படவில்லை யென்பதை நீங்கள் ஒப்புக்கொண்டுதான் ஆக வேண்டும். இன்று அவருக்குக் கிடைத்திருப்பது, அவர் எந்தத் தண்டனைக்கு உரியவரோ அதில் அற்ப பாகங்கூட அன்று.

"இச்சமயத்தில், இரண்டு கட்சிகளின் நிலைமையும், ஓர் ஒப்பந்தத்துக்கு வரக்கூடியதாக இல்லை; ஆகையால் நாம் செய்யவேண்டிய வேலை நம்மை நாம் ஆயத்தம் செய்து கொள்வதே; இன்று முதன்மை வகிப்பதுபோல், இனியும் வங்காளம் முதன்மை வகிக்கும்; பர்தோலியுடனும், பிற இடங்களுடனும் தயவு செய்து வங்காளத்தின் பெயரையும் சேர்த்துக் கொள்ளுங்கள்; ஒப்பந்தத்துக்குக் காலம் வந்தால் எங்களுடைய விடுதலைக்கு எவ்வித முக்கியத்துவமும் அளிக்கப்படக்கூடாது; எங்கள் விடுதலைப் பேச்சு ஒரு மூலையில் ஒதுக்கித் தள்ளப்பட வேண்டும்; ஒப்பந்தத்தின் நிபந்தனைகள், அவைகளின் குண குணங்

களைப்பற்றியே பரிசோதிக்கப் படவேண்டும். மேற்கண்ட செய்தியை நான் தங்களுக்குத் தம் வந்தனத்துடன் அனுப்பவேண்டுமென அவர் விரும்பினர்''

தம் பர்த்தாவின் தேச சேவைக்காக அவருக்குக் கிடைத்த சிறைத் தண்டனை போதாதென்று கூறிய இவ் வீரப் பெண்மணிதான், 1943-ல் ஏப்ரல் மாதம் 9-ந் தேதி வெள்ளிக்கிழமை காலை 9 மணிக்கு, கல்கத்தாவில் காலமானர். காச நோயால் பீடிக்கப் பட்டு வாடிக் கொண்டிருந்த அம் மாதரசி தம் அந்திய காலத்தில்கூட, தம் கிடைத்தற்கரிய கணவரைக் காணக் கொடுத்து வைக்கவில்லை. தம் ஒப்பற்ற பர்த்தாவை—அறிவுக்களஞ் சியத்தை—ஆற்றலின் ஏற்றை—தேச சேவைக்காக அர்ப் பணம் செய்துவிட்டார். "என் நாட்டின் சுதந்திரத்தை யடைந்தே தீருவேன்" என்று கூறிய குற்றத்துக்காக—பாபத்துக்காக—மௌலானு சிறைவாசம் மாத்திரம் அனு பவிக்கவில்லை; கொடிய—கற்பனை செய்து பார்ப்பதற்குக் கூட நடுங்கக்கூடிய—நரக வேதனையையும் அவர் அனு பவித்தார். தம் வீரமனைவி மரணப் படுக்கையில் கிடக் கும்போது கூடத் தாம் அருகிலிருக்க முடியாதபடி செய்து விட்டது தமது சேவை என்பதை நினைக்கும்போது இவர் உள்ளம் என்ன பாடுபட்டிருக்கும்! நரக வேதனை கூட அதற்கு நிகராவது சந்தேகமே. பிரிந்துபோகும் அவ்வம்மையின் ஆவிதான் இதைக்குறித்து என்ன வேதனையுற்றதோ? ஆனல், இந்த அடிமை நாட்டின் சேவைக்காகத் தம் அருமை மனைவியின் உயிரை மாத்திர மல்ல, தம்முயிரையும் தியாகம்செய்ய மௌலானு ஆயத் தமாயிருக்கிருர். தேச சேவை யென்ருல்—சுதந்திர தேவியின் பணி யென்ருல் — ஆசையை அறுத்தெறிய வேண்டும்; அன்பின் ஊற்றைத் திடமாக அடைத்துக் காக்க வேண்டும்; பற்றை வேருடன் பறித்தெறிய வேண்டும்! இந்தப் பலிகளுக்கெல்லாம் பிறகுதான் சுதந் திர தேவியின் கோயிலில் அடியெடுத்து வைக்கமுடியும். இவ்வடிமை நாட்டில் பிறந்த பாபத்துக்கு இவ்வளவு பிராயச்சித்தங்களும் போதா. இறுதிப் பிராயச்சித்தம்

இன்னுயிரே. இந்த வீர மாதர்சியின் ஆன்மா சாந்தி அடைவதாக!

மௌலானா கோர்ட்டில் சமர்ப்பித்த அறிக்கை சரித்திரத்திலேயே பிரசித்தி பெற்றது. சத்தியாக்கிரகிகளால் சமர்ப்பிக்கப்பட்ட அறிக்கைகள் யாவற்றிலும் அது ஒரு தனிச் சிறப்பு வாய்ந்தது. எதிர் பார்க்கப்பட்டது போல், மௌலானாவின் மெருகிடப்பட்ட உர்துவிலேயே அது எழுதப்பட்டிருந்தது. அதன் ஆங்கில மொழிபெயர்ப்பு மாத்திரம் நெருக்கமாக டைப் செய்யப்பட்ட முப்பது பக்கங்களைக் கொண்டது. ஆனால் அந்த உர்து அறிக்கையின் முழு அழகையும் ஆங்கில மொழிபெயர்ப்பிலே கொண்டுவர முடியவில்லை. "கிலாஃபத்தைப் பற்றியும், தேசியத்தைப்பற்றியும் மௌலானா கொண்டுள்ள கருத்துக்களை விளக்கும் ஒரு வசீகர மிக்க பிரபந்தம்" என்றும், "ஆயுள் முழுதும் பராதீனத் தண்டனையை அளிக்கக்கூடிய ஒரு உபந்யாசம்" என்றும் காந்திஜி அதைப் பாராட்டினார். சரியான அரசியற் கல்வியையும் அந்த அறிக்கை புகட்டுகிறதென்றும் அவர் கூறினார். முன்னே, நாம் கூறியது போல், இவர் எந்த ஆங்கிலப் பள்ளிக்கும் போகவில்லை; வீட்டிலிருந்துகொண்டு தாமே ஆங்கிலம் கற்றுக்கொண்டார். இந்த அறிக்கை அவருடைய பிரமிக்கத் தக்க சரித்திர ஞானத்தையும், நுணுக்கமான தர்க்கத்திறமையையும், தாய் நாட்டுச் சேவையில் துன்பப்படுவதற்கான உறுதியையும் வெளிப்படுத்துகிறது. இருபத்திரண்டாண்டுகள், அவ்வறிக்கையின் வேகத்தையும் விருவிருப்பையும் சற்றுங் குறைத்துவிடவில்லை. அவ்வறிக்கையிலிருந்து சில பாகங்கள் இங்கே தரப்படுகின்றன:

"தற்கால நிலைமையிலுள்ள அதிருப்திக்கும் ஏமாற்றத்துக்கும் ஒத்துழையாமையே அறிகுறியாகும். பூரண மாறுதலை யுண்டுபண்ண வேண்டுமென்ற உறுதியை இவ் ஏமாற்றம் பிறப்பித்தது. ஒரு மனிதனுடைய ஒத்துழையாமை, சர்க்காரின் நீதியில் அவனுக்குள்ள அதிருப்தியையும், அநீதியின் அடிப்படையான சக்தியை அவன் ஏற்றுக்கொள்ள மறுப்பதையுமே காண்பிக்கிறது.

முடிவில், ஒரு மாறுதலைத் தவிர அவனுக்கு வேறு வழி தோற்றவில்லை......

"எவ்வெப்போதெல்லாம் ஆளும் அதிகாரவர்க்கம் சுதந்திரத்திற்கும், நீதிக்குமெதிராகப் போர் தொடங்குகிறதோ, அவ்வப்போதெல்லாம் நியாயஸ்தலங்களே மிகச் சுலபமானவையும் தீங்கில்லாதவையுமான ஆயுதங்களாக உபயோகிக்கப்பட்டிருக்கின்றன என்பதற்குச் சரித்திரம் சான்று பகர்கிறது. நியாயஸ்தலங்களின் அதிகாரம், நியாயம் அநியாயம் ஆகிய இரண்டுக்கும் உபயோகப்படக்கூடிய ஒரு சக்தியாகும். நியாயமான அரசாங்கமொன்றின் கையில் அது தர்மத்தை நிலைநாட்டுதற்குரிய சிறந்த சாதனமாகிறது; அக்கிரமமும் கொடுமையும் நிறைந்த அதிகார வர்க்கத்தின் கையில், அநியாயத்துக்கும் குரோதத்துக்கும், இதைவிட உபயோகமான ஆயுதம் வேறொன்றில்லை.

"உலக சரித்திரத்திலே, அநீதியின் ஆட்சியை நிலைநிறுத்துவதில் யுத்தகளங்களுக்கு அடுத்தபடியாகப் பிரதானப் பங்கெடுத்துக்கொண்டவை நியாயஸ்தலங்களே. மதங்களை ஸ்தாபித்த தெய்வ புருஷர்களிலிருந்து, விஞ்ஞான ஆராய்ச்சியில் முதன்மை வகித்துப் புதிய சாஸ்திரீக உண்மைகளைக் கண்டுபிடித்தவர்கள் வரையில், நியாயஸ்தலங்களில் குற்றவாளிகள் மாதிரி நிறுத்தப்படாத புண்ணிய புருஷர்களோ தர்மாத்மாக்களோ இல்லை.

"நியாய ஸ்தலங்களில் நடைபெறும் அநியாயங்கள் ஒரு முடிவடையாத ஜாப்தாவாக இருக்கின்றன. நியாயத்துக்கு இழைக்கப்பட்ட அநியாயங்களைக் குறித்து, சரித்திரம் தன் ஒப்பாரியை இன்னும் முடித்த பாடில்லை. அந்த ஜாப்தாவிலே ஒரு அந்நிய கோர்ட்டிலே நிறுத்தப்பட்டு, குற்றவாளிகளுக்கெல்லாம் கேவலமான குற்றவாளியைப்போல் தண்டிக்கப்பட்ட தெய்வாத்மாவான இயேசு நாதரைக் காண்கிறோம். தன்னுடைய காலத்தில் எல்லாரையும்விட உண்மையுள்ளவனாக இருந்ததைவிட வேறெக்குற்றத்தையும் செய்யாததற்காக, விஷமிட்டுக்

கொல்லப்படும்படி தண்டனை விதிக்கப்பட்ட சாக்ரடிஸை யும் அதே ஜாப்தாவில் காண்கிறோம். உண்மைக்காக உயிரைத் தியாகம் செய்யத் துணிந்து, தன் ஆராய்ச்சியிலும் சோதனைகளிலும் கண்டவற்றை நம்புவது அப்போது ஆட்சியிலிருந்த அதிகாரவர்க்கத்துக்குக் குற்றமாகும் என்ற அர்த்தமற்ற காரணத் துக்காக, அவற்றை விட்டொழிக்க மறுத்த வான சாஸ்திரி கலிலியோ (Galileo) வையும் நாம் சந்திக்கிறோம். அத்தகைய குற்றவாளிகள் நின்றுகொண்டிருந்த கூண்டின் மகத்தான வரலாற்றைப் பற்றிச் சிந்திக்கும்போதும், இன்று அத்தகைய இடத்தில் நிற்கும் பேறு எனக்குக் கிடைத்திருக்கிறதென்பதை யுணரும்போதும், என் ஆத்மா நன்றிப் பிரவாகத்தில் மூழ்கி ஆண்டவனை வாழ்த்துகிறது.”

இவ்வாறாக இயேசுநாதரிலிருந்து சத்தியாக்கிரகிகள் வரையிலுள்ள உயர்ந்த வமிச பரம்பரையில் தான் சேர நேர்ந்ததாலுள்ள கௌரவத்தைப் பெருமிதத்தோடு கூறிவிட்டு, மேலும் தம் புனிதக் கடமையைப் பதற்றமின்றி மௌலானா விவரிக்கிறார்:—

“தன்னுடைய சுய அஜாக்கிரதையினாலும், பல வீனத்தினாலுமே நசித்துப் போய்க்கொண்டிருக்கிற ஒரு தேசத்தின்மீது, எப்போதும், சாதாரணமாக, சக்தி வாய்ந்த தனி மனிதர்கள் நிர்மாணித்துக் கொள்ளும் அதிகாரத்தினின்றும், இன்றைய இந்திய அதிகார வர்க்கம் எந்த விதத்திலும் குறைந்ததோ, வேறுபட்டதோ அல்ல. அப்படி ஆக்கிரமித்த அதிகாரவர்க்கம் தேசிய எழுச்சியையோ, நியாயம், சீர்திருத்தம், அபிவிர்த்தியாகியவற்றுக்கான கிளர்ச்சியையோ, அனுமதிக்காமலிருப்பது வழக்கமேயாகும். அத்தகைய கிளர்ச்சி, ஆக்கிரமிப்புக்கு அழிவைத் தேடுவது தவிர்க்க முடியாத இயற்கையாதலால், எத்தகைய கிளர்ச்சியையும் சட்டப்படி நிர்மாணிக்கப்பட்ட சர்க்காருக்கு விரோதமானதெனக் கூறி அதை நசுக்கவே பார்க்கும். எவ்வளவுதான் தன் வீழ்ச்சி, நியாயத்தின் முடிவான நன்மைக்கு உகந்ததாயிருப்பினும், அந்த வீழ்ச்சியைக் கொண்டுவரக் கூடிய

இயக்கங்களுக்கு எந்த அதிகாரமும் பணிந்து போகாது. இம்மாதிரி நிலைமை வாழ்வுக்காக நடக்கும் ஒரு போரே யாகும்; இருதரப்பாரும் தத்தம் கொள்கைகளுக்காகச் சண்டை செய்கிறார்கள். விழிப்படைந்த தேசமொன்று தான் எதைத் தன்னுடைய பிறப்புரிமையாகக் கருது கிறதோ, அதை அடையப் பிரயத்தனப்படுகிறது; ஆட்சியிலிருக்கும் அதிகாரவர்க்கம் தன்னுடைய திட மான வழியிலிருந்து ஓர் அங்குலமும் அசைய மறுக்கிறது. இரண்டாவதாகக் கூறப்பட்ட கட்சி தன்னுடைய விரோதிகளைப் போலவே, தன்னுடைய வாழ்வுக்காகவே சண்டையிடுவதால், எவ்விதக் குற்றச் சாட்டுக்கும் அது ஆளாக முடியாதென்றும், உலகில் அதன் ஆட்சி நியா யத்தை நிலைநாட்டுவதற்கு இடைஞ்சலாக இருக்கிற தென்பது முற்றிலும் தற்செயலான விஷயமேயென்றும் வாதாடக்கூடும். மனித இயற்கையின் உண்மைகளையும், அவற்றிலிருந்து பிரிக்கமுடியாத பலாபலன்களையும் நாம் மறுக்கமுடியாது. நன்மையைப் போலவே தீமையும் இவ்வுலகில் வாழ விரும்புகிறது; தன் வாழ்வுக்காகப் போர்புரிகிறது. இந்தியாவிலும் தகுதி வாய்ந்தவர்கள் உயிர் பிழைப்பதற்கான போர் ஆரம்பமாகிவிட்டது. ஆகையால், நீதியின் பெயராலும், சுதந்திரத்தின் பெயராலும் தன்னுடைய எல்லையற்ற அதிகாரத்தைக் குலைக்க முயலும் கிளர்ச்சியைவிட இன்று ஸ்தாபிக்கப் பட்டிருக்கும் அரசாங்கத்துக்கு, பெரிய குற்றம் வேறெதுவும் நிச்சயமாக இருக்க முடியாது. இத்தகைய கிளர்ச்சிக்காக நான் குற்றவாளியாக இருப்பதோடல் லாமல், அத்தகைய கிளர்ச்சியின் விதையை இந்நாட்டின் இதயத்தில் விதைத்து, இந்தப் புனிதமான அதிருப்தியைப் பிறப்பித்து வளர்த்துவரும் முன்னோடிகளின் கூட்டத்தில் நானும் ஒருவன் என்பதை நான் பூரணமாக ஏற்றுக் கொள்ளுகிறேன்.”

பின்னர், ஒரு நாட்டின்மீது அந்நியர் ஆதிக்கம் செலுத்துவதால் விளையும் தீங்குகளை மௌலானா விவரிக்கிறார் :—

"சுதந்திரம், மனிதனுக்குக் கடவுளால் அளிக்கப்பட்டதும், இயற்கையானதுமான உரிமை யென்பது என் நம்பிக்கை. ஆண்டவனின் சேவகர்களைத் தன்னுடைய அடிமைகளாக்கிக் கொள்வதற்கு, எந்த மனிதனுக்குமோ, எந்த அதிகார வர்க்கத்துக்குமோ, உரிமை யில்லை. 'அடிமைத்தனம்,' 'கீழ்மை'யாகிய வார்த்தைகளுக்குள்ள 'இடக்கரடக்கல்' எவ்வளவு வசீகரமாயிருந்த போதிலும் அடிமைத்தனம் அடிமைத்தனமே! அது ஆண்டவனுடைய விருப்பத்துக்கும், ஆணைக்கும் அடியோடு முரண்பட்டது. எனவே அடிமைத் தளையிலிருந்து எங் நாட்டை மீட்பதை என்னுடைய பொறுப்பான கடமையாக நான் கருதுகிறேன். 'சீர்திருத்தம்,' 'படிப்படியாக அதிகாரத்தை மாற்றுதல்' என்பது போன்ற அபகீர்த்தியடைந்த போலி வார்த்தைகளால் என்னுடைய திட்டமான, ஐயந்திரிபுகளுக்கிடமற்ற நம்பிக்கையில் மயக்கத்தையோ, ஏமாற்றத்தையோ கற்பிக்க முடியாது. சுதந்திரம் மனிதனின் பிரதான உரிமையாக இருப்பதால், அதன் விநியோகத்துக்கு வரம்புகள் கட்டுவதோ, தவணைகள் விதிப்பதோ, எந்த மனிதனுடைய பாத்தியதையாகவு மிருக்க முடியாது. ஒரு தேசம் தன் சுதந்திரத்தைப் படிப்படியாகத்தான் அடையவேண்டுமெனக் கூறுவது, சொந்தக்காரனொருவன் தன் சொத்தைத் துண்டுதுண்டாகத் தான் பெறவேண்டுமென்பதையும், கடன் கொடுத்தவன் தன் பணத்தைச் சிறிது சிறிதாகத்தான் கொள்ளவேண்டுமென்பதையும் போன்றதே......எங்களுடைய சொத்தை அபகரித்துக் கொண்ட ஒருவன் என்ன தாராளக் காரியங்கள் செய்துவிட்டபோதிலும், அவன் அபகரித்தது முற்றிலும் அநியாயமானதென்பது தொடர்ந்து இருந்துகொண்டேயிருக்கும்.

"தீமையை நல்லது கெட்டது என்று பாகுபடுத்த முடியாது. நியாயப்படி செய்யக் கூடிய காரியம், தீமையின் அளவை நிர்ணயிப்பதொன்றே. உதாரணமாக, மிகக் கொடிய கொள்ளை, கொடுங்கொள்ளை யெனச் சொல்ல

முடியுமே தவிர, இந்தக் கொள்கை நல்லது, அந்தக் கொள்கை கெட்டது என்று யாரால் கூறமுடியும்? எனவே, இத்தகைய ஆக்கிரமிப்புக்கு என்னுல் எவ்வித நியாயத்தையும் கற்பித்துப் பார்க்க முடியவில்லை. ஏனெனில், அதனுடைய இயற்கையிலேயே அது அக்கிரமமானது."

இதன் பிறகு கிலாஃபத்தின் விளக்கமும், முஸ்லிம்களின் கடமையும் தொடர்கிறது :—

"ஒரு மனிதன், ஒரு இந்தியன், என்ற முறையில் என் கடமை இதுவாகும்; ஆனுல் என் மதக் கட்டளைகளும் இதே கடமையை என்மீது சுமத்தி யிருக்கின்றன. பார்க்குமிடத்து, மனிதனுடைய உரிமைகளைப் போதிப்பதற்கு மற்றொரு பெயராக என் மதம் அமைந்திருக்கிறதென்பதே என்னுடைய மதத்தின் சத்தியத்துக்குத் தலைசிறந்த சாட்சிய மென்பது என்கருத்து. நான் ஒரு முஸ்லிம் ; ஒரு முஸ்லீமாக இருக்கும் காரணத்தினுல் இது என் மதக்கடமையாகி விட்டது. தனிமனிதனுடைய ஆதிக்கத்தையோ, கூலிக்காக வேலை செய்யும் ஒரு சிறிய கூட்டத்தைக் கொண்ட ஆதிபத்தியத்தையோ, நியாயமான ஆதிபத்தியமாக இஸ்லாம் ஒருகாலமும் ஏற்றுக்கொள்ளவில்லை. ஒரு பரிபூரணமாக்கப்பட்ட சுதந்திரத் திட்டத்தையும், ஜனநாயகத் திட்டத்தையுமே இஸ்லாம் நிலைநாட்டுகிறது. மனிதவர்க்கத்தினிடமிருந்து பறிபட்டுப்போன சுதந்திரத்தை மனிதவர்க்கத்துக்காகத் திரும்பப் பெறுவதற்காகவே, இஸ்லாம் அனுப்பப்பட்டது. முடிமன்னர்களும், அந்நிய ஆதிக்கங்களும், சுயநல மதப் புரோகிதர்களும், சக்திவாய்ந்த சிறிய கூட்டத்தார்களும், ஒருவரைப்போல் எல்லோரும், மனிதனுடைய சுதந்திரத்தை யபகரித்துவிட்டார்கள். உடைமையும், பலமுமே மிக உயர்ந்த நியாயத்தையளிக்கின்றன என்ற நம்பிக்கையை அவர்கள் ஆசையுடன் வளர்த்து வந்தார்கள். இஸ்லாம் தோன்றியகணமே, மிக உயர்ந்த நியாயம் பலமன்று ; நியாயமேயென்று அறிவித்தது. கடவுளின் சிருஷ்டிகளை ஏவலாளிகளாகவும் அடிமைகளாகவும் ஆக்கும் உரிமை அந்தக் கடவுளுக்கேயன்றி வேறு யாருக்குமில்லை. எல்லா மனிதர்களும் சமம் ; அவர்

களுடைய அடிப்படையான உரிமைகள் ஒரே ரகத்தைச் சேர்ந்தவை. எல்லாரையும்விட யாருடைய செயல்கள் மிக நியாயமானவையாக இருக்கின்றனவோ, அவனே பிறரைவிடச் சிலாக்கியமானவன்.

"இஸ்லாத்தின் தூதருடையவும், - கலீபாவுடையவுமான ஆதிபத்யம், பரிபூரணமாக்கப்பட்ட ஜனநாயகச் சமத்துவத்தின் ஒரு சிறந்த கொள்கையாகும்; தேச முழுதினுடைய சுதந்திரத் தீர்ப்புடனும், ஒற்றுமையுடனும், வாக்குரிமையுடனும், தேர்தலுடனுந்தான் அது உருப்பெற முடியும். ஒரு ரிபப்ளிக் (Republic)கின் தலைவனே, அல்லது அரசனே, ஒரு நியமனஞ் செய்யப்பட்ட கலீபாவைப் போலிருப்பதற்கு இதுதான் காரணம். கிலாஃபத் என்பதற்கு நேரடியான பொருள் "பிரதிநிதித்துவம்" என்பதேயாகும்: இதைவிடக் குறைவாகவோ, கூடுதலாகவோ வேறெதுவுமில்லை. எனவே, ஒரு கலீபாவுக்குள்ள அதிகாரம் முழுதும் இந்தப் பிரதிநிதித்துவத் தன்மையைச் சார்ந்ததே; இப்பிரநிதித்துவ அதிகாரத்துக்குப் புறம்பாக அவருக்கு எந்த ஆட்சியுரிமையுமில்லை.

"ஆகையால், தேசத்தின் விருப்பத்துக்கும், வாக்குரிமைக்கும் பூரண சந்தர்ப்பம் அளிக்காத ஒரு முஸ்லீம் ஆட்சியின் நியாயத்தைக்கூட ஏற்றுக்கொள்ள மறுக்க வேண்டியது இஸ்லாத்தின்படி முஸ்லிம்களின் கடமையாகும்: அப்படியிருக்க ஒரு அந்நிய ஆதிக்கத்தைப்பற்றி இஸ்லாத்தின் கட்டளை யெப்படியிருக்குமென்று கூறுவது முற்றிலும் அவசியமற்றதாகும். முடியாட்சியின் மேலோ, சொற்ப ஜனாதிபத்தியத்தின் (oligarchy) மேலோ, நிறுவப்பட்டதான ஒரு முஸ்லிம் சர்க்கார் இன்று இந்தியாவில் ஸ்தாபிக்கப்படுமானால், அத்தகைய சர்க்காரின் ஆட்சியையும் எதிர்க்கவேண்டியது ஒரு முஸ்லிம் என்ற முறையில் என் பிரதானக் கடமையாகும். நான் அந்த சர்க்காரையும் கொடுங்கோன்மை யாட்சியெனக் கூறி, அதை ஒழிக்கவேண்டு மெனக் கோருவேன்.

"ஆனால் இஸ்லாமிய ஆதிபத்யம் சம்பந்தமான இம் மூலக்கொள்கை, பிற்காலத்திய முஸ்லிம் மன்னர்களின்

சுயநலங்காரணமாகவும், சொந்த அதிகார அவாவின் காரணமாகவும், அதனுடைய பரிசுத்தத் தன்மையோடு முழுதும் கையாளப்படவில்லை யென்பதை நான் வெளிப்படையாக ஒப்புக்கொள்ளுகிறேன். பண்டைய ரோம் சக்கரவர்த்திகள், பாரசீக ஷாக்கள் இவர்களுடைய சக்தி மிகுந்த படாடோபமான துபெரிய முடியரசு - ஏகாதிபத்தியங்களின் வஞ்சகக் கௌரவத்தை நோக்கி, முஸ்லிம் மன்னர்களைப் பலமாக ஈர்த்தது. கந்தலாடைகளை யணிந்துகொண்டிருந்த கலீபாக்களினுடைய எளிய பெருமையைவிட, கெய்ஸர் அல்லது கோஸ்ரோவினுடைய கம்பீர உருவை, அவர்கள் பெரிதாக மதிக்க ஆரம்பித்தார்கள். அத்தகைய முடியாட்சியின் கொடுமைகளையும் அக்கிரமங்களையும் பகிரங்கமாக எடுத்துக்கூறி, தாங்கள் கடமையென்னும் முள்ளடர்ந்த பாதையிலே சென்றுகொண்டிருக்கும்போது எதிர்ப்பட்ட இன்னல்களையும் துன்பங்களையும் ஆனந்தத்துடனும் பெருமிதத்துடனும் சகித்துக்கொண்டு தங்கள் உயிரையும் தியாகம் செய்த ஒரு சில உண்மையான முஸ்லிம்கள் ஒவ்வொரு ராஜவமிச காலத்திலும், ஒவ்வொரு ஆட்சியிலும் தோன்றத் தவறியதில்லை.

"இஸ்லாத்தின் புண்ணிய தீர்க்கதரிசி கீழ்க்கண்ட தத்துவத்தை முஸ்லிம்களுக்கு உபதேசித்துச் சென்றிருக்கிறார்: 'கொடுங்கோன்மையாட்சிக்கு முன்னால் எவன் சத்தியத்தைப் பகிரங்கமாகக்கூறி, எவனுக்கு அச்செயலின் காரணமாக மரண தண்டனை விதிக்கப்படுகிறதோ அவனுக்கே எல்லாவற்றிலும் சிறந்த மரணம் கிடைக்கிறது.' 'ஆண்டவனையும், தாங்கள் எவற்றைச் சத்தியமெனக் கருதுகிறார்களோ அவற்றையுந்தவிர, வேறுயாருக்கும் அஞ்சாதவர்களும், அத்தகைய சத்தியத்தைப் பகிரங்கமாக வெளிப்படுத்துவதில் எந்தக் கட்டுப்பாட்டையும் பொருட்படுத்தாதவர்களுமே உண்மையில் முஸ்லிம்கள்' என், இஸ்லாத்தின் வேதமாகிய திருக்குர்-ஆன், முஸ்லிம்களின் மிகஉயர்ந்த குணத்தை நிர்ணயிக்கிறது. மேலும் முஸ்லிம்களின் தேசிய விசேஷ குணத்தை அது கீழ்க்

கண்டவாறு நிர்ணயிக்கிறது: 'கடவுளின் பூமியின்மேல் அவர்கள் சத்தியத்திற்குச் சாட்சிகளாயிருக்கிறார்கள்.' ஆகையால், அவர்கள் முஸ்லிம்களாக இருக்கும்வரையில் இப்பகிரங்கச் சாட்சியம் கொடுக்காமல் அவர்களால் இருக்கமுடியாது. உண்மையில் திருக்குர்-ஆன் அவர்களைச் சாட்சிகளாகவே, அதாவது சத்தியத்துக்குச் சாட்சியஞ் சொல்லுபவர்களாகவே நியமித்திருக்கிறது. இஸ்லாத்தின் தூதுவர் யாரிடமிருந்தாயினும் சன்மார்க்க வாக்குறுதி வாங்கிக் கொண்டாரானால், அப்பத்திரத்தில் கீழ்க்கண்ட நிபந்தனை யொன்றும் காணப்படும்: 'நான் எங்கே எந்த நிலையிலிருக்க நேர்ந்தாலும், சத்தியத்தையே கூறுவேன்.'

"அவர்களுடைய தேசீய சரித்திரம் முஸ்லிம்களுக்கு, சத்தியத்தைப் பேசும் விஷயத்தில் கற்பிக்கும் ஒரு பிரதான பாடத்தை, ஒரு புரட்சிக்காரக் கைதியின் உடம்பில் ஒவ்வொரு அங்கத்தையும் வெட்டும்படி ஒரு எதேச்சாதிகார மன்னன் விடுத்த உத்தரவை அந்தக் கைதி ஏற்றுக் கொண்ட முறையிலே காணலாம். அந்தக் கொடுங்கோலனுடைய அக்கிரமத்தைப்பற்றிப் பகிரங்கமாகப் பேசினான் என்பதே அக் கைதியின்மேல் சுமத்தப்பட்ட குற்றச் சாட்டு. ஒரு குன்றைப்போல அவன் உறுதியாக நின்று, தண்டனை முழுவதையும் படிப்படியாக ஏற்றுக்கொண்டான்; ஆனால் அவன் நா துண்டிக்கப்படும் வரையில் அவ் எதேச்சாதிகாரி ஒரு கொடுங்கோலன் என்பதைக் கூறிக்கொண்டேயிருந்தது. இது சக்கரவர்த்தி அப்துல் மாலிக்கின் காலத்தில் நடந்த ஒரு சம்பவம். அவருடைய சாம்ராஜ்யம் சிரியாவிலிருந்து சிந்து வரையிலும் பரவியிருந்தது. இப்பயங்கரமான தண்டனையோடு ஒப்பிட்டுப் பார்க்கும்போது, இந்த 124-A செக்ஷன்படி அளிக்கப்படும் தண்டனையை யாராவது பொருட்படுத்த முடியுமா? முஸ்லிம்களின் தார்மிகச் சிதைவும், உண்மையான இஸ்லாமிய வாழ்க்கையை அவர்கள் கைவிட்டதும்தான் அவர்களுடைய இன்றைய வீழ்ச்சி நிலைக்குக் காரணம் என்பதை நான் ஒப்புக்கொள்கிறேன்.

"நான் இவ்வாக்கியங்களை யெழுதிக்கொண்டிருக்கும் போதே தங்களுடைய பலவீனத்தால் இக்கொடுங்கோன்மைக்குத் தலைசாய்க்கும் அநேக முஸ்லிம்கள் இந்தியாவிலிருக்கிறார்களென்பதை நான் அறிவேன். ஆனால், சில குறிப்பிட்ட கொள்கைகளின்படி நடப்பதற்கு மனிதன் தவறிப்போவது, அக்கொள்கைகளின் சத்தியத் தன்மையைப் பொய்ப்பித்து விடாது.

"இஸ்லாத்தின் சித்தாந்தங்கள் அதன் வேதத்தில் அமைந்திருக்கின்றன. முஸ்லிம்கள் சுதந்திரத்தை விற்றுவிட்டு வாழ்க்கை நடத்துவதை, இவை எந்தச் சந்தர்ப்பத்திலும் அனுமதிக்கவில்லை. ஒரு உண்மையான முஸ்லிம், ஒன்று - தன் சுதந்திரத்தைக் காப்பாற்றிக்கொள்ள வேண்டும், அல்லது-தன்னைத்தானே பலியிட்டுக்கொள்ள வேண்டும்: அவன் மதத்தின்படி அவனுக்கு வேறு வழியில்லை. இன்று, முஸ்லிம்கள், தங்கள் நாட்டை அடிமைத் தளையினின்றும் விடுவிப்பதில் தங்கள் சகோதரர்களாகிய ஹிந்துக்கள், சீக்கியர்கள், கிறிஸ்தவர்கள், பார்ஸிகளோடு சேர்ந்து பூரணப் பங்கெடுத்துக்கொள்ளுவதென்ற முடிவுக்கு வந்துவிட்டார்கள்.

"சென்ற பன்னிரண்டு ஆண்டுகளாக, இடைவிடாது, தங்களுடைய உரிமைகளையும், சுதந்திரத்தையும் கோருவதற்காக என் நாட்டுக்கும் என் சமூகத்துக்கும் நான் பயிற்சி யளித்துக்கொண்டு வருகிறேன். இதைப்பற்றிப் பேசவும் எழுதவும் நான் ஆரம்பித்தபோது எனக்குப் பதினெட்டே வயதுதான். அதற்காக என்னையே நான் தத்தம் செய்துவிட்டேன்; என் ஆயுளின் சிறந்த பாகமாகிய என் இளமை முழுவதையும் இந்த லட்சியத்தின் மீது நான் கொண்ட காதலுக்காகத் தியாகம் செய்தேன். நான்கு ஆண்டுகள் நான் காவலிலிருந்தேன். காவலிலிருக்கும்போதுகூட என்னுடைய வேலையைத் தொடர்ந்து நடத்துவதிலிருந்தும், இத்தேசிய லட்சியத்திற்கு மக்களையழைப்பதினின்றும் நான் பின் வாங்கவில்லை. இதுவே என் வாழக்கையின் லட்சியம்; நான் வாழ்வதாயின், இந்த ஒரே குறிக்கோளுக்காகவே வாழ

விரும்புகிறேன். குர்—ஆன் கூறுவதேபோல், 'என் பிரார்த்தனைகள், அனுஷ்டானங்கள், வாழ்வு, சாவு, யாவும் அகில உலகுக்கும் நாயகனாகிய என் ஆண்டவனுக்கே!' இந்திய முஸ்லிம்களின் அரசியல் - உலகில் ஒரு மகத்தான புரட்சியை யுண்டுபண்ணி, அவர்களைப் படிப் படியாகத் தேசீய உணர்வெழுச்சியின் சிகரம் வரையில் இன்று தூக்கிச் சென்றிருக்கும் இஸ்லாமிய இயக்கத்தின் இந்தக் கடைசி கட்டத்துக்கு முன்னோடியாயிருப்பவன் நானே. நான் 1912-ல் ஆரம்பித்த அல்ஹிலால் என்னும் உர்து சஞ்சிகை இவ்வியக்கத்தின் சங்கநாதமாக விளங்கிற்று; நான் முன்னே கூறியவைதாம் அதைப் பிரசுரித்ததின் நோக்கம். இந்திய முஸ்லிம்களின் அரசியல், மத வாழ்வில் அந்த மூன்றாண்டுகளில் ஒரு புதிய சூழ் நிலையைச் சிருஷ்டித்தது என்பது ஒரு பிரத்தியட்ச உண்மை.

“நியாயத்துக்காகவும், சுதந்திரத்துக்காகவும் நடக்கும் இப்போரில், நான் அஹிம்ஸா தர்ம முறைப்படி ஒத்துழையாமையைப் பின்பற்றுகிறேன். அடக்கு முறைக்கும், இரத்தக் களரிக்கும், அநீதிக்குமான ஆயுதங்களோடு, எங்களுக்கெதிராக ஒரு அரசாங்கம் நிற்கிறது. ஆனால், ஆண்டவனுக் கடுத்தபடியாக எங்கள் நம்பிக்கையையும், ஆதரவையும் எங்கள் எல்லையற்ற தியாக சக்தியின் மேலும், அசைக்க முடியாத ஆண்மையின் மேலுமே நாங்கள் அஸ்திவாரப்படுத்தியிருக்கிறோம்.

“மகாத்மா காந்தியைப் போலல்லாமல், ஆயுதச் சக்தி என்றுமே ஆயுதச் சக்தி கொண்டு எதிர்க்கப்படக் கூடாது என்பது என் கொள்கையல்ல. இஸ்லாம் பலாத்காரத்தை அனுமதிக்கின்ற இடங்களில், பலாத்காரத்தைப் பலாத்காரத்தினாலேயே எதிர்ப்பதென்பது, ஆண்டவனுடைய இயற்கை நியதிகளுக்கு முழுதும் பொருத்தமானது என்பது என் நம்பிக்கை. ஆனால், அதே சமயத்தில், இந்தியாவை விடுவிப்பதற்காகவும், தற்காலத்துக் கிளர்ச்சிக்காகவும், மகாத்மா காந்தி கூறும் வாதங்களை நான் பூரணமாக ஏற்றுக்கொள்ளுகிறேன்;

அவருடைய நேர்மையில் எனக்கு முழு நம்பிக்கையுண்டு. ஆயுதங்களால், இந்தியா வெற்றிபெற முடியாதென்பதும், அப்படிச் செய்வது விரும்பத்தக்கதல்ல வென்பதும், என் திட்டமான அபிப்பிராயம். இந்தியா அஹிம்ஸையை அடிப்படையாகக் கொண்ட கிளர்ச்சியின் மூலந் தான் வெற்றி பெற முடியும்; இந்தியாவின் வெற்றி தார்மிக சக்தியின் வெற்றிக்கு ஒரு மறக்க முடியாத உதாரணமாக விளங்கும்.''

தம் அறிக்கையின் முடிவில், மௌலானா கூறியதாவது :—"மிஸ்டர் மாஜிஸ்ட்ரேட், கோர்ட்டினுடைய காலத்தை நான் எடுத்துக்கொள்ளப் போவதில்லை. நாம் இருவரும் ஆயத்தம் செய்துகொண்டிருப்பது, சரித்திரத்திலே விநோதமும், போதனையும் பொருந்திய ஒரு அத்தியாயம். இக் கைதிக் கூண்டு எங்களுக்கும், நியாயாதிபதியின் நாற்காலி உங்களுக்கும் வாய்த்திருக்கின்றன. இவ் வேலைக்கு இக் கூண்டு எவ்வளவு அவசியமோ, அவ்வளவு அவசியம் உங்கள் நாற்காலியும் என்பதை நான் ஒப்புக்கொள்ளுகிறேன். இம்மறக்க முடியாத நாடகத்தில் நாம் வந்து, நம் பாகத்தை முடித்து விடுவோமாக. சரித்திராசிரியன் இதற்காக ஆவலோடு காத்துக்கொண்டிருக்கிறான்; எதிர் காலம் நம்மை நோக்கிக்கொண்டிருக்கிறது. இக் கூண்டைத் திரும்பத் திரும்பவும், இடைவிடாமலும் அலங்கரிக்க எங்களுக்கு அனுமதி கொடுங்கள்; நீங்களும் உங்கள் தீர்ப்பை மறுபடி மறுபடியும் எழுதிக்கொண்டே போகலாம். மற்றொரு நியாய ஸ்தலத்தின் கதவுகள் திறக்கப்படும் வரையில், இன்னும் சில காலம், இவ் வேலை தொடர்ந்து நடந்துகொண்டிருக்கும். அந்த மற்றொரு நீதி ஸ்தலம் ஆண்டவனுடைய சட்டத்திற்குரியது. காலமே அந்த நீதி ஸ்தலத்தில் நியாயாதிபதியாக இருந்து தீர்ப்பளிக்கும். இதுவே எல்லாவற்றுக்கும் இறுதியானதாக இருக்கும்.''

மௌலானாவின் அறிக்கை அற்புதமான உர்துவில் தயாரிக்கப்பட்டது. மொழிபெயர்ப்பில் அதனுடைய தனி வேகமும் அழகும் ஒருவாறு குறைந்துவிட்டன.

அறிவு - உல்குக்கு இவ்வறிக்கை அமுதூட்டியதில் ஆச்சரியமில்லை. எனவேதான், இவ்வீரப் பிரகடனம் சரித்திரத்தின் சத்தியப் பிரகடனமாக விளங்குகிறது.

## 7. ஒற்றுமைத் தூதர்

மௌலானா அபுல்கலாம் ஆஜாத் தம்முடைய அபார ஞானத்தாலும், நேர்மையான நடத்தையாலும், நாட்டிலுள்ள எல்லா மக்களின் நம்பிக்கைக்கும் மரியாதைக்கும் உரியவரானார். அவர் ஹிந்துக்களுக்கும் முஸ்லிம்களுக்குமிடையில் மாத்திரம் ஒற்றுமைத் தூதராக இல்லை; காங்கிரஸில் ஏற்பட்ட பிளவுகளுக்கெல்லாம் கூட அவர் ஒற்றுமைத் தூதராக விளங்கினார். 1922-ல் அவர் சிறையிலிருந்து வெளிவந்தவுடன், ஒரே ஆண்டில் இரண்டு உள்நாட்டுக் கலகங்களைத் தவிர்க்க உதவி புரிந்திருக்கிறார்.

1922-பிப்ரவரியில் காந்திஜி சட்டமறுப்பை நிறுத்திவிட்டார்; சௌரி சௌராவில் நடந்த சில பலாத்காரச் செயல்களே இதற்குக் காரணம். ஆனால் காந்திஜியின் இச்செயல் பெரும்பாலோர்க்குத் திருப்தியளிக்கவில்லை. அவர்கள் தங்கள் உற்சாகத்தில் போரை நடத்திக் கொண்டு போகவே விரும்பினார்கள். பண்டித மோதிலால் நேரு, லாலா லஜபத்ராய், தேசபந்து சி. ஆர். தாஸ் ஆகியோர் காந்திஜியின் செயலை மிகவும் அசம்பாவிதமானதெனக் கருதினார்கள். தேசத்தில் ஒரு ஏமாற்றமும், களைப்பும் தோன்றியிருந்தன. எனவே, தேசம் உற்சாகங் குன்றிச் செயலின்மையில் ஆழ்ந்தது. சி. ஆர். தாஸுக்குச் சட்டசபை வேலையில் எப்போதுமே நம்பிக்கையுண்டு. காங்கிரஸ் சட்டசபைகளைக் கைப்பற்றாவிட்டால், பிற்போக்காளர்கள் அங்கே புகுந்து காங்கிரஸ் வெளியில் செய்து கொண்டிருக்கும் உபயோகமான வேலைகளைக் கெடுத்துவிடுவார்கள் என்பது அவர் கருத்து. எனவே, சட்டசபைகளுக்குள் புகுந்துகொண்டு, சர்க்கார் கொண்டுவரும் மசோதாக்களைத் தோற்கடித்துப் பொதுஜனங்களின் அபிப்பிராயம் சர்க்காரின் போக்குக்கு ஆதரவளிப்பதாகவில்லை

யென்பதைப் பகிரங்கமாக அறிவித்தால், பின்னுல் வைஸ்ராயின் விசேஷாதிகாரத்தின் மேல் அம்மசோதாக்கள் சட்டமாக்கப்படும்போது, சர்க்காரின் இவ் எதேச்சாதிகாரச் செயல் உலகமக்களின் கண்டனத்துக்கு ஆளாகுமென்பது அவர் வாதம். எனவே, சட்டசபைகளுக்குள்ளே ஒத்துழையாமையென்பது தேசபந்து தாஸின் திட்டம். காந்திஜி தம் இயக்கத்தை நிறுத்திய பிறகு ஏற்பட்ட ஏமாற்ற நிலையில், மக்களில் சிலர் இத்திட்டத்துக்கு ஆதரவு காட்டினுர்கள். சி. ஆர். தாஸ் எதிர்பார்த்திருந்த சந்தர்ப்பமும் இதுவே.

தம்முடைய "யுவ இந்தியா" (Young India) வில் எழுதிய கட்டுரை யொன்று ராஜத் துவேஷமானதென்ற காரணத்துக்காகக் காந்திஜி சிறையிலிடப்பட்டார். இதே சமயத்தில் காந்திஜியின் ஒத்துழையாமையைப் பூரணமாக ஆதரித்து வந்த சிலர், சி. ஆர். தாஸின் 'சட்டசபைத்திட்ட'த்துக்குத் தேசத்தில் ஏற்பட்டுக்கொண்டு வரும் ஆதரவைக் கண்டார்கள். சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார், ஸர்தார் வல்லபாய் படேல், பாபு ராஜேந்திர பிரசாத், டாக்டர் அன்ஸாரி முதலியோர் இவ்வகுப்பைச் சேர்ந்தவர்கள். இவர்கள் காந்திஜியின் திட்டத்தில் எந்த மாறுதலையும் விரும்பவில்லை. பரிபூரண ஒத்துழையாமையினுல்தான் இந்தியா வெற்றிபெற முடியுமென்பது இவர்களின் கருத்து. அதுவும், காந்திஜி சிறையிலிருக்கும்போது, காங்கிரஸ் தன் போர்முறையை மாற்றிக் கொள்வது என்ற எண்ணமே இவர்களுக்குப் பிடிக்கவில்லை. இந்த நிலைமையில், காங்கிரஸ், 1922 டிஸம்பரில் கயாவில் கூடிற்று. காங்கிரஸுக்குத் தேசபந்து சி. ஆர். தாஸ் தலைமை வகித்தார். இந்தக் காங்கிரஸில், மாறுதல் வேண்டாதார்க்கும், மாறுதல் வேண்டுவோர்க்குமிடையே நடக்கும் மல்யுத்தத்தின் காரணமாகக் காங்கிரஸ் குலைந்துவிடுமென்று, காங்கிரஸ் விரோதிகள் ஆனந்தப் பட்டுக்கொண்டிருந்தார்கள். ஆனுல், தேசமோ மிகக் கவலையுடன் நடவடிக்கைகளைக் கவனித்துக்கொண்டிருந்தது.

காங்கிரஸ் கூடிற்று. காங்கிரஸின் தலைவரே, மாறுதல் வேண்டிய கோஷ்டியின் தலைவரும். மாறுதல் வேண்டாக் கோஷ்டியின் தலைமையைச் சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார் ஏற்றுக் கொண்டார். ஒரு வருஷத்துக்கு முன்புதான் தம் அட்வொகேட் - ஜெனரல் பதவியையும், சட்டசபை அங்கத்தினர் பதவியையும் ராஜிநாமாச் செய்துவிட்டு, சி. ஐ. இ. பட்டத்தையும் உதறித் தள்ளிய ஸ்ரீமான் எஸ். ஸ்ரீனிவாஸய்யங்காரும் அந்தக் காங்கிரசுக்கு வந்திருந்தார். தேசம் அவரை வரவேற்றது. அவர் சி. ஆர். தாஸின் சட்டசபை வேலைத் திட்டத்தை யாதரித்தார். உணர்ச்சியும், வீரமும், உண்மையும் ததும்பிய தலைமைப் பிரசங்கத்தில், சி. ஆர். தாஸ் தமது கட்சியை யெடுத்துக் கூறினார். சட்டசபை வேலைப் பலனளிக்காததென்றும், காந்திஜி சிறை சென்ற பின் அவர் திட்டத்தை மாற்றிச் சட்டசபை செல்வது காந்திஜியை அவமதிப்பதற்குச் சமானமாகு மென்றும் சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார் வாதித்தார். முடிவில், ராஜகோபாலாச்சாரியாரே வெற்றி பெற்றார். காங்கிரஸ் முடிவடைந்ததும், தேசபந்து தாஸ் காங்கிரஸ் தலைவர் பதவியை ராஜிநாமாச் செய்துவிட்டு, சுயராஜ்யக் கட்சியை ஸ்தாபித்தார். இம்முடிவு தேசத்துக்கு ஒரு அதிர்ச்சியைக் கொடுத்தது. காங்கிரஸில் ஒரு பெரும் பிளவு ஏற்பட்டது. தேசத்தில் அதன் செல்வாக்குக் குறைந்துவிடுமோ என்ற நிலைமையும் ஏற்பட்டது. சில மாகாணங்களில் சுயராஜ்யக் கட்சியாருக்கும் மாறுதல் வேண்டாக் கோஷ்டியாருக்குமிடையே யிருந்த வேற்றுமை, வெறுப்பாகவும் பகையாகவும் மாறிவிட்டது. இரு கட்சியாரும் தேச முழுதும் சண்டமாருதப் பிரசாரம் செய்துகொண்டிருந்தார்கள். நிலைமை கவலைக்கிடமான தாக இருந்தது. இந்நிலையில் கயா காங்கிரஸுக்கு 14 நாட்களுக்குப் பிறகு மௌலானா ஆஜாத் விடுதலை செய்யப்பட்டார்.

அபிப்பிராய வேற்றுமையால் பிளவுபட்டிருக்கும் கோஷ்டிகளிடையே ஒற்றுமையை யேற்படுத்துவதற்குச்

சிறந்த தகுதியுடையவர் என்ற பெயர் மௌலானுவுக்கு முன்பே யிருந்தது. முஸ்லிம்களுக்கிடையே தோன்றிய அநேக சச்சரவுகளைத் தீர்த்து வைத்திருக்கிறார். இன்று தேசம் அவரை நோக்கி நின்றது; மௌலானுவும் சமய சஞ்சீவியாக அக்காரியத்தி லிறங்கினர். சிறையிலிருந்து வந்தவுடனேயே அவர் கீழ்க்கண்ட அறிக்கையை விடுத்தார்: "நான் ஜெயிலிலிருந்து வரும்போது துரதிர்ஷ்ட வசமாகக் காங்கிரஸில் ஒரு பிளவு ஏற்பட்டிருப்பதைக் காண்கிறேன். வேறுபட்டிருக்கும் இரு கோஷ்டியாரிடையிலும் சமாதானத்தை உண்டு பண்ணுவதையே என் கடமையாகக் கருதுகிறேன்." இவ் வேலையில் மௌலானு ஆஜாதுக்கு மௌலானு முஹம்மதலி உதவி புரிந்தார். பம்பாயில் ஒரு அ. இ. கா. க. கூட்டம் கூட்டப்பட்டது. ஆனல், அந்தக் கூட்டம் வெற்றிகரமாக முடியவில்லை. காங்கிரஸ் இன்னும் பிளவுபட்டே யிருந்தது. ஒன்றுமட்டும் வெளிப்படையாக விளங்கிற்று. அதுதான் இரு கோஷ்டியாருக்கும் மௌலானு ஆஜாதிடமுள்ள நம்பிக்கை. டில்லியில் ஒரு விசேஷ காங்கிரஸைக் கூட்டுவதென அ. இ. கா. க. தீர்மானித்தது.

விசேஷ காங்கிரஸுக்கு மௌலானு அபுல்கலாம் ஆஜாத்தையே தலைவராகத் தேர்ந்தெடுத்தார்கள். காங்கிரஸ் தலைவர்கள் அனைவரிலும் வயதில் மிகவும் இளையவர் இவரே. இவருக்கு அப்போது வயது 35. இவர் தலைமீது ஒரு மகத்தான பொறுப்புச் சுமை யிருந்தது. காந்திஜியின் ஒத்துழையாமைத் திட்டம் இவர் மனத்துக்குகந்தது. எனினும், "எந்த அரசியல் முறையையும் புனிதமானதெனக்கூறிவிட முடியாது; ஒவ்வொன்றையும் அதன் குண குணங்களின் பேரிலேயே நிதானிக்க வேண்டும்" என்று இவர் கூறினர். வேறுபட்டிருக்கும் இரு கோஷ்டியிலுள்ளவர்களுக்கும், தேசத்தில் பெருமிதமான செல்வாக்கு இருந்தது. இடையே ஜமீயத்துல் உலமா கோஷ்டி வேறு இருந்தார்கள். ஒத்துழையாமையின் ஆரம்பத்தில் சர்க்காரோடு எந்த விதத்திலும் ஒத்துழைப்பது ஒரு பாபச் செயலென்று 'பத்வா' வெளியிட்ட அவர்கள் இன்று

சட்டசபைப் பிரவேசத்தை ஆதரிக்க முடியாது. கயா காங்கிரஸில் மறுபடியும் அவர்கள் தங்கள் 'பத்வா'வை உறுதிப்படுத்தி யிருந்தார்கள். எனவே, இம்மாதிரி உண்மையான ஆக்ஷேபணைகளையுடைய பல கோஷ்டிக ளிடையே சமாதானத்தையும், ஒற்றுமையையும் நிலை நாட்டும் பொறுப்பு மௌலானாவின் தலையில் விழுந் திருந்தது. இப்பொறுப்பைத் திருப்திகரமாக நிறை வேற்றுவதற்கு வேண்டிய திறமை, ராஜதந்திர ஞானம், நீண்ட அனுபவம், யாவும் மௌலானாவுக்கிருந்தன.

டில்லியில் 1923 செப்டம்பர் மாதம் 15-ம் தேதி ஆஜாதின் தலைமையில் காங்கிரஸ் கூடிற்று. இரு கோஷ்டி யாரும் பூரண யுத்த முஸ்தீபுகளுடன் காங்கிரஸுக்கு வந்திருந்தார்கள். மௌலானா ஆஜாதின் அருமை யான தலைமைப் பிரசங்கம் அவர்களுடைய பிடி வாதங்களை உடைத்தெறிந்துவிட்டது. ஒற்றுமை அவசிய மென்று இவர் உருக்கமாக எடுத்துரைத்தார்; ஒத் துழையாமையின் பெருமையைத் தெளிவாக எடுத்துக் காட்டினார்; ஆனால், சட்டசபைப் பிரவேசத்துக்குத் தேசத்திலிருக்கும் ஆதரவைப் புறக்கணிக்க முடியா தென்றும் இவர் கூறினார். பிரசங்கத்தின் இறுதியில் ஆஜாத் தம் சமரசத் திட்டத்தைக் காங்கிரஸுக்கு ஸமர்ப் பித்தார்; இவ்விளந் தலைவரின் நேர்மையில் காங்கிர ஸுக்கு வந்திருந்த சகல பிரதிநிதிகளுக்கும் அசைக்க முடியாத நம்பிக்கை யிருந்தது. காங்கிரஸ் அந்தத் திட்டத்தை ஏற்றுக்கொண்டு, கீழேகண்ட தீர்மானத்தை நிறைவேற்றியது :—

"அஹிம்ஸையை அடிப்படையாகக் கொண்ட ஒத் துழையாமையில் தனக்குள்ள நம்பிக்கையை உறுதிப் படுத்துவதோடு, மத சம்பந்தமாகவோ மனச்சாட்சி சம்பந்தமாகவோ ஆக்ஷேபணையில்லாத காங்கிரஸ்காரர் களுக்கு, வரும் சட்டசபைத் தேர்தல்களில் போட்டி போடவோ, தங்கள் வாக்குரிமையை உபயோகிக்கவோ உரிமை உண்டென்றும், ஆகையால் சட்டசபைப் பிர வேசத்துக்கு விரோதமான பிரசாரத்தைக் காங்கிரஸ்

நிறுத்தி வைக்கிறதென்றும், இவ்விசேஷக் காங்கிரஸ் அறிவிக்கிறது. விரைவில் சுயராஜ்யத்தை யடைவதற்காக, தங்களுடைய பெருந்தலைவர் மகாத்மா காந்தியினுடைய நிர்மாணத் திட்டத்தை காங்கிரஸ்காரர்கள் இரட்டித்த முயற்சியோடு நிறைவேற்ற வேண்டுமென்றும் இக்காங்கிரஸ் கூறுகிறது.''

எனவே, தமது மன உத்வேகத்தின் சின்னமாகவும், தம் வாழ்க்கை-லக்ஷியத்தின் பிரத்யக்ஷப் பிரமாணமாகவும், இருந்த தேசிய காங்கிரஸை ஒரு அபாயகரமான பிளவினின்றும், அதன் காரணமாக விளையவிருந்த நாசத்தினின்றும், காப்பாற்றிய பெருமையும், வயதில் முதிர்ந்தவர்கள் அடையத் தவறிய ஒரு மகத்தான வெற்றியும், அப்போது முப்பத்தைந்தே வயது நிரம்பியிருந்த மௌலானா ஆஜாதைச் சாரும்.

இதற்குப் பிறகு தேசத்தில் ஹிந்து முஸ்லிம் கலவரங்கள் ஏற்பட்டன. மதவெறி கொண்டவர்கள் இரண்டு பக்கங்களிலிருந்தும் வேலை செய்யத் தொடங்கினார்கள். இக்கலகங்களுக்குக் காரணமாயிருந்தவை 'சுத்தி' (Shuddhi), 'தாப்லிக்' (Tabligh) என்ற இயக்கங்கள். இவற்றை ஆரம்பித்தவர்கள் யாரென்பது விளங்கவில்லை. ஆனால், மனித வர்க்கத்தின் நன்மையில் கிஞ்சித்தும் கருத்தில்லாத ஒரு சிலர் தாம் இதைக் கிளப்பியிருக்க வேண்டுமென்பதில் சிறிதும் சந்தேகமில்லை. கலகங்கள் மிகக் கடுமையாகிவிட்டன. நூற்றுக் கணக்கான ஹிந்து முஸ்லிம்கள் உயிரிழந்தார்கள். ஆயிரக் கணக்கானவர்கள், உண்ண உணவும், இருக்க வீடுமின்றித் தவித்தார்கள். தேசிய இந்தியா வேதனைக்கடலுள் மூழ்கியது. காந்திஜியின் உள்ளம் பட்ட பாட்டுக்கு அளவேயில்லை. அவர் அடியோடு அதிர்ந்து போய்விட்டார். வருந்திய தமது உள்ளத்துக்கு ஒரே மருந்துதான் அவருக்குத் தோன்றிற்று. 1924-ம் வருஷம் செப்டம்பர் மாதம் 18-ம் தேதி காந்திஜி தம்முடைய இருபத்தொருநாள் உண்ணாவிரதத்தை ஆரம்பித்தார். "நான் பிராயச்சித்தம் செய்யவேண்டும். அறியாமையினால்

செய்யப்பட்ட பாபங்களுக்கு மன்னிப்புத் தேடுவதற்காக, வேதனைப்பட்டோர் உள்ளத்தின் பிரார்த்தனையே என் பிராயச்சித்தம். ஒருவர் மற்றொருவருடைய மதத்தைத் தூற்றுவதும், பொறுப்பற்ற அறிக்கைகள் விடுவதும், உண்மையற்றவைகளைக் கூறுவதும், நிரபராதிகளின் மண்டைகளை உடைப்பதும், கோயில்களையும் மசூதிகளையும் அசுத்தப்படுத்துவதும், ஆண்டவனை மறுப்பதாகும்" என்று அவர் கூறினார்.

மகாத்மாவின் இச்செயல் தேசத்தை ஒரு கலக்குக் கலக்கிவிட்டது. இந்தியா மாத்திரமல்ல, உலகமுழுவதுமே கவலைக்கடலுள் ஆழ்ந்தது. தேசத்தின் பல பாகங்களிலுமிருந்து தலைவர்கள், மகாத்மா உபவாசமிருந்த இடமாகிய டில்லிக்கு விரைந்தோடினார்கள். டில்லியில் பண்டித மோதிலால் நேரு தலைமையில் ஒரு "ஒற்றுமை மகாநாடு" நடந்தது. ஆனால், அம்மகாநாட்டின் வெற்றி மகாத்மாவுக்குத் திருப்தியளிக்காததால் அவர் தம் உபவாசத்தை நிறுத்தவில்லை. அவர் வேண்டியது இதய ஒற்றுமை; போலி ஒற்றுமையல்ல; எனினும், வருங்கால நடவடிக்கையைக் குறித்து மகாநாடு சில முக்கியமான தீர்மானங்களை நிறைவேற்றியது. மகாநாட்டின் இந்த வெற்றிக்குக் காரணமாயிருந்தவர், மௌலானா அபுல்கலாம் ஆஜாத். மகாநாடு அநேக நாட்கள் நடந்தது. ஹிந்து முஸ்லிம் தலைவர்கள் சுமார் நூற்றைம்பதுபேர் மகாநாட்டுக்கு வந்திருந்தார்கள். மனிதன் மிருகமாக மாறி, மதத்துக்குத் துரோகம் செய்த காரணத்தினாலுண்டான ஒரு பச்சாத்தாப உணர்ச்சியையும், கவலையும் அக்கரையும் நிறைந்த சூழ்நிலையையும், மகாநாட்டில் உண்டுபண்ண முயன்றவர்களில் மிகப் பிரதானமானவர் மௌலானா ஆஜாத். சத்தியத்தைக் கூறுவதில் கிஞ்சித்தேனும் பின்வாங்குவதில்லை யென்ற உறுதியுடனும், அலட்சிய மனப்பான்மைக்குக் கொஞ்சமும் இடங்கொடுப்பதில்லை யென்ற தீர்மானத்துடனும் மௌலானா மகாநாட்டுக்கு வந்திருந்தார். மௌலானா ஆஜாத் இல்லையானால், மகாநாட்டில் நிறைவேறிய மிக முக்கியமான தீர்மானம் நிறைவேறியிருக்காது. அத்தீர்மானமாவது:—

" தண்டனைக்காகவோ, அல்லது பழிவாங்குவதற்காகவோ யாராவது சட்டத்தைத் தங்கள் கையிலே போட்டுக் கொள்வதென்பது, சட்டத்துக்குமாத்திரம் விரோதமாய் இருப்பதல்லாமல், மதத்துக்கும் விரோதமாய் இருக்கிற தென்று இம்மகாநாடு அறிவிக்கிறது. ஆகையால், எல்லாத் தகராறுகளும், ஒரு பஞ்சாயத்தின் மூலமோ, அது சாத்தியமாகாதவிடத்து, ஒரு நியாயஸ்தலத்தின் மூலமோதான் தீர்த்துக்கொள்ளப்பட வேண்டும்."

ஆனால், இதைவிட மிகச் சிக்கலான பிரச்னை பசுவைப்பற்றியது. நகல் தீர்மானம் கூறியதாவது:—" பசுவைக் கொல்லுவதற்குள்ள உரிமை, பலாத்காரத்தினால் (அது சரீர சம்பந்தமானதோ, அல்லது சட்ட சம்பந்தமானதோ) நிறுத்தப்பட வேண்டுமென்று ஹிந்துக்கள் எதிர்பார்க்கக்கூடாது. இருதரப்பாரும் மனமொப்பிய சம்மதத்தால்தான் அது நிறுத்தப்படமுடியும். ஆனால், இதற்குப் பதிலாக, நாங்கள் இவ்வளவு தரம் இப்படி விட்டுக்கொடுப்பதற்குப் பதிலாக, இப்போது பசு கொல்லப்படாத இடங்களில் இனி கொல்லுவதில்லை யென்றும், கொஞ்சங் கொஞ்சமாகப் பசு கொல்லப்படுவதைக் குறைத்துக்கொண்டே வந்து கடைசியில் முழுதும் நிறுத்திவிடுவதென்றும் நீங்கள் உறுதி கொடுக்கவேண்டும்" என்று ஹிந்துக்கள் சொன்னார்கள். ஆனால், முஸ்லிம்கள் இதற்கு இணங்கவில்லை. மறுபடியும் மௌலானாவே உதவிக்கு வந்தார். பச்சாத்தாபத்தினாலும், பெருந்தன்மையினாலும் நிறைந்த இவர் உள்ளத்திலிருந்து புறப்பட்ட ஆணித்தரமான வார்த்தைகள் அன்று இவருக்கு வெற்றியையளித்தன. மகாநாட்டுக்கு வந்திருந்த ஹிந்துத் தலைவர்களில் ஒருவர் பின்வருமாறு கூறினார் :—" தேசத்திலுள்ள மிகச் சிறந்த பிரசங்கிகளில் ஒருவராக அவர் கருதப்பட்டார். ஒரு பெரிய அறிவாளியாகவும், மத வேதாந்தியாகவும் இருக்கிறதினால் உண்டாகும் செல்வாக்கும் அவருக்கிருந்தது. அந்தச் சமயத்தில் இந்தியாவிருந்த நிலைமையினாலும், தம்முடைய மதானுஷ்டானங்களுக்குக் கொஞ்சமும் பங்கம் வரக்கூடாதென்ற கவலையினாலும்

தூண்டப்பட்ட அவர், தம் உணர்ச்சிகளின் தாராளத்திலும், வார்த்தைகளின் வேகத்திலும் உருக்கத்திலும் தம்மையே மிஞ்சிவிட்டார். இரண்டு வகுப்பாருக்கும் அவர் விடுத்த வேண்டுகோள், விவாதத்தின் போக்கிலேயே ஒரு மாறுதலை யுண்டுபண்ணிவிட்டது. மத பலிக்காகக் கூடப் பசுவைக் கொலை செய்வது தங்கள் மதத்தின் முக்கியமான அடிப்படைகளிலொன்று அல்லவென்பதை ஞாபகம் வைத்துக் கொள்ளுமாறு தம் மதத்தைச் சேர்ந்தவர்களை அவர் கேட்டுக் கொண்டார்; ஹிந்துக்களிடம் தங்களுக்குள்ள சகோதர பாவத்தைக் காட்டுவதற்காகவே, மாட்டிறைச்சியை அநேக முஸ்லிம் தலைவர்கள் தாங்கள் உண்ணுமலிருப்பதோடு நில்லாமல், முஸ்லிம்களிடையே அதன் உபயோகத்தைக் குறைப்பதற்காக முயன்று கொண்டிருக்கிறார்களென்று அவர் ஹிந்துக்களுக்கு உறுதியளித்தார். மௌலானாவின் உருக்கம் முஸ்லிம்களின் மனத்தை யிளக்கிற்று. ஆனால், அவர்கள் அந்தக் கடைசி நிபந்தனையை யேற்றுக்கொள்ள ஆயத்தமாயில்லை. மகாநாடு பயன் பெறுமல் கலைந்துவிடும்போல் தோன்றிற்று. மௌலானாவின் உருக்கமான வேண்டுகோள் பண்டித மாளவியாவின் மனத்தை மாற்றிவிட்டது. கவலையும் ஏமாற்றமும் சூழ்ந்திருந்த மகாநாட்டின் மேடைமீது அவர் எழுந்து, அந்தக் கடைசி நிபந்தனையை (அதாவது பசுவைக் கொல்லுவதை முழுதும் நிறுத்திவிட வேண்டுமென்பதை) ஹிந்துக்கள் வற்புறுத்தவில்லை என்று அறிவித்தார். உடனே மகாநாட்டில் ஒரு புதிய உணர்ச்சியும் உயிரும் தோன்றிற்று. இதர நடவடிக்கைகளெல்லாம் சுலபமாக நடந்தேறின. மௌலானாவின் வெற்றி அபாரமானது."

மகாநாட்டுக்கு வந்திருந்த இந்தியப் பிரதம கிறிஸ்தவ குரு (Metropolitan of India) மகாநாட்டில் மௌலானாவின் பங்கைப்பற்றிக் கீழ்வருமாறு எழுதினர் :—

"என்வாழ்க்கையில் நடந்த சம்பவங்களிலெல்லாம் பிரதானமானதாக 1924-ல் நடந்த சமாதான மகாநாட்டைத்தான் கருதுகிறேன். முஸ்லிம்கள் பக்கலிலிருந்து

அபாரமான செல்வாக்கை உபயோகித்தவர் மௌலானு அபுல்கலாம் ஆஜாத். திருப்பித் திருப்பிச் சொல்லாமல், தணிவான குரலில் அவர் வெளியிட்ட வாதங்களின் தெளிவை நான் ஆச்சரியத்துடன் கவனித்துக்கொண்டிருந்தேன். அவர் உர்துவில் பேசினுர். அவருடைய தெளிவான வாதம் மகாநாட்டாரிடம் உண்டுபண்ணிய பலனை நன்ருகக் காணமுடிந்தது. அவர் சொல் வன்மையும் நேர்மையும் என் மனத்திலே பதித்த அபிப்பிராயம் பதினறு ஆண்டுகளாகியும் மங்கவில்லை. அவர் காங்கிரஸ் தலைவராக இப்போது (1940) தேர்ந்தெடுக்கப்பட்டிருப்பது அவருடைய குணங்களுக்கு, மேற்கொண்ட அத்தாட்சியாகும்; இப்போது விலகிக்கொண்டே போகிறவர்களாகக் காணப்படும் வகுப்புக்களை அவரால் ஒன்று சேர்க்கமுடியுமென்று நான் நம்புகிறேன்.''

21-நாட்களுக்குப் பிறகு மகாத்மா தம் உபவாசத்தை முடித்தார். முஸ்லிம் தலைவர்கள் அவர் படுக்கையைச் சூழ்ந்து நின்ருர்கள். அப்போது அவர் மெல்லிய குரலில் கூறினுர் :—“ஆண்டவனுடைய விருப்பமென்ன வென்பதை நானறியேன். ஆனுல், ஹிந்து முஸ்லிம் ஒற்றுமைக்காக, அவசியமானுல் உயிரையும்விடத் தயாராயிருப்பதாக எனக்கு இன்று உறுதியளிக்கும்படி கேட்டுக்கொள்ளுகிறேன்.'' ஹகீம் அஜ்மல்கானும் மௌலானு ஆஜாதும் தங்கள் புனிதமான விரதத்தை மறுபடியும் எடுத்துக் கொண்டார்கள்.

இவ்வாருக மௌலானு ஆஜாத் இருமுறை ஒற்றுமையை நிலைநிறுத்துவதில் வெற்றி பெற்றிருக்கிருர். இவருடைய அபார ஞானமும் அபார சாமர்த்தியமும் இவருக்கு வெற்றியை யளித்தன. இந்நாட்டு மக்களுக்கும் பிரிட்டிஷாருக்குமிடையே கூட மௌலானு சமரஸத்தையும், ஒற்றுமையையும் ஏற்படுத்தியிருப்பார். ஆனுல் பிரிட்டிஷ் டோரிகளின் ஏகாதிபத்திய வெறி மௌலானுவின் திறமையையும் மிஞ்சிவிட்டது. சர்ச்சிலின் அகம்பாவமும் ஏமெரியின் அறியாமையும் சத்தியத்தை யடிப்படையாகக் கொண்டு அமைந்த மௌலானுவின் சாமர்த்தியத்தை வீணுகச் செய்துவிட்டன.

# 8. மீண்டும் போர்

டில்லி விசேஷ காங்கிரஸுக்குப் பின் காந்திஜி சிறையிலிருந்து வெளிவந்தார். காங்கிரஸின் முடிவு அவருக்குத் திருப்தியளிக்கவில்லை யென்றாலும், வேறு வழியில்லை யென்று கண்டார். சட்டசபைப் பிரவேசத்தால் பலனொன்றும் ஏற்படாதென்பது அவருடைய திட்டமான கருத்து. ஆனாலும் சட்டசபைப் பிரவேசம் வேண்டி நின்றவர்களுக்கு அவர் உற்சாகமளித்து வந்தார். அனுபவத்தால் அவர்கள் அறிவைப் பெறுவார்களென்பது அவர் எண்ணம். "அவர்களுக்கு நான் உதவி செய்யக்கூடிய சிறந்த வழி, அவர்களுடைய பாதையிலிருந்து விலகிக்கொண்டு, காங்கிரஸின் உதவியைக் கொண்டும், அதன் பெயராலும் நிர்மாண வேலையில் நான் என் கவனத்தைச் செலுத்துவதே யாகும்; அதுவும், கல்வி கற்ற இந்தியர்கள் என்னை அனுமதிக்கின்ற அளவுக்குத்தான்" என்று அவர் எழுதினார். அவர் சபர்மதி யாசிரமத்திலிருந்து சந்தடியின்றித் தம் காரியத்தைச் செய்து வந்தார். கமிட்டிக் கூட்டங்களிலேகூட அவர் கலந்துகொள்வது அபூர்வம்.

இடையில் சட்டசபைக்குச் சென்றவர்கள், உணர்ச்சியும் ஆத்திரமும் வீரமும் நிறைந்த பிரசங்கங்கள் செய்தார்கள்; சர்க்காருக்குத் தோல்விமேல் தோல்வியாகக் கொடுத்தார்கள்; சரமாரியாகக் கேள்விகளைக் கேட்டு, சர்க்கார் அங்கத்தினர்களைத் திணறவடித்தார்கள். ஆனால் இவைகளெல்லாம் வாணவேடிக்கைகளே: காரியம் ஒன்றும் நடைபெறவில்லை. நாளாக நாளாக அவர்களுக்கே சடைவு தோன்றிற்று; அங்கத்தினர்களிடம் ஒழுங்கின்மை காணப்பட்டது. மோதிலால் நேரு இது சம்பந்தமாகக் கடுமையான நடவடிக்கைகள் எடுத்துக் கொள்ளும்படி நேர்ந்தது. காரியத்தில் பலனற்ற இத்திட்டம் அவருக்கே தெவிட்டிப் போய்விட்டது. தம் நெருங்கிய நண்பரும் சகாவுமான தேசபந்துதாஸ் காலமாய்விட்டார். மோதிலால் நேரு தனித்து நின்று சட்டசபை வேலையைக் கவனிக்கும்படியாயிற்று.

இடையில் காந்திஜி சிறு சிறு சத்தியாக்கிரகங்களை நடத்திக்கொண்டிருந்தார். அவற்றின் வெற்றி தேசத்துக்கு அவ்வப்போது உணர்ச்சியும், உற்சாகமும் அளித்து வந்தது. 1927-ல் சென்னையில் டாக்டர் அன்ஸாரி தலைமையில் நடைபெற்ற காங்கிரஸ் 'பூரண சுதந்திரமே' தன் லக்ஷியமென அறிவித்துவிட்டது. 1928-ல் சர்தார் வல்லபாய் பட்டேலின் உதவிகொண்டு காந்திஜி பர்தோலி சத்தியாக்கிரகத்தை நடத்தினர். அப்போர் அரசாங்கத்தை அடியோடு ஆட்டிவைத்தது. அதிகாரவர்க்கத்தைக் கண்டு அஞ்சி நசுங்கிக் கிடந்த பர்தோலிக் குடியானவர்களிலிருந்து வீரர்களைச் சிருஷ்டித்த பெருமை சர்தார் படேலைச் சாரும். இம்மாதிரி 1924-லிருந்து 1928 வரையில் தேசத்தில் ஒருவகை மந்தம் நிலவியிருந்தது. அதைப் போக்கியது சைமன் கமிஷன்.

1928-ல் இக்கமிஷன் இந்தியாவுக்கு வந்தது. மேன்மை தங்கிய சர்க்காரால் "தேசத்தில், பொறுப்பு வாய்ந்த ஆட்சியின் கொள்கைகளை எவ்வளவு தூரம் அமுலுக்குக் கொண்டுவருவது விரும்பத்தக்கதாகும்?" என்பதைக் கண்டுபிடிப்பதற்காக, இக்கமிஷன் அனுப்பப்பட்டது. இக்கமிஷனில் ஏகாதிபத்தியப் பிரதிநிதிகள் நிறைந்திருந்தார்களேயன்றி ஒரு இந்தியன்கூட இல்லை. இது இந்தியாவுக்குப் பெரிய அவமதிப்பாக இருந்தது. கமிஷனைப் பகிஷ்கரிப்பதென்று காங்கிரஸ் முடிவு செய்தது. தேசமெங்கும் பிரசாரப் பொதுக் கூட்டங்கள் நடைபெற்றன. வழக்கம்போல் மௌலானா இப்பஹிஷ்காரத்தில் பிரதானமாகப் பங்கெடுத்துக் கொண்டார். கல்கத்தாவில் நடந்த ஒரு கண்டனக் கூட்டத்துக்கு மௌலானா தலைமை வகித்தார்; பஞ்சாப் முழுவதிலும் இவர் சுற்றுப்பிரயாணம் செய்தார்; லாகூர், அமிர்தஸரஸ், ராவல்பிண்டி ஆகிய இடங்களில் பேசினர்; 1928-ம் வருஷம் ஜனவரியில் மௌலானா டில்லியில் கீழ்க்கண்டவாறு பேசினர் :—"பிப்ரவரி மாதம் 3-ம் தேதி சைமன் கமிஷன் டில்லிக்கு விஜயம் செய்யும்போது, உங்கள் தேசத்தின் பொருட்டு உங்களால் ஒருநாள் பூரண ஹர்த்

தால் அநுஷ்டிக்க முடியவில்லை யென்ருல், சுயராஜ்யத்தைப்பற்றிய எண்ணங்களை யெல்லாம் நீங்கள் உங்கள் மனத்திலிருந்து வேரோடு களைந்தெறிந்துவிட வேண்டும்; சுதந்திரம் என்ற வார்த்தையையே நீங்கள் மறுபடியும் உச்சரிக்கக்கூடாது.”

பகிஷ்காரம் பூரண வெற்றி அடைந்தது. தேசமெங்கும் ஹர்த்தால் அநுஷ்டிக்கப்பட்டது. முக்கியமான நகரங்களிலெல்லாம் போலிஸ் தடியடி நடந்தது. போலிஸ் உத்தியோகஸ்தரால் மார்பில் அடிக்கப்பட்டதன் காரணமாக லாலா லஜபத்ராய் உயிர் துறந்தார்; ஏற்கெனவே புண்பட்டிருந்த மக்களின் உள்ளத்தில் இது ஈட்டிகொண்டு குத்தியதுபோலிருந்தது; தேசமெங்கும் உடனே புரட்சி - மனப்பான்மையை யுண்டு பண்ணிவிட்டது. எரிகிற நெருப்பில் எண்ணெயை ஊற்றியதுபோல், லக்ஷ்மணபுரியில் பண்டித ஜவஹர்லால் நேருவும், பண்டித கோவிந்த வல்லப பந்தும் போலிஸ் தடியடிக்கு ஆளானுர்கள். ஆகவே, இத்தகைய நிகழ்ச்சிகளுக்கிடையே சைமன் கமிஷன் பஹிஷ்காரம் பூரண வெற்றி யடைந்ததில் ஆச்சரியமில்லை.

இடையே, 1927-ல் மீண்டும் ஹிந்து - முஸ்லிம் கலவரங்கள் தோன்றின. மூல்தான், நாகபுரி, பரைலி முதலிய இடங்களில் நடந்த கலகங்கள் பயங்கரமாக விருந்தன. தேசமெங்கும் ஒற்றுமை - மகாநாடுகள் நடைபெற்றன; முக்கியமான தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன; ஆனுல், வகுப்புவாத வெறி கொண்டவர்கள் தங்கள் காரியத்தைச் செய்துகொண்டே போனுர்கள். 1924–லிருந்து அலி சகோதரர்களும் காங்கிரஸை விட்டுச் கொஞ்சங் கொஞ்சமாக விலகிப் போய்க்கொண்டே யிருந் தார்கள். தேசத்தில் வகுப்புவாதப் பிரசாரம் பலமாக நடந்தது; ‘நேரு அறிக்கை’ அதற்கொரு கருவியாக உபயோகிக்கப்பட்டது. வகுப்புவாத முஸ்லிம்களின் பிரசாரத்துக்கு ஈடுசெய்ய வேண்டியது மிக்க அவசியமாகி விட்டது. காங்கிரஸிலிருந்த முஸ்லிம்கள் ஒன்றுகூடி ‘தேசிய முஸ்லிம்கள் மகாநாடு’ என்ற ஒரு மகாநாட்டை

ஆரம்பித்தார்கள். அதற்கு மௌலானு ஆஜாத் தலைவர்; டாக்டர் அன்ஸாரி பொக்கிஷதார்; டி. ஏ. ஷெர்வானி காரியதரிசி. 'நேரு அறிக்கை'யின் உண்மையான கருத்தை முஸ்லிம்களுக்கு விளக்கிக் கூறி, 'டில்லி ஒற்றுமை மகா நாட்'டில் முடிவு செய்த வழியின்படி வகுப்புப் பிரச்னைகள் தீர்க்கப்படட வேண்டுமென்றும், இம் மகாநாடு பிரசாரம் செய்தது. இவ்விஷயத்தில் மகாநாடு ஓரளவு வெற்றியும் பெற்றது. கிலாஃபத்துக்குப் பிறகு முஸ்லிம்கள் கொஞ்சங் கொஞ்சமாக வகுப்புவாதிகளின் ஆதிக்கத்திற்குள் வர ஆரம்பித்திருந்தார்கள்; முஸ்லிம்களின் மத உணர்ச்சியை இவ் வகுப்புவாதிகள் தங்கள் சுயநலத்துக்குச் சாதமாகத் தூண்டிவிட்டார்கள். மௌலானு இதை நிறுத்த விரும்பினுர்; 1921–23 சுதந்திரப் போரில் முஸ்லிம்களை வெற்றிகரமாக அழைத்துச் சென்றதுபோல், வரும் போர்களிலும் அழைத்துச் செல்வதற்கு அவர்களை ஆயத்தப்படுத்த விரும்பினுர்.

மறுபோருக்கான சமயமும் சீக்கிரமே வந்தது. 1928-ல் கல்கத்தாவில் பண்டித மோதிலாலின் தலைமையில் நடந்த காங்கிரஸ் பிரிட்டிஷ் சர்க்காருக்கு இறுதிக் கடிதம் விடுத்தது. ஒருவருஷ காலத்துக்குள் இந்தியாவுக்கு டொமினியன் அந்தஸ்து வழங்கப்படா விட்டால், பூரண சுதந்திரமே இந்தியாவின் லட்சியமென்பதை உறுதிப் படுத்தி, அதை யடைவதற்காகக் காங்கிரஸ் சட்ட மறுப்பை ஆரம்பிக்கும் என்பதே அவ் விறுதிக் கோரிக்கை. ஓராண்டும் கழிந்தது. பிரிட்டிஷ் சர்க்கார் இறங்கிவரவில்லை. 1929-ம் வருஷம் ஆகஸ்டில் கூடிய அ. இ. கா. க. சட்ட சபைகளிலுள்ள காங்கிரஸ்காரர்களை வெளியே வரச் செய்வதென முடிவு செய்தது. சட்டசபை வேலையில் பண்டித மோதிலால் நேருவுக்கே வெறுப்பு ஏற்பட்டு விட்டது. ஒரு வருஷக் கெடு முடியவே, 1929 டிஸம்பர் மாதம் 31-ம் தேதி நள்ளிரவில் ரவி நதி தீரத்தில், லாகூர்க் காங்கிரஸுக்குத் தலைமை வகித்த பண்டித ஜவஹர்லால் நேரு பூரண சுயேச்சைக் கொடியை உயர்த்தினுர். சில மாதங்களுக்குப் பின் போரும் ஆரம்ப

மாயிற்று. முஸ்லிம் தலைவர்களுள் மௌலானா ஆஜாத் ஒருவரே சட்டமறுப்புக்குப் பூரண ஆதரவளித்தார். டாக்டர் அன்ஸாரியும்கூடச் சிறிது தயங்கினார். காங்கிரஸி லிருந்து விலகிக் கொண்டிருந்த அலி சகோதரர்கள் லாகூர்க் காங்கிரஸுக்கு விஜயம் செய்திருந்தார்கள்; ஆனால், சட்டமறுப்பில் முஸ்லிம்கள் பங்கெடுத்துக் கொள்ளமாட்டார்கள் என்பதைத் தெரிவிக்கவே அவர்கள் வந்திருந்தார்கள். மௌலானா ஆஜாதோ, தம் மால் அரசியல் - விழிப்பும் உணர்ச்சியும் பெற்ற முஸ்லிம் சகோதரர்களிடம் அபார நம்பிக்கை வைத்திருந்தார்.

மௌலானாவின் நம்பிக்கை பழுதுபடவில்லை. போர் ஆரம்பமான வுடனேயே ஏராளமான முஸ்லிம்கள் பங் கெடுத்துக்கொண்டார்கள். வடமேற்கெல்லைப்புற மாகா ணம் மட்டிலுமே பல்லாயிரக்கணக்கான முஸ்லிம்களைச் சிறைக்கனுப்பிற்று. 1930 ஏப்ரலில் பிஷாவரில் கிஸ்ஸா கானிபஜாரில், வீரப்பட்டாணியர்கள் சிந்திய இரத்தத்துக்கு அளவேயில்லை. ஜாலியன்வாலாபாக் படுகொலை யொன் றைத்தான் இதற்குச் சமமாகக் கூறலாம். இதர மாகா ணங்களிலும், முஸ்லிம்கள் தியாகாக்கினியிற் குதித்தார் கள். மௌலானா ஆஜாதின் ஆனந்தத்துக்கு அளவில்லை. தம் முஸ்லிம் சகோதரர்கள், ஹிந்துக்களுக்கு எந்தவிதத் திலும் சளைக்காமல் போரில் மும்முரமாக ஈடுபட்டிருப் பதைக் கண்ட மௌலானா புளகாங்கிதங் கொண்டார். டாக்டர் அன்ஸாரியும் இதைக் கண்டு தைரியமடைந்தார். இந்தப் போர்தான் சரித்திரப் பிரசித்தி பெற்ற உப்பு-சத்தியாக்கிரகப் போர். ஏப்ரல்மாதம் 5-ம் தேதி மகாத்மா கைது செய்யப்பட்டார். காங்கிரஸ் தலைவர்கள் ஒவ்வொரு வராகக் கைது செய்யப்பட்டு வந்தார்கள். ஆகஸ்ட் மாதம் 30-ம் தேதி மௌலானா ஆஜாத் கைது செய்யப்பட்டார். அப்போது அவர் காங்கிரஸின் 'ஆக்டிங் தலைவ'ராக இருந்தார். அவர் டாக்டர் அன்ஸாரியைத் தமக்குப் பதிலாகத் தலைவராய் நியமித்தார். இடையிலே தைரியம் பெற்ற அன்ஸாரியும் அத்தலைமைப் பதவியைத் தயக்க மின்றி ஏற்றுக் கொண்டார். மௌலானா வீரத்துக்குக்

கொண்டு போகப்பட்டார். அவர் கைதியானதைக் கண்டிப் பதற்காகத் தேச முழுவதும் ஹர்த்தால் அனுஷ்டிக்கப் பட்டது. வழக்கு விசாரணையில் பங்கெடுத்துக் கொள்ள மௌலானா மறுத்துவிட்டார். அவருக்கு ஆறு மாத வெறுங் காவல் என்று தண்டனை விதிக்கப்பட்டது.

இச்சம்பவங்களுக் கிடையே ஸர் தேஜ்பகதூர் சாப்ரு, எம். ஆர். ஜெயகர் முதலிய மிதவாதிகள் காங்கிரஸுக்கும் சர்க்காருக்குமிடையே சமரஸத்தை ஏற்படுத்தும் முயற்சி யில் ஈடுபட்டார்கள். லண்டனில் ஒரு மகாநாடு நடந்தது. அம்மகாநாட்டின் பலனாக பிரிட்டிஷ் பிரதம மந்திரி சில கருத்துக்களை வெளியிட்டார். 1931-ம் வருஷம் ஜனவரி மாதம் 25-ந் தேதி வைஸ்ராய் ஒரு அறிக்கையை வெளி யிட்டார். பிரிட்டிஷ் பிரதம மந்திரியின் கருத்துக்களைப் பற்றி ஆலோசிப்பதற்குச் சந்தர்ப்பமளிப்பதற்காகக் காங்கிரஸ் தலைவர்கள் விடுவிக்கப்படுவார்களென்று அவ் வறிக்கை தெரிவித்தது. அன்றே காங்கிரஸ் தலைவர்கள் அனைவரும் விடுவிக்கப்பட்டார்கள். மௌலானா ஆஜாதும் அப்போது விடுதலை செய்யப்பட்டார். பின்புதான் காந்திஜி, வைஸ்ராயாகிய லார்ட் இர்வினைக் கண்டு பேசி னதின் பலனாக காந்தி - இர்வின் உடன்படிக்கை ஏற் பட்டது. மகாத்மாவும் இரண்டாவது வட்டமேஜை மகாநாட்டிற் கலந்துகொள்ளச் சம்மதித்தார்.

வட்டமேஜை மகாநாட்டுக்குச் சென்றுவிட்டு காந்திஜி வெறுங்கையோடு திரும்பிய செய்தி சரித்திரப் பதிவு பெற்றது. லார்ட் இர்வினுக்குப் பிறகு இந்தியாவின் வைஸ்ராயாக வந்த லார்ட் வில்லிங்டன் சற்றுக் கெடுபிடி யாகவே யிருந்தார். அவருடைய ஏகாதிபத்திய மமதை இந்தியாவின் தேசிய உணர்ச்சிக்கு ஓர் அறைகூவலாகவே யிருந்தது. சட்டமறுப்பைத் தொடர்ந்து நடத்துவதைத் தவிர காந்திஜிக்கு வேறு வழியில்லை. காந்திஜி போரைத் துவக்கிவிட்டார். 1932-ம் வருஷம் ஜனவரிமாதம் 4-ந் தேதியன்று காந்திஜி கைது செய்யப்பட்டார். வழக்கம் போல், காங்கிரஸ் தலைவர்கள் ஒவ்வொருவராகக் கைது செய்யப்பட்டார்கள். இம்முறையும் முஸ்லிம்கள் போரில்

கலந்து கொள்ளுவார்களோ இல்லையோவென்ற சந்தேகம் இருந்தது. தேசிய முஸ்லிம்களின் மகாநாடு முஸ்லிம்களுக்கு ஒரு வேண்டுகோளை விடுத்தது. 1930-31-ல் நடந்த சத்தியாக்கிரகப் போரைவிட இந்தத் தடவை போர் இன்னும் கடுமையாக இருந்தது; அடக்குமுறை அமுலும் அதிகமாகவிருந்தது; கஷ்ட நஷ்டங்களும் பன்மடங்கு மிகுந்திருந்தன. மக்கள் காட்டிய வீரத்துக்கும் தைரியத்துக்கும் எல்லையேயில்லை. மறியல், ஹர்த்தால் தேசியவாரக் கொண்டாட்டம், பிரிட்டிஷ் சாமான் பஹிஷ்காரம், சுதேசிய உணர்ச்சி இவை யாவும் நாடெங்கும் பொங்கிவழிந்தன. காங்கிரஸ் ஆபீஸ்களெல்லாம் போலீஸாரால் முற்றுகையிடப்பட்டுக் கைப்பற்றப்பட்டன.

பிப்ரவரி மாதம் 15-ந் தேதி காங்கிரஸின் 'ஆக்டிங்' தலைவராகவிருந்த சர்தார் சார்துல்சிங் கவீஷர் கைது செய்யப்பட்டார்; அவர் மௌலானா ஆஜாதைத் தமக்குப்பின் தலைவராக நியமித்தார். பத்து நாட்களுக்குப் பிறகு, சட்ட மறுப்போடு சம்பந்தப்பட்ட எந்த நடவடிக்கைகளிலும் பங்கெடுத்துக்கொள்ளக் கூடாதென சர்க்கார் அவருக்குத் தடையுத்தரவு விதித்தார்கள். மௌலானா உத்தரவை மீறினார். மார்ச்சு மாதம் 6-ந் தேதி, டில்லியில் அவர் வாசஸ்தலத்தைச் சுற்றிப் போலிஸ் காவல் வைக்கப்பட்டது; பலத்த போலிஸ் பந்தோபஸ்துகளுடன் மௌலானா ஆஜாத் 12-ந் தேதி கைது செய்யப்பட்டு டில்லி ஜில்லா ஜெயிலில் வைக்கப்பட்டார். இதற்கிடையில் தாழ்த்தப்பட்டோர் சம்பந்தமாக பிரிட்டிஷ் சர்க்கார் செய்த முடிவை மாற்றுவதற்காக, செப்டம்பர் மாதம் 20-ந் தேதி மகாத்மா 'சாகும்வரை உண்ணுவிரதம்' என்று ஆரம்பித்து விட்டார். தேசமும் உலகமுமே துயரக்கடலில் ஆழ்ந்தன. ஹிந்துத் தலைவர்களும் தாழ்த்தப்பட்டோர் தலைவர்களும் மகாத்மாவின் ஒப்பற்ற உயிரைக் காப்பாற்றுவதற்கு எத்தகைய தியாகத்துக்கும் தயாராகிவிட்டார்கள். இதன்பலனாக செப்டம்பர் 25-ந் தேதி 'எரவாடா ஒப்பந்தம்' ஏற்பட்டது. இதில் பிரதானப் பங்கெடுத்துக் கொண்டவர் சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார்.

பிரிட்டிஷ் சர்க்காரும் இவ்வொப்பந்தத்தை யேற்றுக் கொண்டார்கள். 26-ம் தேதி மாலைப் பிரார்த்தனைக்குப் பிறகு மகாத்மா தம் உபவாசத்தை முடித்தார். உலகம் உவகை வெள்ளத்தில் மூழ்கிற்று. பின்னர், சட்ட மறுப்புப் போரைக் குறிப்பிட்ட தலைவர்களிடையே மாத்திரம் காந்திஜி கட்டுப்படுத்திக் கொண்டார். கடைசியாக அவர், 1934-ம் வருஷம் ஏப்ரல்மாதம் 7-ந் தேதி வெளியிட்டதோர் அறிக்கையில் சட்டமறுப்பை முழுதும் நிறுத்திக்கொள்வதாக அறிவித்தார். மே மாதம் 18, 19-ந் தேதிகளில் பாடலீபுரத்தில் நடைபெற்ற அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டிக்கூட்டம் காந்திஜியின் யோசனையை யேற்றுக் கொண்டது. இத்துடன் ஒரு 'போர்-சகாப்தம்' முடிவுபெற்றது.

தேசம் தன் சுதந்திரத்துக்காகச் செய்த தியாகங்களிலும், அடைந்த கஷ்டநஷ்டங்களிலும் நாமும் ஓரளவு பங்காயினும் எடுத்துக் கொண்டோமென்று இந்திய முஸ்லிம்கள் இன்று தலைநிமிர்ந்து நிற்பதற்கு மூலகாரணமா யிருப்பவர் மௌலானா அபுல் கலாம் ஆஜாதே. அறியாமையிலும், மதவெறியிலும் மூழ்கிக்கிடந்த முஸ்லிம்களை அரசியல் விழிப்பும், உணர்ச்சியும் உயிரும் பெறச் செய்த மௌலானா ஆஜாத் சுதந்திரப்போரில் அவர்களுக்குத் தலைமை வகித்து அவர்களை நடத்திச் செல்வதும் தம்முடைய கடமையென உணர்ந்தார். சத்தியத்தைக் கூறுவதனால், உயிர்போவதாயினும் அதைப் பொருட்படுத்தாத ஆஜாத் அந்தச் சத்தியத்தை அடிப்படையாகக் கொண்டெழுந்த தம் கடமையுணர்ச்சியைச் செயல் வழிப்படுத்தும்போது ஏற்பட்ட துன்பங்களையும் கஷ்டங்களையும் தெய்வாத்மாக்களுக்கே யுரிய பொறுமையுடனும், புன்முறுவலுடனும் ஏற்றுக் கொண்டார். சர்க்காரின் சட்டங்களை மீற இவர் தயங்கவில்லை. சர்க்காரின் அடக்குமுறையை எதிர்க்க இவர் முன்னணியில் நின்றார்; சிறைவாசம் இவருக்கு சகஜமாய் விட்டது. ஆனால் அக்காலத்திலெல்லாம் இந்திய முஸ்லிம்களும் இவரைக் கைவிடவில்லை. முஸ்லிம் உலகுக்கே

தலைமை ஸ்தானத்தை வகிக்கக்கூடியவர் இவரையும் விடச் சிறந்தவர் யாருமில்லை என்பதை அவர்கள் நன்குணர்ந்திருந்தார்கள்.

## 9. மௌலானாவின் நிர்மாண வேலை

ஆஜாதின் திறமை போராட்டங்களோடு நின்றுவிடவில்லை; இவர் வீரமும் தலைமையும் இதர நிர்மாண வேலைகளிலும் ஈடுபட்டு, அற்புதமான வெற்றிகளை அளித்திருக்கின்றன. 1927-ல் கல்கத்தாவில் நடந்த ஹிந்து முஸ்லிம் கலகங்களின்போது மௌலானா செய்த சேவை மறக்கற்பாலதன்று. நகரத்தில் சமாதானத்தை நிலைநாட்ட முயன்ற ஒவ்வொருவரும் உயிரைக் கையிற் பிடித்துக்கொண்டு போக வேண்டியிருந்த காலம் அது. ஆனால் மௌலானாவோ, கொஞ்சங்கூடப் பயமின்றி நகர முழுதும் சுற்றிக்கொண்டே வந்தார்; ஓரிடத்தில் ஹிந்துக்களுக்கு வேண்டுகோள் விடுப்பார்; மற்றோரிடத்தில் முஸ்லிம்களுடன் வாதம் செய்வார். அப்போது நடந்த சம்பவங்களில் சில வற்றைக் கீழே காணலாம்.

ஹிந்துக்களே நிறைந்திருந்த ஓரிடத்துக்கு, ஒரு தூரப் பிரதேசத்திலிருந்து முஸ்லிம் தையற்காரர்கள் தங்கள் ஜீவனத்துக்காகத் தினமும் வருவது வழக்கம், இவர் அந்த இடத்துக்குப் போனார். அறுபது அல்லது எழுபது பேருக்குக் குறையாத தையற்காரர்கள் ஹிந்து வீடுகளில் ஹிந்துக்களால் பாதுகாக்கப்பட்டிருந்தார்கள். ஆனால் வெளியே நடந்துகொண்டிருந்த காலிகளின் அக்கிரமத்தினால் அவர்கள் தங்கள் சொந்த இடம் போகத் துணியவில்லை. அவர்களுடைய உயிரைக் காப்பாற்றியதற்காக ஹிந்துக்களுக்கு இவர் நன்றி செலுத்திவிட்டு, அவர்களனைவரையும் லாரிகளில் போட்டு, அவர்களுடைய சொந்த ஸ்தலத்துக்குப் பாதுகாத்துச் சென்றார். முஸ்லிம்களே அதிகமாக நிறைந்திருந்த பிரதேசங்களில் ஹிந்துக்கள் இதே நிலையில் இருந்தார்கள். ஒரு முஸ்லிம் தம் வீட்டில் 13 ஹிந்துக்களை (11 ஆண்கள், 2 பெண்கள்)

பாதுகாத்துக்கொண்டிருந்தார். நடு இரவில் டொங்காக்களோ, (ஒருவகை வாடகை வண்டிகள்) வாடகை மோட்டார்களோ கிடைக்கவில்லை. முனிசிபல் கார்ப்பொரேஷனுக்கு ஒரு டாக்ஸிக்காக வேண்டுகோள் விடுத்தார். அவர்களை அந்த டாக்ஸியில் போட்டு, அவர்கள் வீட்டுக்கு அனுப்பினார். மூன்று நாட்களுக்கு, இரவிலும் சரி, பகலிலும் சரி, அவருக்கு ஓய்ச்சலோ, ஒழிவோ இல்லை. ஒரு நாள் நள்ளிரவில் அசன்ஸோலிலிருந்து ஒரு செய்தி வந்தது. அங்கிருந்து சிலர் கல்கத்தாவுக்கு இரண்டு நாட்களுக்கு முன் புறப்பட்டனர். அவர்களைப் பற்றித் தகவல் தெரியவில்லை என்பதுதான் அச்செய்தி. ஆஜாத் அவர்களைத் தேடிக் கண்டுபிடித்து, அவர்கள் உறவினர்களுக்குத் தகவல் தெரிவித்து, அவர்களை அவர்களிடத்திற் கொண்டு சேர்த்துவிட்டுத்தான் மறுகாரியம் பார்த்தார்.'

உள்ளூர்த் தகராறுகள் பலவற்றை மௌலானா தீர்த்துவைத்திருக்கிறார். இருகட்சியாரின் வாதங்களையும் சிரத்தையாகக் கேட்டு, இருவருக்கும் திருப்தியான ஒரு முடிவைச் செய்வதில் மௌலானா வெகு சமர்த்தர். லக்ஷ்மணபுரியில் நடந்த ஷீயா-ஸுன்னித் தகராறைத் தீர்த்து வைப்பதில் மௌலானா மிகவும் பாடுபட்டார். அதற்காக அவர் தம் அரிய காலத்தையும், சக்தியையும் தாராளமாகச் செலவழித்தார்.

1934-ல் சட்டமறுப்பை நிறுத்திய காங்கிரஸ் மறுபடியும் சட்டசபை வேலைகளில் ஈடுபட்டது; அதற்காக ஒரு பார்லிமெண்டரி உபகமிட்டியும் நிறுவப்பட்டது. அக்கமிட்டியில் மௌலானா ஆஜாதும் ஒரு அங்கத்தினர். அப்போது நடந்த மத்தியச் சட்டசபைத் தேர்தல்களுக்குப் பிறகு 1935-ம் வருஷத்துப் புதிய அரசியல் சீர்திருத்தம் அமுலுக்கு வரப்போவதாக அறிவிக்கப்பட்டது. மாகாணச் சட்டசபைகளைக் கைப்பற்றி, உள்ளிருந்தே அவ்வரசியல் சட்டத்தைத் தகர்ப்பதெனக் காங்கிரஸ் முடிவு செய்தது. அதன்படி மாகாணச் சட்டசபைத் தேர்தல்களில் காங்கிரஸ்காரர்கள் கலந்துகொண்டார்கள். 1937-ம் வருஷம் மார்ச்சு மாதத்தில் டில்லியில் காங்கிரஸ் சட்டசபை

அங்கத்தினர்களுடைய விசேஷ சம்மேளன மொன்று நடைபெற்றது. அதில் மாகாணக் கவர்னர்களிடம் சில வாக்குறுதிகளைப் பெற்றுக்கொண்டு, மந்திரி சபைகளை அமைப்பது என்று தீர்மானிக்கப்பட்டது. அவ்வாக் குறுதிப் பிரச்னை சம்பந்தமாகக் காங்கிரஸுக்கும் சர்க் காருக்கும் சில வாக்குவாதங்கள் நடைபெற்றன. முடிவில் ஆறு மாகாணங்களில் காங்கிரஸ் மந்திரிசபைகள் ஏற்பட்டன. மந்திரிசபைகளின் வேலையை மேற்பார்வை யிடுவதற்காக ஒரு பார்லிமெண்டரி உபகமிட்டி நிறுவப் பட்டது. அக்கமிட்டியில் மௌலானா அபுல்கலாம் ஆஜாத், பாபு ராஜேந்திரபிரசாத், சர்தார் வல்லபாய் படேல் ஆகிய மூவருமிருந்தனர். வாக்காளர்களுக்குத் தாங்கள் அளித்த வாக்குறுதிகளைச் செயலளவில் நிறைவேற்ற வேண்டிய கடமை காங்கிரஸ் மந்திரிசபைகளைச் சேர்ந்தது. அம்மந்திரிகளோ, முதன் முதலாகப் பதவி யேற்றிருக்கி ருர்கள்; அவர்களுக்கு முன்னே யிருந்த பிற்போக்கு வாதிகள் அவர்களுடைய வேலையை இன்னும் கஷ்ட மாகவே செய்துவிட்டுப் போயிருந்தனர். எனவே, அத் தகைய மந்திரிசபைகளின் வேலையை மேற்பார்த்து, அவர் களுக்கு ஆலோசனை கூறும் வேலை மிகச் சுலபமானதல்ல.

எல்லைப்புற மாகாணச் சட்டசபையில், காங்கிரஸ் கட்சிதான் மிகப் பெரிய கட்சி. ஆனால் மந்திரிசபை யமைப்பதற்கு வேண்டிய மெஜாரிட்டிக்கு இன்னும் நான்கு அங்கத்தினர்கள் வேண்டும். எல்லைக் காந்தியின் மாகாணம் காங்கிரஸ் மந்திரி சபை யில்லாமலிருப்ப தென்பது கற்பனை செய்துகூடப் பார்க்க முடியாதது. தம் முடைய நம்பிக்கைக்குப் பாத்திரமாக இருந்து எப்போதும் தமக்குப் பூரண ஆதரவை யளித்துவந்த வீரப் பட்டாணி யர்கள் காங்கிரஸ் மந்திரிசபைகளின் நன்மைகளைப் பெற முடியாமலிருப்பது மௌலானுவுக்கு மிகுந்த மன வேதனையை யுண்டு பண்ணிற்று. அவர் உடனே எல்லை மாகாணத்துக்குச் சென்ருர். பல்வேறு கட்சிகளுக்கும் காங்கிரஸின் திட்டத்தை விளக்கிக் கூறினர். வீரப் பட் டாணியர்களின் தேசாபிமான உணர்ச்சிக்கு இவர் வேண்டு

கோள் விடுத்தார்; ஒரு மாகாணத்தில் மட்டிலுமன்று, இந்தியா முழுவதிலுமே தங்கள் சர்க்காரை ஏற்படுத்தும் சக்தி காங்கிரஸுக்கும், வீரப் பட்டாணியர்களுக்கும் உண்டென்பதை அவர்களுக்கு ஞாபகப்படுத்தினர். ஆறு அல்லது ஏழு நாளைய உழைப்பின் காரணமாகப் போதிய பலனும் கிட்டியது. மௌலானாவின் முன்னிலையிலே, சில சட்டசபை அங்கத்தினர்கள் காங்கிரஸ் உறுதிமொழிப் பத்திரத்தில் கையெழுத்திட்டார்கள். ஒரு பலமான காங்கிரஸ் மந்திரிசபை எல்லை மாகாணத்தில் நிறுவப்பட்டது. சிந்து மாகாணமும் இம்மாதிரி விஷயத்தில் மௌலானாவுக்கு மிகக் கவலையைக் கொடுத்துக்கொண்டிருந்தது. சட்டசபையிலிருந்த காங்கிரஸ் கட்சி, அல்லாபக்ஷின் (சென்ற ஆண்டு மே மாதம் 14-ந் தேதி இவர் பட்டப் பகலில் கொலை செய்யப்பட்டார்) மந்திரிசபையை ஆதரித்துக் கொண்டு வந்தது. ஆனால், நிலவரி விகிதத்தை நிர்ணயிக்கும் பிரச்னை சம்பந்தமாகத் தகராறு ஏற்பட்டது. மௌலானா சிந்துவுக்கு விரைந்து சென்று காங்கிரஸ் கட்சிக்கும், மந்திரிசபைக்கு மிடையே ஒரு சமரஸத்தை உண்டுபண்ணினர். ஆனால், சிந்து சட்டசபையிலுள்ள முஸ்லிம் லீகர்கள் இதை நீடிக்க விடவில்லை. காங்கிரஸ் கட்சிக்கும் மந்திரி சபைக்கு மிடையேயுள்ள வித்தியாசங்களைப் பிரமாதப்படுத்தி, தாங்களே மந்திரி சபையை அமைக்க முயன்று கொண்டிருந்தார்கள். ஆனால் மௌலானா ஆஜாத் 'இடது'கக்ஷியாக இருந்தார். காங்கிரஸ் கட்சியின் நிலைமையைத் தெளிவாக்கியதன் மூலம், இவர் பிறருடைய சூழ்ச்சிகளையெல்லாம் வெற்றி பெற முடியாமல் செய்தார். "சிந்துவிலுள்ள காங்கிரஸ் கட்சி, ஒரு திட்டமான கொள்கைக்காக நிற்கிறது; அதன் முன்னே உன்னத லக்ஷியங்கள் இருக்கின்றன. காங்கிரஸின் வேலைத் திட்டத்தை நிறைவேற்றுகிற மந்திரி சபை எதுவும் காங்கிரஸால் ஆதரிக்கப்படு" மென்று இவர் கூறினர்.

1938 ஆரம்பத்தில், அரசியற் கைதிகளின் உண்ணாவிரதங் காரணமாக, பீஹார் சர்க்கார் மௌலானாவின்

தலையீட்டை விரும்பினார்கள். மௌலானா கைதிகளை ஹஜாரிபாக் சிறையிற் சந்தித்து அவர்கள் உண்ணா விரதத்தை விடும்படி செய்தார். அவர்களுடைய வாழ்க்கை நிலைமையை உயர்த்துவதற்கு வேண்டிய நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ளப்படுமென்றும், சிறிது காலத்தில் அவர்கள் விடுதலை செய்யப்படுவார்களென்றும், மௌலானா உறுதியளித்தார். பீஹார் சர்க்கார் இவற்றை யெல்லாம் நிறைவேற்றினார்கள். ஆனால், மௌலானா ஆஜாதின் சேவைகளிலெல்லாம் தலைசிறந்தது, பீஹார் மந்திரி சபைக்கும் ஜமீன்தார்களுக்குமிடையே நில வரி சம்பந்தமாக ஒரு சமரஸத்தை உண்டுபண்ணியதே.

தேர்தல் - காலத்தில் வாக்காளர்களுக்குக் காங்கிரஸ் அளித்த வாக்குறுதிகளிலொன்று விவசாயிகளுக்கு நிவாரணமளிப்பது. ஆனால் ஐ. மா., பீஹார் போன்ற ஜமீன்தாரி மாகாணங்களில் இப்பிரச்னை மிகவும் சிக்கலானது. இதர மாகாணங்களைப் போல், சர்க்காருக்கும் விவசாயிகளுக்கும் நேரடியாக உள்ள விவகாரமல்ல இது. ஜமீன்தார்களுக்கும், குத்தகைக்காரர்களுக்கு மிடையே யுள்ள விவகாரம் வேறு; இவ்விருவருக்கும் சர்க்காருக்கு மிடையேயுள்ள விவகாரம் வேறு. பீஹார் மாகாணத்தி லுள்ள ஜமீன்தார்களின் தூதுகோஷ்டி ஒன்று காங்கிரஸ் தலைவர்களைச் சந்திப்பதற்காக 1937-ம் வருஷம் அக்டோபரில் கல்கத்தா சென்று, பாபு ராஜேந்திர பிரசாத்தைச் சந்தித்தது. மௌலானாவின் உதவி இப்பிரச்னையில் கிடைக்குமானால், மிகவும் சௌகரியமாயிருக்குமென்பது ராஜேந்திரரின் கருத்து. தூது கோஷ்டி மௌலானா ஆஜாதையும் சந்தித்தது. இவரும் பாடலிபுரத்துக்குப் போய்த் தம்மாலான உதவியைச் செய்ய இசைந்தார். இவர் அங்குப் போய், பாபு ராஜேந்திரரோடு ஒத்துழைத்து அநேக நாட்கள் வேலை செய்தார். விவாதத்திலிருக்கும் விஷயங்கள் ஒரு முடிவான கட்டத்தை அடையும்போதெல்லாம், மாகாணப் பிரதம மந்திரி தம் சகாக்களுடன், அந்த மகாநாடுகளில் கலந்து கொள்ளுவார். குத்தகைக் காரர்களுடைய கோரிக்கைகள் யாவற்றையும் ஜமீன்

தார்கள் அப்படியே ஏற்றுக்கொள்வார்களென்று எதிர் பார்ப்பது முடியாத காரியம். ஆனால் மௌலானாவும் ராஜேந்திரரும், எவ்வளவு தூரம் குத்தகைக்காரர்களின் கோரிக்கைகளை ஜமீன்தார்கள் ஏற்றுக்கொள்ளச் செய்ய முடியுமோ அவ்வளவு தூரம் முயன்றார்கள்.

சிக்கலான பிரச்னைகள் அதில் நிறைந்திருந்தன; மிக்க ஜாக்கிரதையாகவும் சாமர்த்தியமாகவும் பேச்சு வார்த்தைகளை நடத்த வேண்டியிருந்தது. அங்குச் செய்த வேலையைப்பற்றி மௌலானாவே கீழ்க்கண்டவாறு கூறி யிருக்கிறார் :—“ அவர்களை முதலில் ஏற்றுக்கொள்ளும்படி நான் செய்த முதல் வேலை, தம்முடைய ஜீவனத்துக்கே அவதிப்படும்படியாக இருக்கிற நிலையைப் போக்குவதற் காக, குத்தகைக்காரனுடைய சுமை குறைக்கப்படவேண்டு மென்ற முக்கியமான விஷயத்தை ஒப்புக்கொள்ளும்படி செய்ததே. இதை அவர்கள் ஒப்புக்கொண்ட பிறகு, விகிதாசாரம் இரண்டாவது பிரச்னை. அதுவும் முடிவு செய்யப்பட்டபிறகு, குத்தகை நிபந்தனைகளை ஒழுங்காக நிறைவேற்றாதவர்களுடைய பிரச்னை வந்தது. அப்போது அமுலிலிருந்த சட்டம், அக்குத்தகைக்காரனிடம் இருப்பவைகளையெல்லாம் பறித்துக்கொண்டு அவனை நாசமாக்க, ஜமீன்தார்களுக்கு இடமளித்திருந்தது. ‘நியாயம்’ என்பதை ஒப்புக்கொண்ட பிறகு, தங்களுக் குரியதைவிட அதிகப் பெறுமானமுள்ள நிலத்தையும் சொத்துக்களையும் விற்பதில் அவர்கள் எப்படிப் பிடி வாதங் காட்ட முடியும்? இந்தப் பிரச்னையின்மேல் பேச்சு வார்த்தைகள் முழுதுமே முறிந்துவிடும்போல் தோன்றிற்று. பேச்சு வார்த்தைகள் முடிவடையும் வரையில் சட்ட சபையை ஒத்தி வைக்குமாறு நாங்கள் பிரதம மந்திரியைக் கேட்டுக்கொண்டோம். எல்லா வற்றையும் தயாளத்தோடு செய்யுமாறும், ஒரு கையால் கொடுப்பதை மற்றொரு கையால் பிடுங்கிக்கொள்ள வேண்டாமென்றும் நான் ஜமீன்தார்களை வேண்டிக் கொண்டேன். அதற்கு அவர்கள் கௌரவத்துடன் நடந்து கொண்டார்களென்றே நான் சொல்ல வேண்டும்.

தர்ம பலன் அபாரமாக இருந்தது. சில இடங்களில், சட்டம் அமுலுக்கு வருவதற்கு முன்னதாகவே, ஜமீன் தார்கள் அச்சட்டப்படி நடக்க ஆரம்பித்துவிட் டார்கள்.''

குடியானவர்களுக்குக் கிடைத்த பலன் கொஞ்சமல்ல. சராசரி 25 சத விகிதமும், சில இடங்களில் 40 முதல் 50 சத விகிதமுங்கூட வாடகை குறைக்கப்பட்டது. வாடகை கொடுப்பதைத் தவிர, இதர எல்லா விவ காரங்களிலும், தங்களுடைய நிலங்களுக்குச் சொந்தக் காரர்களாகும் உரிமையை அவர்கள் பெற்றூர்கள். அவர்க ளுடைய சொத்துக்களும் வீடுகளும் பறிமுதல் செய்யப் படவோ, விற்கப்படவோ மாட்டா ; அவர்களிடமிருக்கும் நிலமும் அப்படியே விற்கப்படமாட்டாது ; கடனை அடைப் பதற்குஎவ்வளவு தேவையோ அந்த அளவில் மாத்திரம் தான் விற்கப்படும். அதுவும் சர்க்கார் நியாயமெனக் கருது கிற விலைக்குத்தான். ஆகையால் அவர்களுடைய நிலங்கள் தாங்கள் கொடுக்கவேண்டிய கடனுக்காக ஜமீன்தார் களால் விற்கப்பட்டாலும், அதனுடைய முழுப் பெறு மானமும் அவர்களுக்குக் கிடைத்தது. அவற்றை விற்கவோ, வேறு யாருக்கும் மாற்றவோ, அந்த ஜமீன் தாரிக் குத்தகைக்காரர்களுக்கு உரிமையுண்டு. அவர் களுக்கு வீடுகள் கட்டிக்கொள்ளவோ, தோட்டங்கள் வைக்கவோ உரிமையிருந்தது. அவைகளின் அனுபோகத்தி லிருந்து ஜமீன்தார்கள் தங்களை விரட்டி விடுவார்களோ என்ற பயம் இப்போது அவர்களுக்கில்லை. இப்படியாக, அக்குடியானவக் குத்தகைக்காரர்கள் தங்களுடைய நிலத் துக்கு எஜமானர்களாகி விட்டார்கள்.

இப் பேச்சு வார்த்தைகளில் மௌலானுவின் பங்கைப் பற்றி பாபு ராஜேந்திர பிரசாத் கூறுவதாவது :—''ஜமீன் தார்களோடும், குடியானவர்களோடும் நடத்திய பேச்சு வார்த்தைகளின்போது மௌலானுவுக்குள்ள மகத்தான புத்திக்கூர்மையும், பிறரை வழிக்குக் கொண்டுவரும் திற மையும் நன்றுக வெளிப்பட்டன. ஆரம்பத்தில், பீஹாரின் நில சம்பந்தமான சட்டம் அவருக்குத் தெரியாதாகையால்,

அது ஒரு பெரிய பிரதிகூலமாயிருந்தது. ஆனால் பேச்சு வார்த்தைகள் நடக்கும்போதே, இந்த மிகச் சிக்கலான சட்டத்தின் நுணுக்கங்களையெல்லாம் வெகு இலகுவில் புரிந்துகொண்டு விட்டார்; அதை விட விசித்திரமானது, அச் சட்டத்தைப்பற்றிய தம்முடைய கருத்துக்கே அவர் பிறரையும் கொண்டு வந்ததுதான். முதல் தடவையாகப் பல நாட்கள் விவாதங்கள் நடைபெற்றன; அநேகமாக எல்லாப் பிரச்னைகளும் முடிவு செய்யப்பட்டு விட்டன. ஆனால், மௌலானா இரண்டாந் தடவையும் பாடலீ புரத்துக்கு வந்து அநேக நாட்கள் தங்கும்படி நேர்ந்தது. இவ்வாறாக, நீண்ட விவாதத்துக்குப் பிறகு காங்கிரஸுக்கும் ஜமீன்தார்களுக்குமிடையே ஒப்பந்தமேற்பட்டது. நாங்கள் வேண்டுமென்றே கிஸான் சபையைக் கலந்துகொள்ளவில்லை; அவசியமானால், இன்னும் அதிகமாக வேண்டியவைகளுக்காகக் கிளர்ச்சி செய்ய அவர்களுக்கிருக்கும் சுயேச்சையை நாங்கள் கட்டுப்படுத்த விரும்பாததே இதற்குக் காரணம்.......குத்தகை சம்பந்தமாகவும் வருமான வரி சம்பந்தமாகவும் இயற்ற வேண்டிய சட்டங்களை விவாதித்துக் கொண்டு வருகையில் அநேக முறை பேச்சு வார்த்தைகள் முறிந்துபோய் விடுமோவென்று தோன்றிற்று. இச்சந்தர்ப்பங்களி லெல்லாம், மௌலானாவின் சாமர்த்தியமும், பிரச்னைகளை அவர் அணுகும் போக்கும், பிறரைத் தம் வழிக்குக் கொண்டு வரக்கூடிய சக்தியுமே நிலைமையைச் சமாளித்தன."

ஜமீன்தார்களின் பிடிப்பிலிருந்தும், ஆக்ரமிப்பிலிருந்தும் விடுபட்ட பல்லாயிரக் கணக்கான குடியானவர்கள் இன்று மௌலானாவை வாழ்த்துகிறார்கள். தங்கள் உழைப்பின் பலனை அனுபவிக்கும் உரிமையைத் தங்களுக்களித்த பீஹார் மந்திரி சபைக்கு அவர்கள் நன்றி தெரிவிக்கும்போது, அதற்குக் காரணமாயிருந்த மௌலானாவை அவர்கள் மறந்துவிடவில்லை. தங்களை ஜமீன்தார்களின் கொடுமையிலிருந்து விடுவித்த மௌலானா, தங்கள் நாட்டை ஏகாதிபத்தியக் கொடுங்கோன்மையிலிருந்து விடுவிப்பார் என்பதில் அவர்களுக்குச்

சிறிதும் சந்தேகமில்லை. மௌலானு ஒரு சிறந்த தளகர்த்தர் மாத்திரமல்ல; உலகின் மரியாதைக்குரிய ஒரு ஆத்ம ஞானி மாத்திரமல்ல; அறிவு - உலகின் அணிகலன் மாத்திரமல்ல; இவர் ஏழைகளின் தோழனுகவுமிருக்கிருர்: அவர்களுடைய துன்பங்களை உணர்ந்து அவற்றை நிவர்த்திப்பதற்காகச் செய்யும் முயற்சியில் ஏற்படும் எந்தக் கஷ்டங்களையும் பொருட்படுத்ாதவர். அமெரிக்க ஆசிரியராகிய 'ஜான் கந்தர்' தாம் எழுதிய "ஆசியாவின் உட்புறம்" என்ற புத்தகத்தில் மௌலானு ஆஜாதைப் பற்றிக் குறிப்பிடும்போது இவர் காங்கிரஸின் "மூளையின் ஒரு பாகமாகவும், ஆத்மார்த்திக விளக்க"மாகவுமிருக்கிருர் என்று கூறுகிருர். இது காங்கிரஸில் மௌலானுவுக்குள்ள பூரணப் பங்கையும் விவரித்ததாக ஆகாது. மௌலானு காங்கிரஸின் மூளை மாத்திரமல்ல; இவர் காங்கிரஸின் முதுகெலும்புங்கூட. காங்கிரஸுக்கு மாத்திரமல்ல, நியாய உலகுக்கே இவர் முதுகெலும்பு.

# 10. 3-9-1939-க்குப் பின்

**1939**-ம் ஆண்டு செப்டம்பர் மாதம் 3-ந் தேதி ஞாயிற்றுக் கிழமை மாலை $7\frac{1}{2}$-மணிக்குச் சென்னைத் திருவல்லிக்கேணிக் கடற்கரையில் திலகர் கட்டத்தில் பிரம்மாண்டமான பொதுக்கூட்டம் நடந்து கொண்டிருக்கிறது. பாபு சுபாஷ் சந்திரபோஸ் உணர்ச்சியும் வீரமும் ததும்பப் பேசிக்கொண்டிருக்கிருர். கூட்டத்திலிருந்த ஒருவர் அவர் கையில் அன்று மாலை "மெயில்" பத்திரிகையின் ஒரு குறிப்பிட்ட பக்கத்தைப் பிரித்துக்கொடுத்தார். "பிரிட்டிஷ் பிரதம மந்திரி நெவில் சேம்பர்லின், இன்று முதல் பிரிட்டனுக்கும், ஜெர்மனிக்குமிடையே ஒருபோர் நிலை உண்டாகியிருக்கிறதென்று அறிவித்தார்" என்பதை பாபு சுபாஷ்சந்திரபோஸ் படித்தார். அவருடைய குரல் கம்மிற்று; உணர்ச்சியால் நாவெழவில்லை; வார்த்தைகள் வெளிவர மறுத்தன. சிறிது நேரத்தில் கூட்டம் கலைக்கப்பட்டது. அப்போதுதான், கூட்டத்துக்கு

வந்திருந்த ஒருலக்ஷம் சென்னைவாசிகளும் பிரிட்டன் போரிலிறங்கிவிட்டதை யறிந்தார்கள். நடக்கப் போவதைக் குறித்த சிந்தனையுடன் அவர்கள் வீடு திரும்பினார்கள்.

போர் ஆரம்பமாவதற்கு முன்பே, இந்தியத் துருப்புகள் எகிப்துக்கும், சிங்கப்பூருக்கும் இந்தியச் சட்ட சபையின் அனுமதியின்றி அனுப்பப்பட்டன. இந்தியர்களைக் கலந்தாலோசிக்காமல், சர்க்கார் சிருஷ்டித்த பிற்போக்காளர்களே நிறைந்திருந்த இந்தியச் சட்டசபையைக் கூடக் கேட்காமல், இந்தியா ஜெர்மனிக்கு விரோதமாக யுத்தத்தில் சேர்ந்த நாடாக அறிவிக்கப்பட்டது. 1935-ம் வருஷத்திய அரசியல் சீர்திருத்தச் சட்டம் திருத்தப்பட்டது. வைஸ்ராய் சர்வாதிகாரியானார்; அவசரச்சட்ட ஆட்சி ஆரம்பமாயிற்று, மாகாணச் சுய ஆட்சியின் போலித் தன்மை வெளியாயிற்று. காங்கிரஸ் காரியக்கமிட்டி கூடிற்று. ஒருவாரத்துக்குமேல் ஆலோசனை செய்து, சரித்திரத்திலேயே அழியாத இடத்தைப்பெற்ற தன் பிரகடனத்தைச் செப்டம்பர்மாதம் 14–ந் தேதி வெளியிட்டது. அப்பிரகடனத்தில் போலந்துக்கு அனுதாபம் தெரிவித்து, ஜெர்மனியின் ஆக்கிரமிப்பைக் கண்டித்து, பிரிட்டனின் யுத்தலக்ஷ்யங்கள் என்னவென்று கேட்டிருந்தது. அதற்கு வைஸ்ராய் அளித்த பதிலும், இந்தியா மந்திரி செய்த பிரசங்கமும் தேசத்தைத் திருப்திப்படுத்தவில்லை; பிரிட்டனின் ஏகாதிபத்திய வெறி இன்னும் அழியவில்லையென்பதும், இந்தியாவைப் 'பிரித்து ஆள்வது' என்ற பழைய உளுத்துப்போன முறையைக் கொண்டே ஆளப்பார்க்கிறார்கள் என்பதும் தெளிவாக விளங்கிற்று. எனவே, காங்கிரஸ் காரியக்கமிட்டி மறுபடியும் கூடி மாகாணங்களிலிருந்த காங்கிரஸ் மந்திரி சபைகளை ராஜிநாமா செய்துவிட்டு வெளியேறுமாறு அக்டோபர்மாதம் 22–ந் தேதி கட்டளையிட்டது.

இதற்குப் பிறகுதான் இந்திய சரித்திரத்திலேயே அதிசயிக்கத்தக்க சம்பவமொன்று நிகழ்ந்தது. முஸ்லிம்லீக் தலைவர் ஜனாப் ஜின்னா டிஸம்பர் மாதம் 22–ந் தேதி

வெள்ளிக்கிழமையை முஸ்லிம்களின் "விமோசன தின மா"கக் கொண்டாடுமாறு முஸ்லிம் லீகுக்குக் கட்டளை யிட்டார். முஸ்லிம்களின் மதம், கல்வி, அரசியல் உரிமை யாகியவற்றை அழிக்கக் கங்கணங் கட்டிக்கொண்டிருந்த காங்கிரஸ் மந்திரி சபைகளிலிருந்து முஸ்லிம்கள் விடுதலை பெற்றதே இவ்விமோசன தினத்துக்குண்டான சந்தர்ப் பம்! நாகரிக உலகம் திடுக்குற்றது, இந்தியா பிரமிப் படைந்தது. தேசீய முஸ்லிம்கள் வெட்கித் தலைகுனிந் தார்கள். அப்போது மௌலானா அபுல்கலாம் ஆஜாத் ஒரு அறிக்கை வெளியிட்டார். அதன் சில பாகங்களைக் கீழே காணலாம் :—

"இப்போது, எட்டு மாகாணங்களில் தன்னுடைய ஆட்சியைத் தன் சொந்த இஷ்டப்படியும் முடிவின்படியும் அது (காங்கிரஸ்) விட்டுவிட்டபோது, இந்திய முஸ்லிம் களுக்கு லீக் தலைவர் என்ன புத்திமதி கொடுக் கிறார்? இதுதான் அது (புத்திமதி): அவர்கள் மசூதி களுக்குச் சென்று, அதிகாரத்தைவிடக் கடமையைப் பெரி தாகக்கருதி இந்தியாவின் சுதந்திரப் பிரச்னையின்மேல் மாத்திரமல்லாமல், கீழை நாட்டைய ஒதுக்கப்பட்ட மக்கள் அனைவரின் உரிமைகளின் பிரச்னையின்மேலும் தங்கள் பதவிகளை ராஜிநாமாச் செய்த காங்கிரஸ் மந்திரி சபைக ளிடமிருந்து விடுதலை பெற்றதற்காக, ஆண்டவனுக்கு நன்றி செலுத்தவேண்டும். எவ்வளவுதான் காங்கிரஸோடு மாறுபட்டிருந்தாலும், இம்முறையில் உலகுக்கு அறிமுகப் படுத்தி வைக்கப்படுவதைச் சகித்துக்கொண்டிருக்கும் முஸ்லிம் கோஷ்டியும் இருக்கக்கூடுமென்பதை என்னால் கற்பனை செய்து பார்ப்பதுகூடக் கஷ்டமாக இருக்கிறது.

"தங்களுடைய நன்மைக்காகவும், உரிமைக்காகவும் தாங்கள் தகுதியென்று கருதுகிற எந்தப் போராட்டத் தையும் நடத்த முஸ்லிம்களுக்குப் பூரண உரிமையுண்டு. ஆனால் இது அவர்களுடைய வீட்டுத் தகராறு. இந்தி யாவின் சுதந்திரத்துக்கு விரோதமாக உபயோகித்துக் கொள்ளப்படும் எந்த நடவடிக்கையையும் அவர்கள் எந்தச் சந்தர்ப்பத்திலும் எடுக்கக்கூடாது. ஜனாப் ஜின்னாவின்

தற்போதைய போக்கு அவர்களை இந்தத் துரதிர்ஷ்டவசமான நிலைமைக்கே அழைத்துச் செல்கிறது. இந்தியாவின் சுதந்திரப் பாதையின் முட்டுக்கட்டையாக முஸ்லிம்கள் ஆக்கப்படுகிறார்களென்பதை இது தெளிவாகக் குறிக்கிறது. 1912–ல் இதைப்பற்றி நான் முஸ்லிம்களை யெச்சரித்தேன். 37–ஆண்டுகளுக்குப் பிறகு அதைத் திருப்பிச் செய்ய வேண்டிய அவசியம் நேர்ந்திருப்பது என்மனதைக் கடுமையாகப் புண்படுத்துகிறது.

"மறுபடியும், 'விமோசன தின'த்தைக் கொண்டாடுமாறு ஏன் ஜனாப் ஜின்னா முஸ்லிம்களுக்கு யோசனை கூறுகிறார்? ஏனெனில், அவர்கள் 'காங்கிரஸ் மந்திரி சபைகளின் கொடுமைகளிலிருந்து காப்பாற்றப்பட்டிருக்கிறார்கள்!' அப்படிக் கூறப்பட்ட, கொடுமைகளின் தன்மையும் அளவுந்தான் என்ன? ஜனாப் ஜின்னாவின் வார்த்தைகளில், காங்கிரஸ் மந்திரி சபைகள் ஒரு திட்டமான, முஸ்லிம்களுக்கு விரோதமான, முறையில் ஏவப்பட்டிருந்தன. 'காங்கிரஸ் மந்திரி சபைகள் தங்கள் நிர்வாகக் கடமையை நிறைவேற்றுவதிலும், சட்டசபைகளிலும், முஸ்லிம்களின் அபிப்பிராயத்தைப் புறக்கணிப்பதற்கும் முஸ்லிம்களின் கல்சாரத்தை யொழிப்பதற்கும் தங்களால் இயன்றதைச் செய்திருக்கின்றன. அவர்களுடைய சமூக வாழ்க்கை மத வாழ்க்கைகளில் தலையிட்டிருக்கின்றன; அவர்களுடைய பொருளாதார, அரசியல் உரிமைகளை மிதித்துத் துகைத்திருக்கின்றன!' சரி, இப்போது ஜனாப் ஜின்னா வரைந்திருக்கும் சித்திரம் உண்மையானதென நாம் வைத்துக்கொள்வோமானால், அதிலிருந்து என்ன முடிவுக்கு வரலாமென்பதைப் பார்ப்போம். முடிவு மிகத் தெளிவானது; உடனே தென்படக் கூடியது. எட்டு மாகாணங்களின் சர்க்கார்கள் முஸ்லிம்களுடைய மத, சமூகவாழ்க்கையில் தலையிட்டுக்கொண்டு வந்திருக்கின்றன. அவர்களுடைய கலையை அவைகள் அழித்துக்கொண்டே வந்திருக்கின்றன. அவர்களுடைய பொருளாதார, அரசியல் உரிமைகளை மிதித்துத் துகைத்துக்கொண்டே வந்திருக்கின்றன. இத்தனை கொடுமைகளும் ஒரு சில நாட்கள்மட்டும் நடை

பெறவில்லை. கொஞ்சங்கூட நிற்காமல் இவை இரண்டரை வருஷங்கள் தொடர்ந்து நடந்து வந்திருக்கின்றன! இத்தகைய சகிக்கமுடியாத நிலைமையில், இந்தியாவின் எட்டுக் கோடி முஸ்லிம்களும் என்ன நடவடிக்கை எடுத்துக் கொண்டார்கள்? அவர்கள் செய்தது இதுதான்: காங்கிரஸ் மந்திரி சபைகள், தங்கள் இஷ்டப்படி தாங்களே தேர்ந்தெடுத்த வழியின்படி, செய்த ராஜிநாமாவை எதிர் பார்த்து, 30 மாத காலமாகக் காத்துக் கொண்டிருந்தார்கள். அவர்களுடைய கனவு கடைசியாக நிறைவேறிய போது, நன்றி கூறுமுணர்ச்சியில் தங்களுடைய இதயங்களை அவர்கள் கடவுளின் பக்கல் செலுத்தினார்கள். இஸ்ரேலினுடைய கூட்டத்தைப்போல, கடைசியாக விமோசன தினம் வந்தே விட்டதென்று அவர்கள் கோஷமிட ஆரம்பித்தார்கள். இந்திய முஸ்லிம்களைப்பற்றிய எவ்வளவு கௌரவமான சித்திரத்தை ஜனுப் ஜின்னு உலகுக்கு வரைந்து காட்ட விரும்புகிறுர்!

"இத்தகைய அவமானகரமான சித்திரத்தை ஒரு கணமும் சகித்துக் கொண்டிருப்பது முஸ்லிம் என்ற முறையில் என்னுல் முடியாத காரியம். தங்கள் நாட்டில் எட்டு மாகாண சர்க்கார்கள், இரண்டரை வருஷகாலமாகத் தங்களுடைய மதத்தில் தலையிட்டு, கலாசாரத்தை ஒழித்து, பொருளாதார அரசியல் உரிமைகளை மிதித்துத் துவைத்து வருவதைப் பார்த்துக் கொண்டே, விமோசன தினத்தின் தோற்றத்தைப் பணிவுடன் எதிர் நோக்கியிருக்கிற அளவுக்கு இந்தியாவின் எட்டுக் கோடி முஸ்லிம்களும் அவ்வளவு மந்தமாகவும், உதவியற்றும் இருக்கிறுர்களென்பதை நான் முற்றிலும் நம்ப மறுக்கிறேன். இந்திய முஸ்லிம்களின் தன்மதிப்பு - உணர்ச்சிக்கு இது நேரடியான அவமானமாகும். இது தேனுக்குப் பதிலாக அவர்களுக்கு விஷத்தை யூட்டுவதைப் போலாகும். இத்தகைய கொடுங்கோன்மை - சர்க்கார்களை மக்கள் சகித்துக் கொண்டிருந்த காலம் மலையேறி விட்டது. ஜனுப் ஜின்னுவால் கூறப்பட்ட கொடுமைகளைச் செய்துவிட்டு, ஒரு சிறிது நேரங்கூட நிர்வாகத்தைத் தொடர்ந்து நடத்துவ

தென்பது இந்த நாளில் எந்த மாகாண சர்க்காருக்கும் முடியாத காரியம். ஒவ்வொரு காங்கிரஸ் மந்திரி சபையும் விலக்கின்றி இதையே செய்தது என்று அவர் கூறுகிருர். ஏதாவது ஒரு மந்திரி சபைகூட இம்மாதிரிக் காரியங்களைச் செய்தால், ஒரு விமோசன தினத்தைக் கொண்டாடும்படி ஜனுப் ஜின்னுவின் யோசனைக்காகக் காத்திருக்கக் கூடாத அளவுக்கு, இந்திய முஸ்லிம்களுக்குத் தாங்கள் உயிர்வாழ்க்கை நடத்துவதில் உணர்ச்சி உண்டென்பதை நான் வற்புறுத்திக் கூறுகிறேன். அத்தகைய மந்திரி சபையின் ஆயுளை அவர்கள் அற்ப ஆயுளாக்கி யிருப்பார்கள். இந்திய முஸ்லிம்கள் பயங்காளித்தனம், சுரணையின்மையாகிய வஸ்துக்களால் செய்யப்பட்டவர்களல்ல. தொடர்ந்தாற்போல், இரண்டரை வருஷங்களுக்குத் தங்கள் மத, சமூக வாழ்க்கையில் தலையீட்டையும், தங்களுடைய பொருளாதார, அரசியல் உரிமைகள் மிதித்துத் துகைக்கப்படுவதையும் அவர்கள் நிம்மதியுடன் கண்டு களித்துக் கொண்டிருக்கமாட்டார்கள்.

"இந்தச் சந்தர்ப்பத்தில், ஜனுப் ஜின்னுவின் குற்றச்சாட்டு, வகுப்புப் பிரச்னையில் அபிவிருத்தி செய்வதற்குத் தாங்கள் செய்யவேண்டியவற்றைக் காங்கிரஸ் மந்திரி சபைகள் செய்யத் தவறிவிட்டன வென்பதும், அல்லது ஒரு குறிப்பிட்ட விஷயத்தில் ஒரு மாகாணத்திலுள்ள முஸ்லிம்கள் புகார் செய்ய வேண்டியிருந்ததென்பதும், ஒரு மந்திரி சபை நிர்வாக விஷயங்களில் சில குற்றங்களைச் செய்துவிட்டது என்பதும் அல்லவென்பதை ஞாபகத்தில் வைத்துக் கொள்ளவேண்டும். குற்றச்சாட்டுகளின் இயற்கை அம்மாதிரி யிருக்குமானுல், அவைகள் நியாயமற்றவை எனக் கருதப்பட்டிருக்க மாட்டா; சட்ட பூர்வமாக விசாரணைக்குரிய விஷயங்களாக அவை யிருந்திருக்கும். ஆனுல், ஜனுப் ஜின்னு பாதி ஏணி ஏறும் மனிதரல்லர். அவருடைய திட்டமான குற்றச்சாட்டு, காங்கிரஸ் மந்திரி சபைகளின் வேலை முறை திட்டமாக முஸ்லிம்களுக்கு விரோதமாக இருந்தது என்பது. அவைகள் முஸ்லிம்களின் கலாசாரத்தைத் தொடர்ந்து 'ஒழி'த்துக்

கொண்டே வந்தன; 'மத, சமூக வாழ்க்கைகளில் இடைவிடாமல் தலையிட்டன'; 'எப்போதும் அவைகள் முஸ்லிம்களுடைய பொருளாதார, அரசியல் உரிமைகளை மிதித்துத் துவைத்தன'.

"காங்கிரஸ் மந்திரி சபைகளுக்கு விரோதமான இக்குற்றச்சாட்டுகள் யாவும், முற்றிலும் ஆதாரமற்றவை என்பதை, எனக்குரிய பொறுப்புணர்ச்சியுடன் பன்முறையும் கூறி யிருக்கிறேன்; இப்போதும் அதைத் திருப்பிக் கூறுகிறேன். காங்கிரஸ் மந்திரி சபைகளின் வேலை முறை 'திட்டமாக முஸ்லிம்களுக்கு விரோதமாக இருந்தது' என்பதும், அவைகள் 'முஸ்லிம்களின் பொருளாதார உரிமைகளை மிதித்துத் துவைத்து வந்தன' என்பதும் ஒரு பெரிய - புளுகு மலை.

"ஜனாப் ஜின்னாவுக்கும், அல்லது இம்மாதிரி குற்றச்சாட்டுகளைச் சுமத்துகிற ஒவ்வொருவருக்கும் சாதாரணமாக உலக வழக்கிலிருக்கிற ஏதாவது ஒரு வழியின் மூலம், இக் குற்றச்சாட்டுகளை ருசுப்பிக்க வேண்டியது கடமையாகும். அவர் அப்படிச் செய்ய முடியாத நிலையில் இருந்தால், அறிவுடைய எவனும், அவர் தம் பேச்சிலும், எழுத்திலும் கொஞ்சம் கட்டுப்பாட்டுடனாவது இருக்க வேண்டுமென்று எதிர்பார்ப்பான்.

"இரண்டரை வருஷங்களாகக் காங்கிரஸ் மந்திரி சபைகள் ஆட்சி நடத்திக்கொண்டிருக்கையில், என் கவனத்துக்குக் கொண்டு வரப்பட்ட முஸ்லிம்களின் புகார்களைப் பற்றி நான் எப்படி நடந்துகொண்டேனென்பதை விவரிப்பதற்கு இது சந்தர்ப்பமன்று. மற்றொரு சந்தர்ப்பத்தில் அதைப்பற்றி விவரமாகக் கூறுவேன். ஆனாலும், இக்காலத்தில் என் கவனத்துக்குக் கொண்டு வரப்பட்ட எந்தப் புகாரும் தீர விசாரிக்கப்படாமல் போகவில்லை என்பதை நான் சுருக்கமாகச் சொல்லுகிறேன். இம்மாதிரி விஷயங்களில், நான் எவ்வளவு கண்டிப்பாகவும், விட்டுக் கொடுக்காமலும் இருந்திருக்கிறேனென்பதை, பார்லிமெண்டரி உபகமிட்டியிலும், காரியக் கமிட்டியிலுமுள்ள என் சகாக்களும், மாகாணங்களிலுள்ள மந்திரி

களும், மாகாணக் காங்கிரஸ் கமிட்டிகளின் உத்தியோகஸ்தர்களும் நன்கறிவார்கள். மந்திரிகளின் பதில்களோடு மாத்திரம் நான் திருப்தியடைந்ததில்லை; அம்மாதிரி விஷயங்களில் சம்பந்தப்பட்ட தஸ்தாவேஜுகளை நானே பார்வையிட்டு ஒவ்வொன்றையும் தீர்க்கமாகப் பரிசிலனை செய்வது என்னுடைய சாதாரணமான காரியம்.

"இச்சந்தர்ப்பத்தில் ஒன்று மாத்திரம் நான் கூற விரும்புகிறேன். ஜின்னாவின் குற்றச்சாட்டுகளில் ஒரு சிறிய பாகங்கூட உண்மையாயிருக்குமானால், காங்கிரஸ் மந்திரி சபைகளை 24 மணி நேரங்கூடப் பதவியிலிருக்க விட்டுக் கொண்டிருக்கும் மனிதன் நானல்ல.

"முஸ்லிம்களின் நலனுக்காக, இவ்விஷயங்களைச் சொல்லிக்கொண்டிருப்பதாக ஜனப் ஜின்னாவும் அவர் சகாக்களும் நினைப்பார்களானால், அவர்கள் முற்றிலும் மாறானதையே செய்து கொண்டிருக்கிறார்களென்பதை நான் மிக்க சிரத்தையுடன் அவர்களுக்குத் தெரிவித்துக் கொள்கிறேன்; எவ்வளவு சீக்கிரத்தில் அவர்கள் தங்கள் போக்கை மாற்றிக் கொள்ளுகிறார்களோ, அந்த அளவுக்கு அவர்கள் இந்திய முஸ்லிம்களுக்கு உண்மையான சேவை செய்தவர்களாவார்கள்; இந்திய முஸ்லிம்களுக்கு அத்தகைய உண்மையான சேவையின் தேவை அதிகம்."

மேற்கூறிய அறிக்கையில் காணப்படும் மௌலானாவின் அக்கரையையும், நாணயத்தையும், நியாயத்தையும், சத்தியத்தை நிலை நாட்டுவதில் இவருக்குள்ள ஆவலையும், தர்க்கவாதத் திறமையையும் இவருடைய விரோதிகளாலும் மறுக்க முடியாது.

1940-ல் ராம்கட்டில் நடக்க இருந்த காங்கிரஸுக்குத் தலைவர் தேர்தல் நடந்தது. அப்போது காங்கிரஸ் மந்திரி சபைகள் பதவியை விட்டு வெளியேறி யிருந்தன; இந்தியாவின் தேசியக் கோரிக்கை சம்பந்தமாகவும், பிரிட்டனின் யுத்த லக்ஷயம் சம்பந்தமாகவும் சர்க்காரின் போக்கு மிகவும் அதிருப்திகரமாயிருந்தது. எனவே, காங்கிரஸ் சட்ட மறுப்புப் போரை ஆரம்பிக்கக்கூடும் என்ற நம்

பிக்கை தேசத்தில் பலமாக இருந்தது. போர்க்காலத்தில் மௌலானா ஒதுங்கி நிற்க விரும்பவில்லை; ஆகையால், அவர் தலைவர் பதவிக்குப் போட்டியிட்டார்; மிகப் பெரும்பான்மையான வாக்குகளால் தேர்ந்தெடுக்கப்பட்டார். அவருக்குக் கிடைத்தவை 1854 வாக்குகள்; அவரோடு போட்டியிட்ட ஸ்ரீ எம். என். ராய்க்குக் கிடைத்தவை 183. போர் - மேகங்கள் பெருகிக்கொண்டிருந்த காலத்தில் தேசம் தன் தலைவிதியை ஆஜாதின் கையில் ஒப்புவித்தது. ராம்காட் காங்கிரஸும் கூடிற்று; ஆனால், இயற்கை யன்னையின் சோதனைக்கிடையே மழையும் புயலும் ஈவிரக்கமின்றி யடித்தன; காங்கிரஸுக்கு வந்தவர்கள் சொல்லொணாத் துன்பங்களுக்கு ஆளானார்கள். ஆனால் மௌலானா காங்கிரஸை நடத்தி முடித்து விடுவதென உறுதியாக இருந்தார். யுத்த சம்பந்தமான தீர்மானம் ஒன்றுதான் நிறைவேற்றப்பட்டது. மௌலானா தம் தலைமைப் பிரசங்கத்தை வழக்கம்போல் ஆணித்தரமாகவும் சுருக்கமாகவும் செய்தார். யுத்த சம்பந்தமாக மௌலானா, காங்கிரஸின் போக்கைத் தம் தலைமைப் பிரசங்கத்தில் தெளிவாக்கினார். இவர் தலைமைப் பிரசங்கத்தின் சில பாகங்கள் கீழே தரப்படுகின்றன.

இந்தியா போராடுவது, பிரிட்டிஷ் மக்களோடு அல்ல; பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தோடு தான் என்பதைத் தெளிவு படுத்திவிட்டு, மௌலானா கூறியதாவது :—

"ஆனால், பாஸிஸம், நாஜிஸம் ஆகியவைகளிலிருந்து உண்டாகும் ஆபத்துக்களைப் பற்றிச் சிந்தித்துக் கொண்டிருக்கும்போது, இப்புதிய ஆபத்துக்களை விட அதிகமாகத் தேசங்களின் சமாதானத்துக்கும், சுதந்திரத்துக்கும் எமனாக விளங்கும் பழைய ஆபத்தை நாம் மறந்துவிட முடியாது; ஏனெனில் இப்புதிய ஆபத்துக்கள் தோன்றுவதற்கு வேண்டிய அடிப்படையை அளித்தது இப்பழைய ஆபத்துத்தான். நான் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தையே குறிப்பிடுகிறேன். இப்புதிய பிற்போக்கு-இயக்கங்களைப் போல, இவ்வேகாதிபத்தியத்தையும் நாம் தூரவிருந்து பார்த்துக் கொண்டிருக்க வில்லை. அது நம் வீட்டைக் கைப்பற்றிக்

கொண்டு, நம்மீது ஆட்சி புரிகிறது. இந்தக் காரணத்துக்காகவே, ஐரோப்பாவில் ஏற்படும் புதிய சிக்கல்களால் யுத்தம் மூளுமானால், தன் சுய முடிவையும், சுயேச்சையான தீர்ப்பையும் செய்ய முடியாதபடி தடுக்கப்பட்டிருக்கும் இந்தியா அதில் பங்கெடுத்துக்கொள்ளாதென்று தெளிவாகக் கூறினோம். தன் சொந்த விருப்பு வெறுப்பின்படி ஒரு முடிவுக்கு வரும் உரிமையைப் பெற்ற பிறகுதான், இந்தியா இப் பிரச்னையைப் பற்றிச் சிந்திக்க முடியும்.

"பாஸிஸம், நாஜிஸம்" ஆகியவற்றை இந்தியா சகித்துக் கொண்டிருக்காது; ஆனால், பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் அதற்கு இன்னும் அதிகமாகக் கசந்துவிட்டது. இந்தியாவுக்கு இயற்கையாக உள்ள சுதந்திர உரிமை இன்னும் மறுக்கப்படுமானால், பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் தன்னுடன் பண்டைய செல்வாக்குடனும் லக்ஷணங்களுடனும் இன்னும் அபிவிருத்தி அடைந்துகொண்டு வருகிறதென்பதே இதன் பொருள். இம்மாதிரிச் சந்தர்ப்பங்களில் எக் காரணத்தைக் கொண்டும், பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் வெற்றிக்கு இந்தியா உதவி புரிய முடியாது...

"இது பிரிட்டிஷ் சர்க்காரின் விருப்பத்தைப் பொறுத்த பிரச்னையோ, அல்லது அவ் விருப்பத்தின் அளவைப் பொறுத்த பிரச்னையோ அன்று. நேரடியான, தெளிவான கேள்வி இந்தியாவின் உரிமையைப் பற்றியது; தன்னுடைய விதியைத் தானே நிர்ணயித்துக் கொள்ள இந்தியாவுக்கு உரிமையுண்டா, இல்லையா? இக் கேள்விக்குக் கிடைக்கும் பதிலின் மீதே, தற்காலத்திய எல்லாக் கேள்விகளின் பதில்களும் பொறுத்திருக்கின்றன. இந்தியப் பிரச்னையின் அஸ்திவாரக்கல் இக் கேள்விதான். இக்கேள்வி ஒதுக்கித் தள்ளப்படுவதற்கு இந்தியா அனுமதிக்காது. ஏனெனில், இது நீக்கப்படுமானால், இந்தியாவின் தேசியக் கட்டடம் முழுவதுமே விழுந்துவிடும்.

"யுத்தம் சம்பந்தப்பட்ட வரையில் நம் நிலைமை மிகத் தெளிவானது. பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் ஸ்வரூபத்தை எவ்வளவு தெளிவாகச் சென்ற யுத்தத்தில்

கண்டோமோ, அவ்வளவு தெளிவாக இப்போதும் காண்கிறேம்; யுத்தத்தில் பங்கெடுத்துக் கொள்வதன் மூலம் அதன் வெற்றிக்கு உதவி புரிய நாம் தயாரா யில்லை. நம்முடைய கட்சி உள்ளங்கை நெல்லிக்கனி போன்றது. பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் வெற்றி பெறு வதையும், இன்னும் அதிக பலம் பெறுவதையும் காண நாம் விரும்பவில்லை; அதன் மூலம் நம்முடைய அடிமைத் தனத்தின் ஆயுள் நீடிக்க நாம் விரும்பவில்லை. அப்படிச் செய்ய நாம் முற்றிலும் மறுக்கிறேம். தெளிவாக நம் வழி வேறு பாதையிலிருக்கிறது.

"யுத்தம் ஆரம்பமானதிலிருந்து, பிரிட்டிஷ் மந்திரி சபையின் அநேக அங்கத்தினர்கள், பழைய பிரிட்டிஷ் ஏகாதிபத்திய முறை மறைந்து விட்டதென்றும், இன்று பிரிட்டிஷ் சமுதாயத்துக்குச் சமாதானத்தையும் நியாயத் தையுந் தவிர வேறெந்த லக்ஷ்யங்களுமில்லை என்றும் உலகை நம்பச் செய்ய முயன்ருர்கள். இந்தியாவை விட வேறெந்தத் தேசந்தான் அத்தகைய பிரகடனத்தை அதிக உத்ஸாகத்துடன் வாழ்த்தி வரவேற்கக்கூடும்? ஆனல் உண்மையில், இத்தகைய பிரகடனங்களுக்கிடையே, யுத்தத்திற்கு முன் நின்றதைப் போலவே, இன்னும் சமாதானத்துக்கும் நியாயத்துக்கும் முட்டுக்கட்டை யாகவே பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் நிற்கிறது. இத்தகைய கூச்சல்களுக்கெல்லாம் உரைகல் இந்தியக் கோரிக்கை தான். அவைகள் அம்மாதிரிப் பரிசோதனை செய்யப் பட்டு, இன்று செல்லத்தகாதவையாகவும் ஏமாற்ற மாகவும் காணப்படுகின்றன."

ஹிந்து முஸ்லிம் பிரச்னையைப்பற்றியும் மைனரிட்டி பிரச்னையைப் பற்றியும் இவர் கூறியவை அரசியல் சரித் திரத்தில் அழியாததோர் இடத்தைப்பெறும். 1912-ல் இவர் அல்–ஹிலால் பத்திரிகையை 'ஆரம்பித்ததிலிருந்து, இரு வகுப்பாருக்கு மிடையே வேற்றுமைகளைக் கற்பிக்க முயன்று கொண்டிருந்த தேசத்துரோக சக்திகளை எதிர்த்து வீரப்போர் புரிந்து வந்திருக்கிறர். இப்போது இவர் கூறுகிறர்:—

"இப் பிரச்னையின்மேல் நான் என் முஸ்லிம் சகோதரர்களின் கவனத்தை 1912-ல் முதன் முதலாக ஈர்த்த போது எந்நிலையிலிருந்தேனோ, அதே நிலைமையிலேயே இன்றும் இருக்கிறேன். இடைக் காலத்தில் ஏற்பட்ட எண்ணற்ற சம்பவங்களில் நான் என் சிந்தனையைச் செலுத்தியிருக்கிறேன்; என் கண்கள் அவற்றைக் கண்டிருக்கின்றன; என் மனம் அவற்றின்மீது தன் கருத்தைச் செலுத்தி யிருக்கிறது. இத்தகைய சம்பவங்கள் வெறுமனே என்னைக் கடந்து செல்லவில்லை; அவைகளின் மத்தியில் நான் இருந்திருக்கிறேன், ஒரு பங்காளியாக; ஜாக்கிரதையுடன் ஒவ்வொரு சந்தர்ப்பத்தையும் நான் பரிசீலனை செய்திருக்கிறேன். என்னுடைய சொந்த முடிவுகளோடு என்னால் சச்சரவிட முடியாது; என் மனச்சாட்சியின் குரலை நான் ஒதுக்கித் தள்ளிவிட முடியாது. இக்கால முழுவதிலும் நான் சொல்லி வந்ததைத்தான் மறுபடியும் திருப்பிச் சொல்லுகிறேன்; இந்தியாவிலுள்ள 9 கோடி முஸ்லிம்களுக்கும், அவர்களை நான் 1912-ல் எந்த வழிக்கு அழைத்தேனோ, அந்த வழியைவிடச் சரியான வழி வேறு இல்லை.

"அரசியல் தோரணையில் பேசினால், மைனாரிட்டி என்ற வார்த்தைக்கு எண்ணிக்கையில் குறைவான கோஷ்டி என்று அர்த்தமில்லை; ஆகையால், அவர்கள் விசேஷப் பாதுகாப்புக்கு உரியவர்கள் என்பதும் பொருந்தாது. தன்னைச் சூழ்ந்திருக்கிற ஒரு பெரிய கோஷ்டியிடமிருந்து தன்னைக் காப்பாற்றிக் கொள்ளும் திறமையில் நம்பிக்கை யில்லாத அளவுக்கு எண்ணிக்கையில் மிகச் சிறிதாகவும், பலத்தைக் கொடுக்கிற இதர குணங்களில்லாமலும் இருக்கிற ஒரு சிறு கோஷ்டியைத் தான் அவ் வார்த்தை குறிக்கும். ஒப்பிட்டுப் பார்க்கும்போது சிறிதாக இருந்தால் போதாது; தன்னுடைய நலன்களைக் காப்பாற்றிக் கொள்ளச் சக்தியற்றிருக்கும் அளவுக்கு மிகச் சிறிதாக இருக்கவேண்டும். எனவே, இது வெறும் எண்ணிக்கையை மாத்திரம் பொறுத்த விஷயமல்ல; வேறு சிலவும் இதனைப் பாதிக்கின்றன. ஒரு தேசத்தில்

பத்து லட்சம் பேர்களையும் இருபது லட்சம் பேர்களையும் கொண்ட இரு வகுப்புக்களிருக்குமானால், ஒன்று மற்றொன்றின் பாதியாக எண்ணிக்கையில் இருக்கின்ற காரணத்தால், அது அரசியல் தோரணையில் ஒரு மைனாரிட்டியாகவும் பலவீனமானதாகவும் ஆகிவிடாது.''

மேலும் :

''ஆயிரத்து நூறு ஆண்டுகள் கழிந்துவிட்டன. இன்று ஹிந்து மதத்துக்கு இந்திய பூமியின்மேல் எவ்வளவு உரிமையுண்டோ, அவ்வளவு உரிமை இஸ்லாத்துக்கும் உண்டு. இங்குள்ள மக்களுக்குப் பல்லாயிரக்கணக்கான ஆண்டுகளாக ஹிந்து தத்துவங்கள் மதமாக இருந்தால், இஸ்லாமும் ஆயிரம் வருஷங்களாக அவர்களுடைய மதமாக இருக்கிறது. ஒரு ஹிந்து பெருமையுடன் 'நான் ஒரு இந்தியன்; ஹிந்து மதத்தைப் பின் பற்றுகிறேன்' என்று கூறுவதைப் போல, நாமும் சமப் பெருமையுடன், 'நாங்கள் இந்தியர்கள்; இஸ்லாத்தைப் பின்பற்றுகிறோம்' என்று கூறமுடியும். நான் இந்த வரம்பை இன்னுங் கொஞ்சம் விரிவு படுத்துவேன். இந்தியக் கிறிஸ்தவனும் 'நான் ஒரு இந்தியன்; இந்தியாவின் ஒரு மதமாகிய கிறிஸ்தவ மதத்தைப் பின்பற்றுகிறே'னென்று பெருமையுடன் கூறிக்கொள்ள உரிமை பெற்றிருக்கிறான்.''

கடைசியாக,

'' இந்திய முஸ்லிம்களாகிய நாம், வருங்காலச் சுதந்திர இந்தியாவைச் சந்தேகத்துடனும் அவ நம்பிக்கையுடனும் எதிர்நோக்குகிறோமா? அல்லது தைரியத்துடனும் நம்பிக்கையுடனும் எதிர்நோக்குகிறோமா?

''நாம் சந்தேகத்துடனும், பயத்துடனும் எதிர்நோக்குவோமானால், நிச்சயமாக நாம் வேறு பாதையைப் பின்பற்றவேண்டியதே. இக்காலத்தில் வெளியிடும் எந்தப் பிரகடனமும், எதிர்காலத்தைப் பற்றிய எத்தகைய வாக்குறுதியும், எந்தவிதமான சட்டபூர்வமான பாதுகாப்புக்களும் நம்முடைய சந்தேகங்களுக்கும் பயத்துக்கும் பரிகாரமாகமாட்டா. அப்போது ஒரு அந்நிய ஆட்சியை நாம்

சகித்துக்கொண்டுதான் ஆகவேண்டும். இம்மூன்றும் அதிகாரமோ, ஏற்கெனவே இந்நாட்டில் வேரூன்றி விட்டது; இந்நாட்டைவிட்டு வெளியேறும் உத்தேசம் அதற்கில்லை; இம்மாதிரி பயத்தோடு கூடிய பாதையை நாமும் பின்பற்றுவதானால், அவ்வந்நிய ஆட்சி இந்நாட்டில் தொடர்ந்து நிலைபெற வேண்டுமென்று எதிர் பார்ப்பதே நாம் செய்யக்கூடியது. ஆனால், சந்தேகங்களுக்கும் பயத்துக்கும் நம்மில் இடமில்லை; வருங்காலத்தை நாம் நம்பிக்கையுடனும் தைரியத்துடனும் நோக்க வேண்டுமென்று நம்மைத் திடப்படுத்திக் கொள்வோமானால், நம் நடத்தையின் திட்டம் மிகவும் தெளிவாக இருக்கிறது. நம்மை நாம் ஒரு புதிய உலகில் காண்கிறோம்: சந்தேகங்களின் இருண்ட நிழலுக்கும், ஊஞ்சலாட்டத்துக்கும், செயலின்மைக்கும், வேண்டாவெறுப்புக்கும் அங்கு இடமில்லை; நம்பிக்கை, உறுதி, செயல், உத்ஸாகம்ஆகியவற்றின் பிரகாசம் அவ்வுலகில் என்றும் மங்குவதில்லை. காலத்தின் குழப்பங்களும், நம் பாதையிலுண்டாகும் ஏற்றத் தாழ்வுகளும், முட்கள் நிறைந்த நம் பாதையில் நம்மைச் சூழும் கஷ்டங்களும், நம் அடியின் திசையை மாற்றிவிட முடியாது. இந்நிலையில், இந்தியாவினுடைய தேசீய லட்சியத்தை நோக்கி, நம்பிக்கையான அடிகளோடு நடந்து செல்வது நம்மீது சுமத்தப்பட்ட கடமையாகிவிடுகிறது.

"கடுகளவும் தயக்கமின்றி, இத்திட்டமான முடிவுக்கு நான் வந்தேன்; முதலில் கூறப்பட்ட வழியை என் உடலின் ஒவ்வொரு அணுவும் எதிர்த்து நின்றது. அதைப்பற்றிய எண்ணத்தையே என்னால் பொறுக்க முடியவில்லை. தன்னுடைய வாழ்க்கையின் ஒவ்வொரு மூலையிலிருந்தும் இஸ்லாமிய உணர்ச்சியை வேரோடு களைந்தெறிந்து விட்டிருந்தாலொழிய, எந்த முஸ்லிமாலும் அதைச் சகித்துக் கொண்டிருக்க முடியுமென்பதை என்னால் கருதக்கூடவில்லை."

தம் சகோதர முஸ்லிம்களுக்கு இதைக்கூறிவிட்டு, இந்தியாவிலுள்ள ஹிந்து-முஸ்லிம் பிரச்னையை இந்தி

யாவின் சுதந்திரத்துக்கு முட்டுக்கட்டையாக உபயோகிக்கும் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்துக்கு மௌலானா கூறுகிறுர் :—

"நம் தேசிய லக்ஷியத்தை யடைவதற்கு முதல் நிபந்தனையாக இதனைக் கொள்வதைவிட அதிகமான முக்கியத்துவத்தை நாம் இதற்கு அளிக்க முடியாது. காங்கிரஸ் எப்பொழுதுமே இந்நம்பிக்கையைக் கொண்டு வந்திருக்கிறது; இந்த உண்மையை யாரும் மறுக்கமுடியாது. அது எப்போதுமே இரண்டு அடிப்படையான தத்துவங்களைக் கைக்கொண்டு வந்திருக்கிறது; இவைகளை மனத்திற்கொண்டே எந்த நடவடிக்கையும் எடுக்கப்பட்டிருக்கிறது.

"(1) இந்தியாவுக்கு எத்தகைய அரசியல் - சட்டம் உருவாக்கப்பட்டாலும், மைனுரிட்டிகளின் உரிமைகளுக்கும் நலன்களுக்கும் அதில் பூரண உத்தரவாதங்கள் இருக்கவேண்டும்.

"(2) தங்களுடைய உரிமைகளையும், நலன்களையும் காப்பாற்றிக் கொள்வதற்கு என்ன பாதுகாப்புகள் வேண்டுமென்பதை மைனுரிட்டிகள் தாங்களே தீர்மானித்துக்கொள்ள வேண்டும். மெஜாரிட்டியார் இதைத் தீர்மானிக்கக்கூடாது. ஆகையால், இந்த விஷயத்தில் செய்யப்படும் முடிவு, மெஜாரிட்டி ஓட்டைப்பொறுத்தில்லாமல், மைனுரிட்டிகளின் சம்மதத்தைப் பொறுத்திருக்க வேண்டும்.

"அரசியல் நிர்ணயசபை சம்பந்தமாக, இப்பிரச்னையைக் காங்கிரஸ் இன்று அணுகியிருக்கும் முறை இவ்விரண்டு அடிப்படையான தத்துவங்களைத் தெளிவாக விளக்குகிறது. அங்கீகரிக்கப்பட்ட மைனுரிட்டிகள் விரும்பினுல் தங்கள் பிரதிநிதிகளைத் தங்கள் ஓட்டுகளால் தேர்ந்தெடுத்துக்கொள்ள உரிமை பெற்றிருக்கிறுர்கள். அவர்களுடைய பிரதிநிதிகள் தங்கள் வகுப்பைத் தவிர, வேறெந்த வகுப்பாரின் ஓட்டின்பேரிலும் சார்ந்திருக்க வேண்டியதில்லை. மைனுரிட்டிகளின் உரிமைகளும் நலன்களும் சம்பந்தப்பட்டவரையில், முடிவு அரசியல்-நிர்ணய

சபையின் மெஜாரிட்டி ஓட்டைப் பொறுத்திருக்காது; அது சம்பந்தப்பட்ட மைனாரிட்டியின் சம்மதத்தைப் பொறுத்தது. எந்த விஷயத்திலாவது ஏகமனதான முடிவு ஏற்படாவிட்டால், மைனாரிட்டிகளுடைய சம்மதத்தைப்பெற்ற பாரபட்சமற்ற நீதி சபையொன்று பிரச்னையைத் தீர்த்துவைக்கும். இக்கடைசி ஷரத்தும் தவிர்க்க முடியாத இடைச்சம்பவத்தைப் பற்றியதே. இது தேவையாகும் நிலைமையேற்படுவது மிக அபூர்வமே. இதைவிடப் பொருத்தமாகக் காரியத்திலுதவக் கூடிய யோசனை கூறப்பட்டால், அதற்கு ஆக்ஷேபனையில்லை."

இத்தலைமைப் பிரசங்கத்தைப் படித்த பிறகும் காங்கிரஸின் நேர்மையிலோ, அல்லது ஆஜாதின் நேர்மையிலோ யாராவது சந்தேகங்கொண்டு, களங்கம் காண முயலுவார்களானால், அவர்களைப்பற்றிக் காலமும் சரித்திரமும் தான் முடிவு கட்டவேண்டும். காலத்தை மீறியதும், சத்தியத்தையும் நியாயத்தையும் அடிப்படையாகக் கொண்டதுமான அரசியல் திட்ட யோசனையைத்தான் மௌலானா இவ்வளவு தெளிவாக அறிவுக்குப் பொருந்துமாறு எடுத்துக்கூறினார்.

ராம்கட் காங்கிரஸுக்குப்பின் நடந்த சம்பவங்கள் சமீபகாலத்தைச் சேர்ந்தவை. காந்திஜி காங்கிரஸின் தளகர்த்தரானார். பேச்சுச் சுதந்திரம் என்ற பிரச்னையின் மேல் அவர் தனி நபர் சத்தியாக்கிரகத்தை யாரம்பித்தார். காந்திஜியின் கண்டிப்பான நிபந்தனைகளைப் பூர்த்தி செய்து, அவரைத் திருப்தி செய்த காங்கிரஸ் தலைவர்கள் ஒவ்வொருவராகச் சிறை சென்றார்கள். மௌலானா ஆஜாதும் சிறை சென்றார். பின்னர் 1941-ல் ரஷ்ய-ஜெர்மன் யுத்தம் மூண்டபிறகு, சர்க்கார் அரசியற் கைதிகளையெல்லாம் விடுதலை செய்தார்கள். பண்டித நேருவுடன், ஆஜாதும் சிறையிலிருந்து வெளிவந்தார். 1941-ம் வருஷம் டிஸம்பர் மாதம் 7-ந் தேதி ஜப்பான் யுத்தத்தில் இறங்கிற்று. மலேயா, சிங்கப்பூர், ஜாவா, போர்னியோ, பர்மா ஆகிய இடங்கள் ஒவ்வொன்றாய் கபளீகரம் செய்யப்பட்டன. இந்தியாவை ஜப்பானியர் தாக்குவது நிச்சயம்

என்ற நிலைமையேற்பட்டது. இச்சமயத்தில், இந்தியாவின் அரசியல் முட்டுக்கட்டையைத் தீர்த்து வைப்பதற்காக, பிரிட்டிஷ் சர்க்கார் ஸர். ஸ்டாஃபோர்ட் க்ரிப்ஸை இந்தியாவுக்குத் தூது அனுப்பினர். காங்கிரஸின் சார்பாக மௌலானா ஆஜாதும் பண்டித நேருவும் க்ரிப்ஸுடன் பேச்சு வார்த்தைகள் நடத்தினார்கள். பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் சூழ்ச்சி ஒழியவில்லை யென்பதையும், பிரிட்டிஷார் உண்மையான அதிகாரத்தை இந்தியர் கைக்கு மாற்ற விரும்பவில்லை யென்பதையும் கண்ட காங்கிரஸ் க்ரிப்ஸ் கொண்டுவந்திருந்த நகல் திட்டத்தை நிராகரித்துவிட்டது. க்ரிப்ஸ் வெறுங்கையுடன் இங்கிலாந்து திரும்பினார்.

உலகில் மகத்தான மாறுதல்களைச் செய்யக்கூடிய பயங்கரமான யுத்தம் உலகைக் கௌவிக்கொண்டிருக்கிறது. ஏகாதிபத்திய வெறிகொண்ட அதிகார வர்க்கங்கள் மக்களுயிரைத் தங்கள் மண்ணாசைக்குப் பலியிடுகின்றன. சுதந்திரத்தை யிழந்த 'சுண்டைக்காய் நாடு'களுக்கு எல்லாம், அவர்கள் சுதந்திரத்துக்காகவே உலகப் போர் நடப்பதாக அறிவிக்கப்பட்டது. இந்தியா--150 வருஷத்திய அரசியல் அடிமை-உணர்ச்சி யின்றி, உத்ஸாகமின்றி, மாண்டொழிந்த பெருவீரனைப்போல் கிடக்கிறது: தங்களைக் காத்துக்கொள்ளும் உணர்ச்சிகூட மக்களுக்கில்லை. இந்நிலையைக் கண்ட மகாத்மாவின் மனம் வேதனை யுண்டது. இந்தியர்களுக்குத் தற்காப் புணர்ச்சியை யூட்டுவதற்கு, 'நாம் சுதந்திர புருஷர்கள்' என்ற உணர்ச்சியேற்பட வேண்டுமென்பதைக் கண்டார். அவ்வுணர்ச்சியைச் செய்கையாக மாற்றுவதற்கு, பூரண அதிகாரங் கொண்ட ஒரு தேசிய சர்க்காரை இந்தியாவில் அமைப்பதே சிறந்த வழி யென அவர் கண்டார். எனவே, பிரிட்டிஷ் சர்க்காரின் கையிலுள்ள இந்தியாவின் அதிகாரத்தை இந்தியர் கைக்கு மாற்றுவதே உடனே செய்ய வேண்டிய காரியமாயிற்று. ஆகையால், 1942-ம் வருஷம் ஆகஸ்ட் மாதம் 8-ந் தேதி பம்பாயில் கூடிய அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி நிறைவேற்றிய தீர்மானமொன்றில்,

இந்தியாவின் தற்காப்புக்கு அவசியமானதும், நாகரிக உலகத்தால் இந்தியாவுக்கு மறுக்கமுடியாத உரிமையுமான பூரண அதிகாரங் கொண்ட தேசிய சர்க்காரையமைக்குமாறு பிரிட்டிஷாரை வேண்டிக் கொள்வதென்றும், சர்க்கார் அதற்கிணங்கத் தவறினுல், அவசியமான நடவடிக்கை யெடுத்துக்கொள்ள காந்திஜிக்கு அதிகாரமளிப்பதாகவும் முடிவு செய்தது. அக்கூட்டத்தில் காந்திஜி தமது உள்ளத்தை யள்ளிக் கொட்டினுர். 'நான் சுதந்திரன்' என்ற எண்ணம் ஒவ்வொரு இந்தியனுக்கும் உண்டாகாதவரையில் இந்தியா சுதந்திரம் பெற முடியாதெனக் கூறினுர்; தான் பொறுமையை யிழந்துவிட்டதாகவும், இந்திய சுதந்திரத்துக்காக இனிப் பொறுத்திருக்க முடியாதென்றும் சொன்னுர். ஆனுல் சுதந்திரம் இந்தியாவின் பிறப்புரிமை, அதை மறுக்க பிரிட்டனுக்கு அதிகாரமில்லை யென்ற அடிப்படையின்மேல் அவர் எந்தச் சமரஸத்துக்கும் தயாராயிருப்பதாகவும் அறிவித்தார். பேச்சு வார்த்தைகளினுல் பலனேற்படாவிடில், கண்டிப்பாய் அஹிம்ஸா தர்மப்படி இந்தியாவின் சுதந்திரப் போரைத் தாம் நடத்தப்போவதாக காந்திஜி உலகுக் கறிவித்தார்.

காந்திஜியின் கடைசி வாக்கியத்தின் பிற்பகுதிதான் சர்க்காரின் காதில் விழுந்தது. ஆகஸ்ட் மாதம் 9-ந் தேதி காலையில் சர்வ ஜாக்கிரதையுடன், எல்லாம் வல்ல ஏகாதிபத்ய சர்க்கார் காந்திஜி யுள்ளிட்ட எல்லாக் காங்கிரஸ் தலைவர்களையும் கைது செய்தார்கள். ஆஜாதும் அப்போது கைது செய்யப்பட்டார். தம் சகாக்களோடு இன்றும் இந்தியாவின் சுதந்திரத்துக்காகச் சிறையில் தவஞ் செய்கிருர்.

அப்போது நடந்த சம்பவங்களையும், பின்னர் நடந்தவற்றையும் விவரிக்கும் பொறுப்பு இந்நூலைச் சேர்ந்ததன்று. வாசகர்கள் அவற்றை அறிவார்கள்; சரித்திரம் அவற்றைப் பதிவு செய்யும்; காலம் தீர்ப்பளிக்கும்; கடவுள் நீதியை நிலைநாட்டுவார்; தர்மம் வெற்றி பெறுவதில் சந்தேகமில்லை.

# 11. குர் - ஆன்

மௌலானா அபுல்கலாம் ஆஜாத் இஸ்லாமிய உலகுக்குச் செய்த சேவைகள் யாவற்றிலும் தலைசிறந்து விளங்குவதும், எக்காலத்திலும் அழியாததுமாக இருப்பதும் அவர் அரபி பாஷையிலுள்ள குர்-ஆனுக்கு உர்துவில் மொழி பெயர்ப்பும் வியாக்கியானமும் எழுதியதுதான். அதற்கு "தர்ஜுமானுல் குர்-ஆன்" என்று பெயர். 'குர்-ஆனின் பொருளும் வியாக்கியானமும்' என்று பொருள். அரசியல், சமூக விஷயங்களில் மௌலானாவுடன் அபிப்பிராய பேதமுள்ளவர்கள்கூட, மௌலானாவின் குர்-ஆனை இஸ்லாத்தின் ஒப்பற்ற ஆதார விளக்கமாகக் கருதுகிறார்கள். இந்தியாவில் மாத்திரமல்லாமல் உலகிலுள்ள பிற முஸ்லிம் நாடுகளிலும், குர்-ஆனின் வியாக்கியானங்கள் எல்லாவற்றிலும், இதுவே தலை சிறந்ததாகவும் ஆதாரபூர்வமானதாகவும் கருதப்படுகிறது. மௌலானா தன் பரந்த அறிவையும், ஆழ்ந்த ஞானத்தையும் அப்படியே அதில் அள்ளிக் கொட்டியிருக்கிறார். இதற்கு முன்னெல்லாம் குர்-ஆனை மொழிபெயர்த்தவர்கள், பாமர மக்களும் பிற மதஸ்தர்களும் அதனைத் தெரிந்துகொள்ள வேண்டுமென்ற எண்ணத்துடன் அந்த வேலையைச் செய்யவில்லை. அதனை ஒரு சில வைதிகர்களின் சொத்தாகவே கருதினார்கள். எனவே, பண்டிதர்களின் தமிழைப்போலவே குர்-ஆன் இருந்து வந்தது! அதனை பாரதியாரின் தமிழைப் போன்றதாக்கிய பெருமை ஆஜாதைச் சேர்ந்தது. நவீன காலத்தின் கருத்து வளர்ச்சியினால் உண்டான புத்துயிரையும் புத்துணர்ச்சியையும் இவர் தம் வியாக்கியானத்தில் புகுத்தினார். அறிவுக் கண் கொண்டு ஒவ்வொரு வார்த்தையையும் ஆராய்ந்திருக்கிறார். எதற்கும், பகுத்தறிவுதான் உரைகல்; இவருடைய குர்-ஆனை ஓர் அற்புதமென்றே சொல்லவேண்டும்.

பீஹார் மாகாணத்தில், ராஞ்சியில், இவர் காவலில் வைக்கப்பட்டிருக்கும்போது இவர் இவ்வேலையை ஆரம்பித்தார். மூன்று பாகங்களில், இரண்டு பாகங்களை

முடித்துவிட்டு மூன்றாவது பாகத்தை ஆரம்பித்திருந்தார். திடீரென ஒரு நாள், டெபுடி கமிஷனர் வந்து மௌலானா வின் இருப்பிடத்தைச் சோதனையிட்டார்; அங்கே கண்ட கையெழுத்துப் பிரதிகளை எல்லாம் கைப்பற்றி இந்திய சர்க்காருக்கு அனுப்பினார். மௌலானா விடுதலை செய்யப்பட்ட பிறகுகூட அவை இவருக்குத் திருப்பிக் கொடுக்கப்படவில்லை. இவர் இந்திய சர்க்காரைக் கேட்டார். இந்திய சர்க்கார் பீஹார் சர்க்காரைக் கேட்கும் படி சொன்னார்கள். பீஹார் சர்க்கார், அவற்றைத் திருப்பிக் கொடுத்தார்கள்; ஆனால் அவை பாதி தீக்கிரையாயும், நிலை குலைந்துமிருந்தன; நெருப்புப் பற்றிக் கொண்டதென்றும், இந்த அளவிலாவது அவை திருப்பிக் கிடைத்ததற்கு மௌலானா தம் அதிர்ஷ்டத்தைப் பாராட்ட வேண்டுமென்றும் சர்க்கார் கூறினார்கள். மறுபடியும் மௌலானா அதை எழுதினார். மௌலானாவின் வியாக்கியானத்திலிருந்து சில பாகங்கள் கீழே தரப்படுகின்றன.

-

எல்லா மதங்களின் மூலமும் ஒன்றே; ஒவ்வொரு தேசத்துக்கும் ஒவ்வொரு காலத்துக்கும் ஒவ்வொரு வர்க்கத்துக்கும் அதனுடைய தீர்க்கதரிசி உண்டு; அவர்கள் உபதேசித்த அடிப்படைத் தத்துவம் ஒன்றே என்ற உண்மையிலிருந்து மௌலானா ஆரம்பிக்கிறார். அவர் கூறுவதாவது :—

"எந்தத் தேசமாயிருந்தாலும் சரி, எந்தக் காலமாயிருந்தாலும் சரி, கடவுளால் அனுப்பப்பட்ட தீர்க்கதரிசிகள் மனிதனுடைய நன்மைக்காக, ஒரே அடிப்படைக் கொள்கையைத் தான் போதித்தார்கள் என்று குர்-ஆன் கூறுகிறது. அதுதான் ஈமானும் (நம்பிக்கை), நல்ல காரியங்களும்; அதாவது ஏகக் கடவுளின் வணக்கமும் நேர்மையான ஒழுக்கமும் ஆகும். இதற்கு மாறாகக் கூறப்படும் எதுவும் உண்மையான மதமாகாது. 'நிச்சயமாக, உலகில் ஒவ்வொரு கூட்டத்தாருக்கும் நான் ஒரு தீர்க்கதரிசியை அனுப்பி யிருக்கிறேன்; ஒரே கடவுளை வணங்குமாறும், ஆசையினால் பிறழவேண்டாமென்றும் அவர் உபதேசித்

திருக்கிறார்' (6 : 18) என்று குர்-ஆன் கூறுகிறது. மேலும், 'வணக்கத்திற்குரிய ஆண்டவன் நான் ஒருவனே; வேறு யாருமில்லை என்ற ஆணையோடல்லாமல், எந்த தீர்க்கதரிசியையும் உமக்கு முன்னும் நான் அனுப்பவில்லை' என்று அது கூறுகிறது. எல்லா மனிதர்களையும் ஆண்டவன் மனிதர்களாகவே படைத்தான்; அவர்கள் வெவ்வேறு பெயர்களையும், அடையாளங்களையும் தரித்துக் கொண்டு மனிதவர்க்கத்தின் ஒற்றுமையைத் துண்டு துண்டாகக் குலைத்துவிட்டார்களென்றும் குர்-ஆன் கூறுகிறது. நீங்கள் வெவ்வேறு வர்க்கங்களிலிருந்து பிறந்தவர்களாகையால், வெவ்வேறு பெயர்களைப் புனைந்துகொண்டு ஒருவரிலிருந்து ஒருவர் பிரிந்துபோனீர்கள். நீங்கள் வெவ்வேறு தேசங்களில் பிறந்தீர்கள். ஆகையால் ஒரு தேசத்தார் மற்றொரு தேசத்தாரோடு போர் செய்கிறார்கள். நீங்கள் வெவ்வேறு வர்க்கத்தைச் சேர்ந்தவர்கள்; ஆகையால் ஒருவரோடொருவர் சண்டையிடுகிறீர்கள்; நீங்கள் வேறுபட்ட நிறங்களுடன் பிறந்தீர்கள்; ஆகையால் பகைமையின் காரணமாக நிறப்போர்கள் நடக்கின்றன. வித்தியாசத்துக்கு இன்னொரு காரணமாகப் பாஷையும் வந்து சேர்ந்தது. ஏழை-பணக்காரன், எஜமான்-ஏவலாளி, மேல்ஜாதி - கீழ்ஜாதி, பலவான் - பலவீனன், என்றிவை போன்ற எத்தனையோ வேற்றுமைகளிருக்கின்றன. இத்தனை வேறுபாடுகளும் சண்டையையும் சச்சரவையுமே உண்டுபண்ணும். இவ்வாறு சிதறிய மணிகளை ஒன்றாகக் கோத்து, பிரிந்துபட்ட மனித வர்க்கத்தை ஒரே சகோதரத்துவமாக்கக்கூடிய பட்டு நூல்தான் எது? அப் பட்டு நூல், அப்புனித இணைப்பு, ஒரே கடவுளின் வணக்கம் தான். நீங்கள் எவ்வளவுதான் பிரிந்துபட்டிருந்தாலும், நீங்கள் வெவ்வேறு கடவுளர்களைக் கொள்ள முடியாது. நீங்கள் ஒரே எஜமானின் சேவகர்கள், உங்களுடைய பிரார்த்தனைகளும், வணக்கமும், ஒரே புனித சிம்மாசனத்தின் முன்னே தான். உங்கள் வர்க்கம், கூட்டம், தேசம் எதுவாயிருந்தாலும் அக்கறையில்லை. நீங்கள் உங்களை ஒரே தந்தையிடம் ஒப்புவித்துவிட்ட அதே கணத்தில், அவன் இவ்வுலகத்தில் நிகழும்

உங்கள் சண்டைகளை எல்லாம் போக்கி உங்கள் ஹிரு தயங்களை ஒன்று சேர்த்து விடுவான்.

"குர்-ஆனில் உபதேசிக்கப்பட்ட உண்மையினின்றும் வேறுபட்டதாக, எந்த வேதமாவது, எந்த மதமாவது எந்த தீர்க்கதரிசியாவது, எந்த மதாசாரியராவது, எதையாவது உபதேசித்திருக்கிறார் என்பதை ருசுப்பிக்குமாறு குர்-ஆன் அறைகூவி யழைக்கிறது; [இந்தப் போதனையின்] 'உண்மையை நீங்கள் மறுப்பீர்களானால், இதற்கு முன்னே வெளியான எந்த நூலிலிருந்தாவது, அல்லது பரம்பரை யாக உங்கள் கைக்கு வந்திருக்கும் விவேகம், அல்லது சத்தியம், ஆகியவற்றிலிருந்தாவது உங்கள் மறுப்புக்கு ஆதாரங் காட்டுங்கள்.' (46 : 4). இப்படியாக, எல்லா மதங்களிலுமுள்ள என்றும் அழியாத உண்மைகள் ஒன்றை யொன்று ஆதரித்து நிற்கின்றனவென்று குர்-ஆன் கூறுகிறது. அப்படி யிருக்கும்போது, அவைகளுக்கு அடிப்படையாக இருப்பது ஒரே நிரந்தரமான உண்மை என்பது நிரூபிக்கப்படுகிறது."

இதற்குப் பின்னே, மௌலானா 'மதத்தின் வேர் என்ன? அதன் கிளைகள் யாவை?' என்பதைப்பற்றிக் கூறுகிறார் :—

"எல்லா மத போதனைகளும் இரண்டு பாகங்களைக் கொண்டவை. ஒன்று, நிரந்தரமான தத்துவங்களை, அதாவது, மதத்தின் மூலத்தைக் கொடுப்பது; இரண்டாவது அதன் வெளி உருவம், அதாவது வெளியலங்காரத்தைக் கொடுப்பது என்று குர்-ஆன் கூறுகிறது. ஒன்று பிரதானமானது; மற்றொன்று அதற்கு அடுத்தபடியானது. முதலாவது நம்பிக்கை (ஈமான்) என்றும், இரண்டாவது ஒழுக்க விதிகள் என்றும் குர்-ஆனால் அழைக்கப்படுகின்றன. இந்த இரண்டாவது ஷாஅ அல்லது நுசுக் அல்லது மின்ஹஜ் என்று சொல்லப்படுகிறது. முதலிரண்டு பதங்களுக்குப் 'பாதைகள்' என்று பொருள். மூன்றாவது வார்த்தைக்கு 'வணக்க அநுஷ்டானங்கள்' என்று பொருள். உலகிலுள்ள மதங்கள் மாறுபடுவது, நிரந்தரமான உண்மைகள் என்ற பிரதான

விஷயத்தில் அன்று; வணக்க முறைகள், ஒழுக்க விதிகள் என்பனவற்றில்தான். அவைகள் வேறுபடுவது வேரில் அல்ல; இலைகளிலும் கிளைகளிலுமே. அவைகள் மாறுபடுவது ஆத்மாவில் அன்று; உருவத்திலும் உடலிலுமே. இந்த வித்தியாசம் தவிர்க்க முடியாதது. மதத்தின் நோக்கம் மனித வர்க்கத்தின் நன்மை; ஆனால், மனித வர்க்கத்தின் நிலைமைகள் காலத்துக்கும் தேசத்துக்கும் ஏற்றவாறு மாறுபடுகின்றன. ஒரு குறிப்பிட்ட விதமான வாழ்க்கை முறை ஒரு நாட்டுக்குத் தேவையாயிருந்தது; இன்னொரு நாட்டுக்கு மற்றொரு வித வாழ்க்கை முறை தேவையாயிருந்தது. எனவே, ஒவ்வொரு மதமும் தன் வெளித்தோற்றத்தில், அது பிரசாரம் செய்யப்பட்ட கால தேசப் போக்கைப் பிரதிபலித்தது; அந்த தேசத்துக்கும், அந்தக் காலத்துக்கும் அது பொருத்தமாயிருந்தது. 'ஓ நபியே! ஒவ்வொரு மனித கோஷ்டிக்கும் ஒரு குறிப்பிட்ட வணக்க முறையை நான் திட்டப் படுத்தி யிருக்கிறேன்; அம்முறையை அது அநுஷ்டிக்கிறது. ஆகையால், இம்முறைகளைப் பற்றி மனிதர்கள் சச்சரவிடக்கூடாது' (22 : 67), என்று குர்-ஆன் கூறுகிறது. மதத்தின் சாரம் எங்கே இருக்கிறதென்பதைப் பற்றியும், தன்னுடைய நன்மையை மனிதன் அடைவது எப்படி என்பதைப் பற்றியும் குர்-ஆன் மேலும் அறிவிக்கிறது. கிழக்கேயோ, அல்லது மேற்கேயோ நோக்கி முகத்தைத் திருப்பிச் செய்யப்படும் பிரார்த்தனையின் திசையில் மதமில்லை; மதத்தின் சாரம் ஏக இறைவனின் வணக்கத்திலும், ஒழுக்க விதிகளிலுமே இருக்கிறது என்று குர்-ஆன் கூறுகிறது.............

"இம்மகத்தான பாடத்தைப் பாருங்கள், (மேலெழுந்தவாரியாகப் பார்க்காமல் ஒவ்வொரு வார்த்தையையும் நீங்கள் கவனமாகவும் ஜாக்கிரதையாகவும் ஆராயவேண்டுமென்று விரும்புகிறேன்): 'உங்களில் ஒவ்வொருவருக்கும் (அதாவது ஒவ்வொரு மதவாதிகளுக்கும்) ஒரு குறிப்பிட்ட வழியையும் விதியையும் நான் திட்டப் படுத்தியிருக்கிறேன். கடவுள் இஷ்டப்பட்டிருந்தால் உங்கள் யாவரையும் ஒரே

மாதிரியாகவே செய்திருப்பார் (அதாவது ஆசாரங்களி லும் சடங்குகளிலும் வேற்றுமை யிருக்காது). ஆனல் அவர் உங்களுக்குக் கொடுத்திருக்கும் ஆணைகளில் (ஆணை களை நீங்கள் நிறைவேற்றுவதில்) உங்களைச் சோதிப்பதற் காக உங்களை வேருகச் செய்தார். ஆகையால், பந்தயத் தில்போல், சன்மார்க்க நடத்தையிலும், போட்டியிடுங்கள் (இவ்வேற்றுமைகளை வற்புறுத்துவதிலல்லாமல்). [5:48]

குர்-ஆன் வெளியானபோது, பல்வேறு மதங்களையும் பின் பற்றுகிறவர்கள், மதத்தின் வெளித் தோற்றங்களை வற் புறுத்துவதிலும், அவற்றையே மதத்தின் சாரமென்று தவ ருகக் கருதுவதிலும் ஈடுபட்டிருந்தார்கள். தங்களுடைய ஆசாரங்களுக்கும் சடங்குகளுக்கும் மாறுபட்டு, மற் ெருரு மதஸ்தனுடைய சடங்குகளும் ஆசாரங்களும் இருப்பதால், தங்கள் மதங்களைப் பின்பற்றுபவர்களுக்கே யன்றி, பிறமதஸ்தர்களுக்கு மோக்ஷமில்லை யென்று ஒவ் வொரு மதஸ்தர்களும் நினைத்தார்கள். இது மதத்தையே மறுப்பதாகுமென்று குர்-ஆன் கூறுகிறது. மதத்தின் சாரம் ஏக இறைவனின் வணக்கமும் நல்லொழுக்கமுமே. இது ஒரு தனி மனிதனுடையவோ, அல்லது ஒரு கூட்டத் தாரினுடையவோ, பிதிரார்ஜித சொத்தாக இருக்க முடி யாது.......ஆசாரங்களும் சடங்குகளும் காலத்துக்கும் தேசத்துக்கும் ஏற்றவாறு மாறுபடும்; இன்னும் தொடர்ந்து மாறுபட்டுக் கொண்டேயிருக்கும்...மேலும், 'கடவுள் தம் சர்வஜ்ஞத்வத்தில், இத்தகைய வேற்று மையை வேண்டுமென்றே சிருஷ்டித்திருக்கிருர் என்று குர்- ஆன் கூறுகிறது. பல்வேறுபட்ட மக்களுக்கு, பல்வேறு பட்ட விதிகளும் வழிகளும் திட்டப்படுத்தப்பட்டன வென்று அது அறிவிக்கிறது; பல்வேறுபட்ட மதங்கள் பல் வேறுபட்ட மக்களுக்குத் திட்டப்படுத்தப்பட்டன வென்று அதுகூறவில்லை. ஏனெனில், எல்லோருக்கும் மதம் ஒன்றே; ஒன்றுக்கு மேற்பட்ட வேறுபாடான மதங்கள் இருக்க முடியாது. மனித இயற்கை இன்று அமைக்கப்பட் டிருக்கிற முறையில், இவ்வெளித் தோற்றங்கள் வேறு படத்தான் செய்யும்; ஒவ்வொருவனும் பிறருடைய வழியைவிடத் தன் வழியே உயர்ந்தது என்று எண்ணு

வான்; தன் எதிரியின் மனப்போக்கோடு அவனால் தன் வழியை நோக்க முடியாது என்று குர்-ஆன் கூறுகிறது. உன் கண்களுக்கு உன் வழி சிறந்ததாக இருப்பதேபோல், பிறருடைய கண்களுக்கு அவர்களுடைய வழியே சிறந்ததாகத் தோன்றுகிறது; ஆகையால், தாராளமான சகிப்புத் தன்மையே வழியாகும்."

இனி, குர்-ஆன் முழுவதின் போதனை மாத்திரமல்லாமல், உலகம் தோன்றிய நாள் முதலாக இவ்வுலகில் பிறந்த எல்லா வேதங்களின் போதனையுமாக மௌலானா கருதுகிற மூன்று வாக்கியங்களையும் பார்ப்போம். இம்மூன்றும், குர்-ஆனின் 21-வது 'சூற'வின் 92, 93, 94 ஆம் வாக்கியங்கள். (சூரு வென்பது ஒரு 'பாட'மாகும். ஆங்கில மொழிபெயர்ப்பில் 'சூரு' வென்பது 'chapter' 'அத்தியாய'மெனக் குறிக்கப்பட்டிருக்கும்.)

92. (இவ்வளவு தீர்க்கதரிசிகளின் மூலமாகவும் நாம் அளித்த போதனை இதுவே) "நீங்கள் நிச்சயமாக மக்களின் ஒரே சகோதரத்துவத்தைச் சேர்ந்தவர்கள் (தனித்தனியான மதமோ, கோஷ்டியோ இல்லை); நானே உங்களின் ஏக இறைவனாகவும் போஷகனாகவுமிருக்கிறேன்: ஆகையால் என்னை மாத்திரமே வணங்குங்கள்" (இதில் பிரிந்து நிற்காதீர்கள்.)

93. "ஆனால் ஜனங்கள் தங்களுக்குள் வேற்றுமையை யுண்டுபண்ணிக் கொண்டார்கள்; அவர்களுடைய ஒரு மதத்தைப் பல துண்டங்களாகச் சிதைத்துவிட்டார்கள். முடிவில் எல்லாரும் என்னிடமே வந்தாக வேண்டும்."

94. "ஆகையால், (இதுதான் உண்மையென்பதை ஞாபகத்தில் வைத்துக்கொள்ளுங்கள்) சன்மார்க்கச் செயல்களைச் செய்பவனும், ஆண்டவன்மீது நம்பிக்கை வைப்பவனும், எவனு

யிருந்தாலும் சரி, அவன் உழைப்பு வீண் போகாது. அவனுடைய தர்ம காரியங்களைப் பதிவு செய்துகொள்ள நாம் (இருக்கிறோம்)"

இவ்வாக்கியங்களைப் பற்றி மௌலானா கூறுவதாவது :—"வேறுபட்ட மக்களுக்கிடையே, வேறான காலங்களில் தோன்றிய எல்லாத் தீர்க்க தரிசிகளின் உபதேசங்களினுடைய சாரந்தான் என்ன? வேறான காலங்களில் ஜீவித்திருந்த, மனித வர்க்கத்தின் பல்வேறு கோஷ்டிகளுக்கும் அவர்கள் கூறிய செய்திதான் என்ன? 92-வது வாக்கியம், அளக்கப்பட்ட வார்த்தைகளில், அவர்கள் கூறிய செய்தி ஒன்றே ஒன்றுதான் என்று சொல்கிறது. அச்செய்தி இதுதான்—நீங்கள் மக்கள் கூட்டத்தில் ஒரே சகோதரத்துவத்தைச் சேர்ந்தவர்கள் ; உங்களுடைய காவலனும் போஷகனுமாயிருப்பவன் ஒருவனே. ஆகையால், உங்களை நீங்களே பிரித்துக் கொள்ளாதீர்கள் ; அவனையே வணங்குங்கள்.

"ஆனால், ஜனங்கள் இப்போதனையை மறந்தார்கள்; மதத்தை எண்ணற்ற துண்டங்களாகச் சிதைத்து, அதிலிருந்து அநேக மதங்களைச் செய்தார்கள் ; ஒவ்வொரு கோஷ்டியும் மற்றொன்றிலிருந்து வேறாகப் பிரித்துக் கொண்டது. ஒற்றுமையல்லாமல் வேற்றுமையும், ஐக்கியமல்லாமல் பிரிவினையும் அவர்களுடைய யுத்த கோஷங்களாயின. ஆனால், முடிவில் ஒவ்வொருவரும் அவனிடமே திரும்பிச் செல்ல வேண்டும். அங்கே எல்லாம் வெளிப்படும்; சரியான விஷயத்தைத் தாங்கள் மறந்தது தங்களை எங்கே யழைத்துக்கொண்டு சென்றுவிட்டதென்பதை ஒவ்வொரு கோஷ்டியும் அப்போது காணும்.

"புகழ் அனைத்தும் ஆண்டவனுக்கே. இவ்விஷயத்தில் வெளியாகியிருக்கிற எத்தனையோ நூல்களை ஒரே வாக்கியத்தில், தன்னுடைய மொழியமைப்பின் அற்புதமான மாயத்தால், குர்-ஆன் அடக்கியிருக்கிறது. இது ஒரு வெறும் வாக்கு மூலமல்ல ; நியாயவாதத்தின் அறுந்து போகாத ஒரு கோவையாக இது அமைக்கப்பட்டிருக்கிறது. (a) நீங்கள் எவ்வளவு பிரிவுகளை உண்டாக்கி

யிருந்தாலும் சரி, உங்கள் சகோதரத்துவம் நிச்சயமாக ஒன்றே; (b) உங்கள் யாவர்க்கும் காவலன் நானே; வேறு யாருமில்லை; (c) மனிதவர்க்கம் முழுதும் ஒரே சகோதரத்துவமாயிருக்கும்போது, அவர்களுடைய காவலன் இரண்டாமவனன்றி ஒருவனுகவே யிருக்கும்போது, வணக்க முறையும் ஏன் ஒன்ருக இருக்கக்கூடாது? ஏன் இரண்டு முறைகள் இருக்கவேண்டும்? ஆகையால், அவனையே வணங்குங்கள்; ஏனெனில் நீங்கள் ஒரே இனம்தான். முழுதும் ஒருமையைப் பற்றியே குறிக்கப்படுகிறது; ஒன்றுக்கு மேலில்லை. 'ஆகையால்' என்ற வார்த்தை, இம் முழு வாதக்கோவையையும் இறுக்கிப் பிடித்திருக்கிறது.

"மூன்று ஏகத்வமும் இவ்வொரே வாக்கியத்தில் அமைந்திருக்கின்றன: ஏக சகோதரத்துவம், ஏக தெய்வத்துவம், ஏகமத வணக்கம். இம்மூன்று ஏகத்துவங்களும் குர்-ஆனின் செய்தியின் சத்துவமான கொள்கைகளாகும். இதே செய்தியைத்தான் குர்-ஆன் எல்லா இடங்களிலும் கூறி, இதன்மேல்தான் தன் உபதேசத்தின் அஸ்திவாரத்தையும், தன் எச்சரிக்கையின் அடிப்படையையும் நிலை நிறுத்துகிறது. ஏக சகோதரத்துவமென்ருல், மனிதவர்க்கத்தின் எண்ணற்ற வேற்றுமைகளுக்கிடையே, அதனுடைய ஒருமை மறைந்திருக்கிறது என்பது பொருள். இதை மறக்காதிர்கள். உங்களுடைய இனங்களும் தேசங்களும் பாஷைகளும் எவ்வளவுதான் வேறுபட்டிருந்தாலும், நீங்கள் ஒரே மனிதவர்க்கத்தின் குடும்பத்தைச் சேர்ந்தவர்கள்; நீங்கள் உண்மையில் ஒரே சகோதரத்துவமேயாவீர்கள். ஏக தெய்வத்துவம் என்பதற்கு, கடவுளுக்கு நீங்கள் வேருன எத்தனை பெயர்களைக் கற்பித்திருந்தாலும் சரி, வேருன எத்தனை வணக்க ஸ்தலங்களையேற்படுத்தியிருந்தாலும் சரி, அவனைப்பற்றி நீங்கள் வேருன எத்தனை எண்ணங்களைக் கொண்டிருந்தாலும் சரி, நீங்கள் உண்டுபண்ணியிருக்கும் வேற்றுமைகள் சத்தியத்தை வேறுபடுத்திவிடாது என்பதே பொருள். நீங்கள் ஒரே சகோதரத்துவத்தைச் சேர்ந்தவர்களாயிருப்பதைப்போல, உங்கள் காவலனும் ஒருவனுகவே

யிருக்கிறான்; அவனைத் தவிர வேறு யாருமில்லை. ஏக வணக்கமென்றால், ஒரே சகோதரத்துவமிருந்தால், ஒரே மதந்தானிருக்க வேண்டும்; அதற்கு மேலில்லை யென்றே அர்த்தம். ஆகையால், ஒரே ஆண்டவனை வணங்குவதிலும், இவ்விஷயத்தில் பிளவுண்டு வேறுபடாமலிருப்பதிலுமே சன்மார்க்க வொழுக்கம் அமைந்திருக்கிறது.

"மறுபடியும், ஒரே வாக்கியத்தில் தான் (94) சன்மார்க்கத்தினுடையவும் மோக்ஷத்தினுடையவுமான தத்துவங்கள் தெளிவாக விளக்கப்பட்டிருக்கின்றன. அதாவது, மனிதவர்க்கம் இத்தனை விதமான கோஷ்டிகளாகச் சிதைந்து கிடைப்பதற்கிடையேயும், சன்மார்க்கத்தினுடையவும், மோக்ஷத்தினுடையவுமான தத்துவங்கள் ஒரேமாதிரியாகவே யிருக்கின்றன. ஆகையால் எல்லாக் காலங்களிலும், கடவுளின்மீது நம்பிக்கை, நல்லொழுக்கம் என்ற இரண்டாகவுமே அவையிருந்து வந்திருக்கின்றன என்று குர்-ஆன் சொல்லுகிறது. சன்மார்க்கத்தில் உழைத்து, ஆண்டவன் மீதுள்ள நம்பிக்கையால் நிறைந்த மனிதனுடைய முயற்சி ஒருபோதும் வீண் போகாது; அது ஆண்டவனால் அங்கீகரிக்கப்படுவது நிச்சயம். 'எவனுயிருந்தாலும் சரி' என்ற வார்த்தையைக் கவனத்தில் வைத்துக் கொள்ளுங்கள். 'யூதர்களாய்விடுங்கள்' என்று யூதர்கள் சொன்னார்கள்; 'நசாராக்களாய் விடுங்கள்' என்று நசாராக்கள் சொன்னார்கள்; ஆனால் சன்மார்க்கச் செயல்களைச் செய்கிறவனும், ஆண்டவன் மீது நம்பிக்கை வைக்கிறவனும் எவனுயிருந்தாலும் சரி, என்று குர்-ஆன் கூறுகிறது. அவன் யாராயிருந்தாலும் அக்கரையில்லை; அவன் கடவுள்மீது நம்பிக்கை வைத்துச் சன்மார்க்கமாக நடந்து கொண்டானனால், அவன் நம்பிக்கையும் செயலும் ஒருகாலும் வீண் போகா. அவன் தனக்குள்ள வெகுமதியைப் பெறுவது திண்ணம். அதுவே சட்டம். 'அவனுடைய நம்பிக்கையும் செயலும் எம் பதிவில் இடம் பெறும். நம்முடைய பதிவிலிருந்து யாரால் அதை அழிக்க முடியும்? அது வீண் போயிற்று என்று

உலகிலுள்ள ஒவ்வொருவரும் எண்ணிக்கொண்டிருக் கட்டும்; நம்முடைய கணக்கில் அது அழிக்கமுடியாதபடி எழுதப்பட்டிருக்கும். எவ்வளவு முக்கியமான சித்தாந்தம் இது?..............."

மேலும், தீர்க்கதரிசிகளுக்குள் ஏற்றத் தாழ்வு கற்பிக்கக் கூடாதென குர்-ஆன் கட்டளையிட்டிருப்பதைக் குறித்து மௌலானு கூறுவதாவது :—

"கடவுளின் பாதையில் நடக்க விரும்பும் ஒவ்வொரு வர் மீதும், பல்வேறுபட்ட தீர்க்கதரிசிகளுக்கும், வேதங் களுக்குமிடையே வேறுபாடு கற்பிக்காமல், அவைகளைச் சமமாக நம்பி எதனையும் மறுக்காமலிருப்பது கடமை யாகும் என்று குர்-ஆன் விதிக்கிறது. 'சத்தியம் எங் கிருந்து உதித்தாலும் சரி, யாரால் உணர்த்தப்பட்டாலும் சரி, அது சத்தியமே; அதை நம்புகிறேன்' என்பதே அனைவருடைய போக்காகவும் இருக்க வேண்டும்."

"இஸ்லாமிய ஆதிபத்தியம்" என்ற வார்த்தைகளை மௌலானு ஆஜாத் 1922-ல் கோர்ட்டில் தாம் சமர்ப் பித்த அறிக்கையில் உபயோகித்திருக்கிருர். அப்படி யாளுல் ஒரு மதத்தைச் சேர்ந்தவர்கள், மற்ருெரு மதத்தைச் சேர்ந்தவர்களின்மேல் ஆதிக்கம் செலுத்து வதை மௌலானு ஆதரிக்கிருரா? நிச்சயமாக இல்லை. இவருடைய குர்-ஆன் வியாக்கியானம் இதனை நன்ருகத் தெளிவுபடுத்துகிறது. "இஸ்லாம் என்ற வார்த்தைக்கு, சத்தியத்தை யேற்றுக்கொண்டு அதன்படி நடத்தல் என்பதே பொருள். எல்லா மதங்களின் சாரமும் ஒன்றே என்று குர்-ஆன் சொல்லுகிறது; அதாவது, ஆண்டவளுல் வகுக்கப்பட்ட பாதையைப் பின்பற்றுவது. சத்திய மென்னும் அப்பாதை மனிதனுக்கு மாத்திரமல்லாமல் சிருஷ்டி முழுவதுக்குமே பொருந்தும்" என்று மௌலானு தெளிவாகக் கூறியிருக்கிருர். ஆகையால் 'இஸ்லாமிய ஆதிபத்தியம்' என்ருல், தங்கள் சொல், செயல், சிந்தனை யாவற்றிலும், தங்களை ஆண்டவனுக்கு அர்ப்பணம் செய்துவிட்டவர்களின் ஆதிபத்தியம் என்பதைத் தவிர வேறெப்பொருளுமில்லை. இஸ்லாம் ஒரு புதிய மதமல்ல;

'ஆண்டவனை விட்டும் சன்மார்க்கப் பாதையை விட்டும் மாறுபட்டவர்களை, மறுபடியும் ஆண்டவனிடமும் அவனுடைய சன்மார்க்கத்தினிடமும் கூப்பிடுவதே இஸ்லாம்' என்பதை இவர் திருப்பித் திருப்பித் தெளிவாகக் கூறியிருக்கிறார்.

இதற்கு முன்னும் குர்–ஆனுக்குப் பல வியாக்கியானங்கள் எழுதப்பட்டிருக்கின்றன. ஆனால், அவைகளில் எதுவும் புதிய விஞ்ஞான ஆராய்ச்சி முறையையோ, சாஸ்திரிய விசார முறையையோ பின்பற்றியதில்லை. வைதிகமுறைப்படி, இத்தனை காலமாகப் பிறர் கூறிவந்த வழக்கத்தையும், எழுதி வந்த நடையையும் அவை அப்படியே பின்பற்றின. ஆனால், மௌலானா ஆஜாதோ குர்–ஆன் வியாக்கியானத்துக்கு ஒரு புத்துயிரளித்தார். ஆண்டவனால் அருளப்பட்ட அடிப்படைகளிலிருந்து இவர் சற்றும் பிறழவில்லை; ஆனால் அதே சமயத்தில் உலகத்தில் இடைக் காலத்தில் ஏற்பட்டுள்ள மாறுதல்களையும், நாகரிகத்தின் வளர்ச்சியையும், விஞ்ஞான அறிவின் அபிவிருத்தியையும் இவர் மறந்துவிடவில்லை. எனவே, பகுத்தறிவையும், தன்னுடைய ஒப்பற்ற கல்வி ஞானத்தையும் அடிப்படையாகக் கொண்டு இன்றைய உலகின் தேவையைப் பூர்த்தி செய்வதற்கு உகந்த வழியில் இவர் தம் வியாக்கியானத்தை எழுதியிருக்கிறார். இந்த விதத்தில் இவருடைய குர்–ஆன் வியாக்கியானம் இதுவரையில் தோன்றிய எல்லா வியாக்கியானங்களையும் விடச் சிறந்தது. அதில் உயிர்த் துடிப்பிருக்கிறது; ஜீவன் ததும்பிக்கொண்டிருக்கிறது.

## 12. மௌலானாவின் மாண்பு

உயர்ந்து நிமிர்ந்து நிற்கும் கம்பீரமான தோற்றம். நன்கு வளர்ந்தமைந்த கட்டுமஸ்தான தேகம். ஆழ்ந்த அறிவின் அடையாளமாகச் சுருக்கம் நிறைந்த பரந்த நெற்றி. விவேகத்தின் சின்னமாக ஒளி வீசுங் கண்கள். குளிர்ந்த, ஆனால் ஆழமான, அக் கண்களின் பார்வை

கண்டோர் உள்ளத்தில் ஒரு பக்தியையும் மரியாதையையும் உண்டுபண்ணும். கூர்மையின் குறியாகச் செவிகள் பரந்து, தீட்டி வைக்கப்பட்டவைபோலிருக்கும். புன்னகை தவழும் பால் வதனம். அறிவு-முதிர்வின் அடையாளமாகச் சாந்தமும், அமைதியும் முகத்தில் தவழ்ந்து விளையாடுகின்றன. களங்கமில்லாத முகத்தில் களை சொட்டுகிறது. முழங்கால்வரையில் நீண்டு தொங்கும் கோட்டு; அதன் கீழ் ஒரு நிஜார்; பாதங்களில் பூட்ஸ்; தலையில் தொப்பி; கழுத்தில் ஒரு அங்க்வஸ்திரத்தைப் போட்டு, அதன் தலைப்பு இரண்டையும் முன் பக்கமாகக் கொண்டுவந்து இரு கைகளாலும் பிடித்துக்கொண்டிருப்பதைக் காணலாம். இவ்வுருவம்தான் மௌலானா ஆஜாத். படத்தில் பார்த்தாலே ஒரு கம்பீரம் மனத்தைத் தாக்கும்; நேரிற் கண்டால் ஒரு வசீகரம் கண்டோர் உள்ளத்தில் வினயத்தைக் கற்பிக்கும். அவருடைய தோற்றமே அவர் குணாதிசயங்களைத் தெற்றெனவெளிக்காட்டும்.

அவருடைய நடையுடை பாவனைகளில் ஒருவிதமான மெருகும் சீர்மையும் காணப்படும். இவை கண்டோர் அனைவரையும் மௌலானாவிடம் மரியாதை கொள்ளும்படி செய்யும். ஆனால் அவருடைய ஒதுங்கிய சுபாவம் கண்டோரிடம் சென்று உரையாட அவரை அனுமதிப்பதில்லை. எனவே தான், அவரைப் பெரும்பான்மையோர் சரியாகத் தெரிந்து கொள்ளவில்லை. பரம்பரையாக உயர்ந்த குடும்பத்தில் வந்தவராகையால், அவருக்கு ஓரளவு பெருமையிருக்கிறது. அப்பெருமையும், கௌரவமும் அவருடைய இரத்தத்திலேயே கலந்திருக்கின்றன. தம்முடைய முன்னோர்களைவிட அவர் ஒரு படி மேலே போய்விட்டார். இயற்கையிலேயே, அவருக்கு ஒப்பற்ற விவேகமுண்டு. இன்று அவருக்குச் சமமான விவேகிகள் இருக்கக்கூடுமாயினும், அவரைவிடச் சிறந்த விவேகி உலகிலேயே இல்லையென்பது திண்ணம். அவருடன் நெருங்கிப் பழகிய ஒவ்வொருவரும் இதனை யேற்றுக்கொள்வது நிச்சயம். அவருடைய சங்கோஜமும், ஒதுங்கிய சுபாவமும் அவரைப் புத்தகங்களுக்கிடையே புதைந்துக்கொள்ளும்படிச் செய்

கின்றன. சிலர் இதனை அகம்பாவமெனக் கருதுகிறார்கள். ஆனால் அது தவறு; அவருடைய இயற்கையான சுபாவம் இது.

அவர் ஆங்கிலம் கற்ற முறையை முன்னரே கண்டோம். அவருடைய புத்தகசாலையில் எல்லாவிதமான புத்தகங்களையும் காணலாம். உலகின் மிகப் பெரிய சிந்தனையாளர்களின் நூல்களை யெல்லாம் அவர் படித்திருக்கிறார். கதே, ஸ்பினோஜா, ரூஸோ, மார்க்ஸ், ஹேவ்லக் எல்லிஸ் ஆகியவர்களின் புத்தகங்களை யெல்லாம் அவருடைய அலமாரியில் காணலாம். உபநிஷத்துகளும் வேதங்களும், எல்லா நாட்டுமக்களின் சரித்திரங்களும், சர்வதேச புத்தகசாலையின் பிரசித்திபெற்ற இலக்கியங்களும், அங்கே காணப்படுகின்றன. மௌலானா படிக்கும் புத்தகங்கள் ஒரு ரகத்தைச் சேர்ந்தவை யென்பதில்லை. டூமாஸ், ஹ்யூகோ ஆகியவர்களுடைய நாவல்களை—குறிப்பாக பிரெஞ்சுப் புரட்சியைப்பற்றியவற்றை—அவர் படித்திருக்கிறார். டால்ஸ்டாய், ரஸ்கின் ஆகிய தத்துவ சாஸ்திரிகளின் நூல்களை அவர் பன்முறையும் படித்திருக்கிறார். இன்று வெளியாகும் நவீன ஆசிரியர்களின் நாவல்களில் எதையும் மௌலானா விடுவதில்லை. இவற்றை யெல்லாம்விட, அரபி, பாரசீக, உர்து பாஷைகளிலுள்ள புத்தகங்கள் அவருடைய புத்தகாலயத்தில் குவிந்து கிடக்கின்றன. அவர் சதா படித்துக்கொண்டே யிருப்பார். அவருடைய வாழ்க்கையில் ஆனந்தமான காலம், தம் புத்தகாலயத்தில் செலவழிக்கும் காலமும், படித்ததைப் பற்றிய சிந்தனையில் ஆழ்ந்திருக்கும் வேளையுமே. அவர் அறிவுத் தெய்வத்துக்கு அளித்திருக்கக்கூடிய பரிசுகளையும் காணிக்கைகளையும் தம் தேசத்தின் சேவையில் செலவழித்துவிட்டார். அவர் சிறைக்கு வெளியிலே யிருந்த காலத்தை யெல்லாம் தேச சேவையில் செலுத்தாவிட்டால், அவருடைய பழுத்த அறிவின் பலனாக அநேக ஒப்பற்ற நூல்களை உலகம் பெற்றிருக்கும். அவருடைய மனப்போக்கு இலக்கியத்தின் பக்கலிலேயே சார்ந்திருக்கும்.

அவருடைய வாழ்க்கை மிக்க எளிய வாழ்க்கை. அவருடைய ஆபீஸ் அறையில் புத்தகங்களைத் தவிர வேறு எதையும் காணமுடியாது. போட்டோக்கள்கூட அவர் அறையிலில்லை. சிகரெட் பிடிப்பதைத் தவிர அவரிடம் வேறெந்தக் 'கெட்ட' பழக்கமும் இல்லை. விடாமல், தொடர்ந்தாற்போல் சிகரெட் பிடித்துக் கொண்டேயிருப்பார். அவர் 1921-ல் 15 மாதங்கள் சிறையிலிருந்த காலத்தில் மாத்திரமே சிகரெட் இல்லாமலிருந்தார். எத்தகைய ஆடம்பரமும் அவருக்கு வெறுப்பையே உண்டு பண்ணும். அவருடைய பழக்கங்களெல்லாம் ஒழுங்கு பட்டவை. அதிகாலையிலேயே அவர் எழுந்துவிடுவார்; நாள் முழுதும் ஏதாவது வேலை செய்துகொண்டே இருப்பார்: சுறுசுறுப்பே அவர் சுபாவம்.

மௌலானாவின் எழுத்து - வன்மையை முன்னமேயே பார்த்தோம். அவருடைய "அல்ஹிலால்" பத்திரிகை, பத்திரிகை யுலகத்தில் ஒரு புரட்சியை உண்டுபண்ணிய தென்றால், அவருடைய உர்து நடை இலக்கிய உலகில் ஒரு மறுமலர்ச்சியை உண்டுபண்ணிற்று. அவருக்கு அரபி பாரசிகமாகிய பாஷைகளும் நன்றாகத் தெரியுமானாலும், உர்துவே அவருக்கு மிகப் பிரியமான பாஷை. அவருடைய உர்து மிக எளிய உர்து; ஆயினும், கவர்ச்சி மிக்கது. அவருடைய நடையில் ஒரு தனி இனிமை மிளிரும். அவருடைய அருமையான உர்துவைத் தான், இந்தியாவின் பொது பாஷையாக இருக்கவேண்டுமென்று காந்திஜி கூறுகிறார். அவருடைய தைரியமும், அஞ்சா நெஞ்சமும் அல்-ஹிலாலை அவர் நடத்திக் கொண்டிருந்த அக்காலத்திலேயே நன்கு விளங்கின. அவருடைய பத்திரிகையின் தீவிரப் போக்கைக் கண்டு பயந்த ஒரு சிலர் அவரைப் பயமுறுத்தினார்கள்; பத்திரிகையை நிறுத்தாவிட்டாலோ, அல்லது பத்திரிகையின் போக்கை மாற்றாவிட்டாலோ அவருடைய உயிருக்கு ஆபத்து உண்டாகுமென்று எச்சரித்துப் பயமுறுத்தல் - கடிதங்கள் எழுதப்பட்டன. ஆனால், இவற்றுக்கெல்லாம் பயந்து விடுபவர் ஆஜாதல்ல. இத்தகைய பயமுறுத்தல்களைச் செய்கிறவர்களைத் திருத்துவதற்காக

வாயினும் தாம் தம் பத்திரிகையைத் தொடர்ந்து நடத்த வேண்டியது தம் கடமையென ஆஜாத் கூறிவிட்டார். வீரப் பட்டாணியர்களின் ஒப்பற்ற தலைவரான கான் அப்துல் கபார்கானின் தீவிர தேசிய உணர்ச்சிக்கு மௌலானாவின் அல்-ஹிலாலே காரணம்; அச்சமயத்தில் கபார்கான், அலிகார் சர்வகலாசாலையில் கல்வி கற்றுக் கொண்டிருந்தார். அவர் அல்-ஹிலாலைத் தவருது வாங்கிப் படித்து வந்தார். நாளாக நாளாக ஆஜாதின் பேனாவின் சக்திக்கு அவர் ஆளானார். எந்த அலிகார் இயக்கத்தினால் நேர்ந்த தீங்கை அகற்றுவதற்காக மௌலானா தம் பேனாவைக் கையில் தூக்கினாரோ, அதே அலிகார் சர்வகலாசாலையிலேயே மௌலானாவின் பேனாவுக்கு இவ்வளவு சக்தியிருக்குமானால், தேசத்தில் அதற்கு எவ்வளவு செல்வாக்கும் சக்தியும் இருந்திருக்குமென்பதை ஊகித்துக்கொள்ளலாம். சுமார் இரண்டு அல்லது மூன்று ரூபாய் பெறுமானமுள்ள பன்னிரண்டு 'அல்-ஹிலால்' பிரதிகளைக் கொண்ட ஃபைல் (file) ஒன்று ஒரு சமயம் ஆயிர ரூபாய்க்கு விற்கப்பட்டதென்றால், அதற்கு மக்களிடமிருந்த செல்வாக்கைப் பற்றிக் கூறவும் வேண்டுமோ? அவருடைய 'அல்-ஹிலாலை'ப் படித்தவர்கள் முஸ்லிம்கள் மாத்திரமல்ல; ஹிந்துக்களும் ஏராளமாகப் படித்தார்கள். 'அல்-ஹிலால்', 'அல்-பலாக்' ஆகிய பத்திரிகைகளின் பழைய பிரதிகளைத் தங்கள் பிதிரார்ஜித சொத்தைப் போல் வைத்துப் பாதுகாக்கிற ஹிந்துக்கள் இன்றும் அநேகம் பேர் வட இந்தியாவில் இருக்கிறார்கள்; எங்காயினும் தொலைந்து போய்விடுமோ என்ற பயத்தால் அவற்றை இரவல் கொடுக்கக்கூடத் தயங்குகிறார்கள்.

இன்று இந்தியாவிலேயே உள்ள மிகச் சிறந்த பேச்சாளர்களில் ஆஜாதும் ஒருவர். மணிக்கணக்காகத் தங்கு தடையில்லாமல் அவர் பேசுவார். வார்த்தைக்குத் தடுமாறுவதென்பதே அவரிடம் கிடையாது. மிகச் சிக்கலான பிரச்னைகளையும், அவற்றைப்பற்றிக் கொஞ்சங் கூடத் தெரியாத கிராமவாசிகளும், பாமர மக்களும் புரிந்து கொள்ளும்படி அவ்வளவு தெளிவாக விளக்கிக்

கூறுவார். எவ்வளவு நேரம் பேசினாலும் அவருடைய பேச்சால் சலிப்போ, தெவிட்டுதலோ உண்டாகாது. ஒரு புதிய பிரச்னையை அவர் சாங்கோபாங்கமாக விளக்கிப் பிரித்துத் தெளிவுபடுத்துவது கேட்போரின் காதுகளுக்கும், அறிவுக்கும் ஒரு விருந்தாக இருக்கும். இடையிடையே உதாரணங்களையும், உபமானங்களையும் அவர் தாராள மாக உபயோகிப்பார். மறைமுகமாகத் தாக்கிப் பேசு வதில் அவர் வெகு சமர்த்தர். நுணுக்கமான, ஆனால் சாதாரணமான, வார்த்தைகளால் எதிரிகளின் மனத்திலே தைக்குமாறு பேசுவதில் அவர் வெகு சாமர்த்தியசாலி. 1923-ல் டில்லி விசேஷ காங்கிரஸுக்குத் தலைமை வகித்த ஆஜாதுக்கு, காங்கிரஸிலிருந்த பிளவைப் போக்கும் பொறுப்பு இருந்தது. அப்போது மாறுதல் வேண்டும்; வேண்டாமென்ற இரு கோஷ்டியாருக்கும் விடுத்த சொல் லம்புகளைப் பாருங்கள். "புஷ்பிக்கும் மலர் கனி தராது என்பது என்ன நிச்சயம்? காய்க்காது என்ற சந்தேகத் தால் மலர்ந்தவுடனே புஷ்பத்தைக் கிள்ளி எறிந்துவிட லாமா? அப்படிச் செய்வது அறிவுடைமையாகாது. கொஞ்சகாலம் அவர்கள் வழியும் விட்டுத்தான் பார்ப் போமே" என்று மாறுதல் வேண்டாக் கோஷ்டியாரை நாஜூக்காக அழைத்தார். "புறமுதுகு காட்டாத பாரத வீரர்களாகிய நீங்கள் போரின் முழு தூரமும் போய்ப் பார்க்க வேண்டும். வகுத்த திட்டம் ஒழுங்கா யிருக்கும் வரையில் வெற்றியைப்பற்றிக் கவலையில்லை" என்று சட்ட சபைப் பிரவேசம் வேண்டுமென்ற கோஷ்டிக்கு அறிவுறுத்தினர். ஒரு முறை பாமர மக்களின் சக்தியைப் பற்றிக் கூறும்போது, மௌலானா ஆஜாத் பின்வருமாறு சொன்னார்: "ஆம், பாமர மக்களின் நம்பிக்கையும், லட்சி யத்தில் அவர்கள் காட்டும் பக்தியும் எவ்வளவோ காரி யங்களைச் சாதித்தன; இன்னும் எவ்வளவோ காரியங்களை யும் சாதிக்கும். ஆனால் இங்கேயிருக்கும் சிரமம் இதுதான். மதம் என்பது அதன் வேகம் இவ்வளவுதான் என்று சரி யாக அளக்கமுடியாத சக்தி. ஒரு மாட்டுவண்டி ஓட்டு வோன் முட்டாளாக இருப்பானானால், அதனால் ஏற்படும் நஷ்டம் எவ்வளவு கடுமையானதாக இருப்பினும், வண்டிக்

காரனுக்கு அடிபடும்; மேலும், ஓரிருவருக்கும் அடிபடும்; இதைவிட அதிகமாக நஷ்டமொன்றும் ஏற்பட்டுவிடாது. ஆனால், ஒரு ரயிலில் அபாயம் ஏற்படுமானால், என்ன நிகழ்கிறதென்பதை நாமறிவோம். நூற்றுக்கணக்கிலே உயிர்ச்சேதம்; கணக்கற்ற பொருட் சேதம். மிகவும் சாமர்த்தியமும் விழிப்பும் உள்ள டிரைவரின் கையிலிருக்க வேண்டிய பலம் பொருந்திய நீராவி இயந்திரத்தை (Steam Engine)ப் போன்றது மதம். தவறான டிரைவரின் கைகளிலிருப்பதால், அது சொல்லொணாத் துன்பத்தை யுண்டு பண்ணும். நம்முடைய துரதிர்ஷ்டவசமாக இன்று மதம் தவறான கைகளில் சிக்கிக்கொண்டிருக்கிறது. மதத்தை அவர்கள் மதமற்றதாக்கி விட்டார்கள். நாம் எங்கு செல்கிறோமென்பதே எனக்குத் தெரியவில்லை."

ராம்கட் காங்கிரஸ், மழைக்கும் காற்றுக்குமிடையே கூடிற்றல்லவா? அப்போது ஆஜாதின் வீரச் சொற்கள் சோர்ந்திருந்த உள்ளங்களுக்கு உணர்ச்சியை யளித்து காங்கிரஸை நடத்தி முடிக்க உதவி செய்தன. "நெருப்பு-மழை பொழியினும் சரி; அணைகடந்த வெள்ளம் பெருக்கெடுத்து ஓடினும் சரி; மலையைப் பெயர்த்து எறியும் சூறாவளி தோன்றினும் சரி; நாம் நமது லக்ஷிய வழியை விட்டு ஒதுங்கமாட்டோம்; இன்று கொட்டு கொட்டென்று கொட்டும் மழையில் நாம் நிற்க முடியாவிடில், நாளை பிரிட்டிஷாரின் விமானக் குண்டு வீச்சுக்களுக்கு எங்கே நாம் நிற்கப்போகிறோம்?" என்றார். மௌலானாவின் இக் கேள்விக்கு, இந்நாட்டின் வீரப்புதல்வர்கள் எப்படிப் பதிலளித்தார்களென்பதை இரண்டு ஆண்டுகளுக்குமுன் உலகம் கண்டது. 1942-ம் வருஷம் மார்ச்சு மாதத்தில் ஸர் ஸ்டாபோர்ட் கிரிப்ஸ் இந்தியா வந்திருந்தபோது, காங்கிரஸ் காந்திஜியின் அஹிம்ஸா கொள்கைக்குக் கட்டுப்பட்டு எல்லா யுத்தங்களையும் எதிர்ப்பதால் இந்தியாவின் ஆட்சிப்பொறுப்பை அது ஏற்றுக்கொள்ளத் தயங்கும் என்று சிலர் சரடு கட்டிவிட்டார்கள். ஆனால் "என் நாட்டின் தற்காப்புக்காக நான் வாளேந்திப் போரிடவும் தயார்" என்று மௌலானா கன்னத்தில் அறைந்

தாற் போல் பதில் சொன்னார். அவர் கைதியானபோது தேசமக்களுக்கு விடுத்த செய்தி இதுதான்: "இனி ஒவ்வொரு இந்தியனும் ஒரு ராஷ்ட்ரபதி." மௌலானாவின் வார்த்தைகள் வீராவேசம் பொருந்தியவை. சமயத்தில் அவை நெருப்பைக் கக்கக்கூடியவை. ஆனால் எப்பொழுதுமே சாதுர்ய மிக்கவை.

இன்று காங்கிரஸ் தலைவர்களிலேயே அரசியல்வாதி என்ற முறையில், தலைசிறந்த ராஜ தந்திர நிபுணர் மௌலானா ஆஜாத் தான். எவ்வளவு நுணுக்கமான விஷயங்களையும் வெகு சீக்கிரத்தில் கிரகித்துக்கொள்ளும் சக்தி அவரிடம் அபரிமிதமாக இருக்கிறது. பிரச்னையை ஒருமுறை புரிந்துகொண்ட பிறகு, எல்லாத் துறைகளிலிருந்தும், எல்லாப் போக்குகளிலிருந்தும் நோக்கி, தம் அனுபவத்தைக்கொண்டு, அலசி, ஆராய்ந்து, ஆதாரங்களுடனும், மேற்கோள்களுடனும், உதாரணங்களுடனும் அதனைப் பிறருக்கு விளக்கிக் கூறுவதில் ஆஜாதுக்கு நிகராக யாருமில்லையென்பது நிச்சயம். எனவேதான் காங்கிரஸிலுள்ள எல்லாத் தலைவர்களும் கோஷ்டிகளும் நெருக்கடியான சமயங்களில் யோசனைக்காக அவரை எதிர்நோக்கி நிற்கிறார்கள். சுயராஜ்யக் கட்சி உன்னதமாக இருந்த காலங்களில் பண்டித மோதிலால் நேரு பெரும்பாலும் ஆஜாதின் அறிவு நுணுக்கத்திலேதான் ஆதரவு வைத்திருந்தார். எப்போதும் காந்திஜியின் கருத்தை மௌலானா ஒரு விநாடிக்குள் விளங்கிக் கொண்டு விடுவார். "மகாத்மஜி, நான் உடனேயே உங்கள் கருத்தை விளங்கிக்கொண்டு விட்டேன்" என்று சொல்லுவார். ஆனால் பண்டித மோதிலால் நேருவோ, "இதிலிருக்கிற கஷ்டமென்னவென்றால், மௌலானா! நீங்கள் அதிசீக்கிரத்தில் விளங்கிக்கொண்டு விடுகிறீர்கள்" என்று சிரித்துக்கொண்டே சொல்வார். அவருடைய சங்கோஜ சுபாவமும், சிந்தனையியற்கையும் அவரைப் பாமர மக்களின் தலைவராக விடவில்லை. இவ்விஷயத்தில் அவர் இயற்கை, பண்டித ஜவஹர்லால் நேருவின் சுபாவத்துக்கு நேர் மாறானது. அவருடைய முழுத்திறமையும் பூரண சக்தியும்

கமிட்டிக் கூட்டங்களில்தான் பரிபூரணமாக வெளிப்படும். அவருடைய வாதங்களை இதர அங்கத்தினர்கள் திறந்த வாய்மூடாமல் கேட்டுக் கொண்டிருப்பார்கள். அரசியலில் எவ்விதமான பதவியிலும் அவருக்கு ஆசையில்லை. விரும்பியிருந்தால் அவர் ஏதாவது ஒரு மாகாணத்தின் பிரதம மந்திரியாயிருந்திருக்கக் கூடும். ஆனால் அவருக்கு அம்மாதிரி எண்ணங்கள் எதுவுமில்லை. தேசபந்துதாஸ் காலமானவுடன், வங்கத்தின் தலைமையை யேற்றுக் கொள்ளுவதற்குத் தகுதியுடைய மனிதர் ஆஜாத் ஒருவரே. ஆனால், அவர் அதனை ஏற்றுக்கொள்ள மறுத்து விட்டார். கல்கத்தாவின் மேயராக வரவேண்டுமென்றும், வங்க மாகாணக் காங்கிரஸ் கமிட்டியின் தலைமையை யேற்றுக்கொள்ள வேண்டுமென்றும், வங்காளத்தின் சட்டசபையில் சுயராஜ்யக் கட்சியின் தலைமைப் பொறுப்பை அங்கீகரிக்க வேண்டுமென்றும் இவரை வேண்டிக் கொண்டார்கள். அவரை இணங்கச் செய்வதற்காகக் காந்திஜியே கல்கத்தா சென்றார். ஆனால் மௌலானாவோ இம் முக்கிரீடத்தை யேற்க மறுத்துவிட்டார். ஆடம்பர வாழ்வையே வெறுக்கும் அவருக்குப் படாடோப வாழ்க்கை எதற்கு? புத்தகங்களில் தம் புத்தியைச் செலுத்திய மௌலானாவை இப்பதவிகளா வசீகரிக்கப் போகின்றன? இவற்றையெல்லாம் உதறித் தள்ளிய ஆஜாத் நிம்மதியாக மனச்சந்துஷ்டியுடனும் உற்சாகத்துடனும் தம்முடைய குர்-ஆன் பாஷ்யத்திலிறங்கிவிட்டார்.

காந்திஜிக்கும் ஆஜாத்துக்கும் இடையேயுள்ள உறவு இத்தகையதென்று சொல்ல முடியாதது. உலகில் காணப்படும் எந்த உறவு வகையிலும் அதனை அடக்க முடியாது. அது ஒரு விநோதமான உறவு. இருவரும் ஒருவரையொருவர் அளவு கடந்து நேசிக்கிறார்கள்; பரிபூரணமாக நம்புகிறார்கள். சில சமயங்களில், முக்கியமான விஷயங்களின் முடிவை ஒருவர் மற்றொருவர் கைக்குக் கொஞ்சங் கூடத் தயக்கமின்றி விட்டுவிடத் தயாராயிருக்கிறார். காந்திஜியின் உயிர் நாடி அஹிம்ஸை; ஆனால் ஆஜாதோ, இஸ்லாம் அனுமதித்திருக்கிற அளவுக்கு, அவசியமேற்

படும்போது, பலாத்காரத்தைப் பிரயோகிக்கத் தயங்க மாட்டேனென்று கூறுகிறார். இவ்வளவு தூரம் காந்திஜியுடன் தாம் நேசமாயிருப்பதற்குரிய காரணத்தை மௌலானாவே கூறியிருக்கிறார்: "அவருடைய அபாரமான அறிவு ஒருபுறமிருக்க, அவருடைய களங்கமற்ற சத்தியம்தான் என்னை அவர் பக்கம் ஈர்த்தது. ஆனால், 1926 வரையில் அவரைப்பற்றி நான் கிட்டத்தட்டக் கண்டிப்புச் சுபாவத்துடனேயே இருந்தேன். அப்பொழுது ஸ்ரீமதி காந்தி செய்த ஒரு அற்பத் தவறுக்காக அவர் அவ்வம்மையாரைக் கண்டித்துத் தம் உள்ளத்தை அப்படியே வெளியிலே கொட்டி, 'யுவ இந்தியா'வில் எழுதியிருந்த கட்டுரையொன்றை நான் பார்த்தேன். யாரோ தமக்குக் கொடையாகக் கொடுத்திருந்ததை அவ்வம்மையார் ஆசிரம மானேஜரிடம் கொடுக்க மறந்து போய்விட்டாராம். 'தம்முடைய பகைவர்கள்கூடச் சந்தேகிக்க முடியாத சத்தியத்தோடு கூடிய மனிதர் இதோ இருக்கிறார்' என்று நான் எனக்குள்ளே சொல்லிக்கொண்டேன். அவருடைய சத்தியம் செல்லுகின்ற அளவைக் கண்டு நான் திகைப்படைந்தேன்."* சிந்து மந்திரி சபை விஷயமாக ஒரு சமயம், ஒரு முக்கியமான பிரச்னை காந்திஜியின் கவனத்துக்குக் கொண்டுவரப்பட்டது. அப்போது மௌலானா சொன்னார்:—"என் மனம் குறிப்பிட்ட ஒரு வழியைக் காட்டுகிறது. ஆனால் இம்மாதிரி விஷயங்களிலெல்லாம், எப்போதும் உங்கள் தார்மிக மோப்பத்தை நான் ஏற்றுக்கொள்வதுபோல், இவ்விஷயத்திலும் உங்களுடன் வாதிக்காமல் நான் உங்கள் தீர்ப்பை ஏற்றுக்கொள்கிறேன்." ஆனால் காந்திஜியோ, "இம்மாதிரி விஷயங்களில் உங்கள் தீர்ப்பே முடிவானதாக இருக்கவேண்டுமென்று நாங்கள் தீர்மானித்துவிட்டோம். உங்கள் முடிவை ஒப்புக்கொள்ளுமாறு சர்தார் படேலையும், ராஜேந்திரரையும் (பார்லிமெண்டரி உபகமிட்டி அங்கத்தினர்கள்) நான் கேட்டுக் கொள்வேன்" என்று சொல்லிவிட்டார். மௌலானா மறுபடியும், "நான் சம்பந்தப்பட்டமட்டில், உங்கள் வார்த்தையே முடிவான வார்த்தை" என்று சொல்லிவிட்டார். இருவருக்குமிடையே ஒரு நீண்ட பாசப்

பூசல் நடைபெற்றது. இறுதியில் காந்திஜியே வெற்றி பெற்ருர்; பிரச்னை முழுதும் மௌலானாவின் முடிவுக்கே விடப்பட்டது. கள்ளமற்ற பளிங்குள்ளம் படைத்த காந்திஜிக்கு, சத்திய வீரராகவே அவதரித்த ஆஜாத் நண்பராகவும், உறவினராகவும், ஆலோசனையாளராகவும், சிஷ்யராகவும், ஆத்மார்த்திக ஆசிரியராகவும் இருப்பதில் எள்ளளவும் ஆச்சரியத்துக்கு இடமில்லை.

பாமர மக்களின் தலைவராக ஆஜாத் இல்லா விட்டாலும், ஒடுக்கப்பட்டோரிடமும் ஏழைகளிடமும் காந்திஜிக்கு எவ்வளவு சிரத்தையும் அனுதாபமும் உண்டோ, அந்த அளவு மௌலானாவுக்கும் உண்டு. அவர் பீஹார் மாகாணக் குடியானவர்களுக்குச் செய்த நன்மையைக் கண்டோம். கதரைப்பற்றி ஒரு சமயம் அவர் கூறியிருப்பதைப் பார்த்தால், அவருடைய உணர்ச்சிகள் நன்ருக வெளிப்படும்: "'உள்ளவர்'க்கும் 'இல்லாதவர்'க்குமிடையே யிருக்கும் - அகன்று கொண்டேபோகும்- தாரதம்மியத்தை ஒழிக்காவிட்டால், சுயராஜ்யம் என்பதற்கு அர்த்தமே யில்லை. ஒடுக்கப்பட்ட கோடிக்கணக்கான நம் சகோதரர்களோடு, ஒருவராக, நம்மை ஒன்றுபடுத்திக் கொள்வதற்குக் கதரையும், அதனுடைய பரந்த உபயோகத்தையும் தவிர வேறு வழி எனக்குத் தோன்றவில்லை. இவ்வளவு காலமாக நாம் அமர்ந்திருந்த உயர்ந்த பீடத்திலிருந்து இறங்கிவர விரும்புகிருேமா? நம்மைவிடக் குறைவான அதிர்ஷ்டம் படைத்த நம் சகோதரர்கள் நம்முடன் தோளோடு தோள் சேர்ந்துச் சுதந்திரத்துக்காகப் பாடுபடுவதின் பெருமையையும், ஆனந்தத்தையும் அவர்கள் அடைய வேண்டுமென்று நாம் விரும்புகிருேமா? நாம் உணர்வதைப்போல, சுதந்திரத்தின் பேரொளியை அவர்களும் உணர வேண்டுமென்று நாம் ஆசைப்படுகிருேமா? அவர்களும் விழித்து நம்மோடு வீறு கொண்டெழ வேண்டுமென்று நாம் ஆவலுறுகிருேமா? அப்படியானல், கதரை எங்கும் பரப்புவதைத் தவிர வேறு வழியே யில்லை." இவ்வளவு உணர்ச்சியோடு அவர் பேசினாலும், ஒரு இடத்திலமர்ந்து சர்க்காவை எடுத்துக்

கொண்டு நூல் நூற்பது அவர் சுபாவத்துக்கு ஒத்தது அன்று. அதை மௌலானாவே நன்கறிவார். அவரைப் போல் தங்கள் குறைகளைத் தாங்களே உணர்கின்ற தலைவர்கள் வெகு சிலரே.

மௌலானா அபுல்கலாம் ஆஜாதின் விசேஷ குணம், மதக் கல்வி யறிவோடும் கீழ் நாட்டுக் கிரந்த ஞானத்தோடும், மேல் நாட்டு நாகரிகத்தையும் கருத்து வளர்ச்சியையும் ஒன்று சேர்த்ததேயாகும். கிப்ளிங் வேண்டுமானால் 'கிழக்கும் மேற்கும் ஒன்று சேராது' என்று கூறலாம். ஆனால் கிழக்கையும் மேற்கையும் இணைக்கும் ஒரு சங்கிலித்தொடராக மௌலானா விளங்குகிறார். அவரிடம் கீழ்நாட்டு ஆழ்ந்த ஆத்மார்த்திகமும் பரந்த மனப்போக்கும், மேலைநாட்டு வேகமான உணர்ச்சியுடனும், உந்தித்தள்ளும் ஆவலுடனும் வேறுபாடின்றி இணைந்து அமைந்துள்ளன. அவர் தம் காலத்தில், உலகின் பல்வேறு பாகங்களிலும் நடக்கும் விசேஷ சம்பவங்களைக் கூர்ந்து கவனித்துக் கொண்டே வருபவர். பிற நாடுகளில் எழும் அரசியல் - புரட்சிகளாயினும் சரி, சமூகப் புரட்சிகளாயினும் சரி, அவர் அவற்றை வெகு ஜாக்கிரதையாகக் கவனித்துத் தமது தேசம் சம்பந்தப்பட்டவரையில் அவற்றால் எவ்வளவு தூரம் நன்மையடைய முடியுமென்பதை நிதானமாகப் பார்க்கும் சுபாவம் உடையவர். கடிதப் போக்குவரத்துகளின் மூலம் அவர் வெளி யுலகுடன் தொடர்பு வைத்துக் கொண்டிருக்கிறார். காலஞ்சென்ற ஜக்லூல் பாஷாவும் பத்தி பே (Fathi Bey)யும் அவருடன் தவறாமல் கடிதப் போக்குவரத்து வைத்துக்கொண்டிருந்தார்கள். மேலும், பத்திபே மௌலானாவின் நெருங்கிய நண்பர். முஸ்தபா கமால் பாஷாவுடனும், இதர துருக்கித் தலைவர்களுடனும் மௌலானா நெருங்கிய தொடர்பு வைத்துக்கொண்டிருந்தார். "துருக்கி இளைஞர்களின் கட்சி" என்ற கட்சியின் தலைவர் அனைவரும் மௌலானாவின் நேரடியான நண்பர்கள். இக்கட்சிதான் தன்னுடைய 'ஒற்றுமையும் முன்னேற்றமும்' என்ற திட்டத்தின் மூலம் 1908-ல் துருக்கி

யில் புரட்சியை ஸ்தாபித்தது. துருக்கிப் பார்லிமெண்டின் தலைவரான அஹமத் ரீதாவும், டாக்டர் ஸெலாஹுத்தீனும், அன்வர் பாஷாவும், த்ஜாவேத் பேயும் (Djaved Bey) மெளலானாவுடன் கடிதப் போக்குவரத்து வைத்துக் கொண்டிருந்தார்கள். இவர்கள் அனைவரும் மெளலானா வுடன் மத சம்பந்தமாகவும் சமூக சம்பந்தமாகவும் அரசி யல் சம்பந்தமாகவும் கடிதங்கள் மூலம் விவாதம் நடத்து வதுடன், சகல விஷயங்களிலும் அவருடைய ஆலோ சனையை நாடிவந்தார்கள். ஈரானின் பிரசித்தி பெற்ற தீவிர வாதியான தாக்ஈ ஜதேஹ் (Taqui Jadeh) மெளலானாவின் நெருங்கிய நண்பர்களில் ஒருவர்.

சாதாரண மக்களிடையே முரண்பட்டவையாகக் காணப்படுகின்ற குணங்கள் யாவும் அவரிடம் ஒருங்கே சேர்ந்திருக்கின்றன. அவர் ஒரு சிறந்த இலக்கியப் பிரியர்; ஆனால், ஒரு பெரிய அரசியல் வாதியுங்கூட. காந்திஜியின் நம்பிக்கைக்குப் பாத்திரமானவர்களில் தலை சிறந்தவர் மெளலானா; பெரிய தீவிர வாதியான பண்டித ஜவஹர்லால் நேருவும் மெளலானா ஆஜாதிடம் தான் ஆலோசனைக்குப் போகிறார். இஸ்லாமிய மத சம்பந்தமான நூல்களில் கரைகண்டவர் மெளலானா; எனினும் மேல்நாட்டு விஞ்ஞானத்தில் பூரண நம்பிக்கை கொண்டு அதன் ஆராய்ச்சி முறையையே தம் மத ஆராய்ச் சிக்குக் கைக்கொள்ளுகிறார். அவருடைய நேர்மையும், சத்திய வாழ்க்கையும் அவருடைய விரோதிகளாலும் சந்தேகிக்க முடியாதவை. தம் கடமையை நிறைவேற்றுவ தில், அஞ்சாநெஞ்சத்துடன் எதையும் எதிர்த்துச் செல்லும் உறுதி படைத்தவர். ஆண்டவனால் படைக்கப்பட்ட மக்க ளுள் ஒருவருக்கொருவர், மதம் காரணமாகவோ, பிறப்புக் காரணமாகவோ, வேற்றுமை காட்டுவது மெளலானா வால் கனவில்கூடக் கற்பனை செய்து பார்க்க முடியாத விஷயம். 'மனித வர்க்கம் முழுதும் ஒரே சமுதாயத்தைச் சேர்ந்தது' என்று உலகுக்குப் பறைசாற்றுகிற குர்– ஆனை வேதமாகக்கொண்டு பின்பற்றுகிறோ மென்று சொல்லிக் கொள்ளுகிற முஸ்லிம்கள் சிலர் 'முஸ்லிம்கள்

ஒரு தனிச் சமுதாயம்; ஹிந்துக்கள் ஒரு தனிச் சமுதாயம் :- எனவே ஹிந்து-இந்தியா, முஸ்லிம்-இந்தியா என்று பிரிக்கப்படவேண்டும்' என்று கூறுவது மௌலானுவின் மனத்தைப் பெரிதும் புண்படுத்தியிருக்கிறது: தம் சகோதர இந்திய முஸ்லிம்களுக்குச் சரியான பாதையைக் காட்டுவதற்காகப் பெரிய எதிர்ப்புகளுக்கிடையே வெளிக்கிளம்பிய மௌலானு, இன்று தம் இஸ்லாமியச் சகோதரர்களில் பலர் இஸ்லாத்துக்கே விரோதமாகப் போவதைக் கண்டு இரத்தக் கண்ணீர் வடித்தார். இப்பிரச்னையைப் பற்றி அவர் கூறுவதைப் பாருங்கள் :—'இம்மாதிரி யோசனைகளைச் சொல்லுபவர்கள், சரித்திரத்துக்கும், மனித சாஸ்திரத்துக்கும், நவீன காலப் போக்குக்கும் விரோதமாகப் பேசுகிருர்கள். நாம் இரண்டு சமுதாயங்களென்று கூறும்போது, பிரச்னைக்கு முடிவு காணுமல், அப்பிரச்னையையே கிளப்புகிருர்கள். நம்மில் பெரும்பாலோருடைய முன்னேர்கள் பொதுவானவர்கள். 'உயர்ந்த வர்க்கம்; தாழ்ந்த வர்க்கம்; வெவ்வேறுபட்ட வர்க்கங்கள்' என்பவற்றை நான் ஏற்றுக்கொள்ளவில்லை. மனித வர்க்கம் ஒரே வமிசத்தைச் சேர்ந்தது; நாம் ஒருவரோடொருவர் இணங்கி, ஒற்றுமையாக வாழவேண்டியதே. ஆயிரம் ஆண்டுகளுக்கு முன் நம்மைக் கடவுள் ஒன்ருகக் கொண்டு வந்தார். நாம் சண்டை யிட்டிருக்கிருேம்; ஆனுல் உடன் பிறந்த சகோதரர்களும் அப்படித்தான் சண்டையிட்டுக் கொள்கிருர்கள். அப்படியேதான் ஆங்கிலேயரும் ஆங்கிலேயரும் சண்டையிட்டுக் கொண்டனர்—ரோஜா 'மலர்ப் போர்'களிற்போல. ஆனுல் இரண்டு சமுதாயங்களாகத் தனித்து வாழவேண்டுமென்று அவர்கள் வற்புறுத்தவில்லை. சென்ற ஆயிரமாண்டுகளாக இருவருக்கும் பொதுவான ஆத்மீக, கலாசார, தார்மிக, லௌகிக நன்மைகளுக்கேற்ப நாம் நடந்து கொண்டிருக்கிருேம். நூற்றுக்கணக்கான ஆண்டுகளுக்கு முந்திய காலத்துக்கு அவர்கள் நம்மைத் திருப்பி கொண்டுபோக முயலுகிருர்கள். இல்லை; வித்தியாசங்களை வற்புறுத்துவதில் பிரயோஜனமேயில்லை. அப்படிப் பார்க்கப்போனுல், இரண்டு மனிதர்கள், ஒருவரைப்போல் மற்ெருருவர் இருப்பதில்லை. சமா

தானத்தை விரும்பும் ஒவ்வொருவரும் இருவகுப்பாருக்கு மிடையே உள்ள ஒற்றுமையையே வற்புறுத்தவேண்டும். எனவே, நான் வெறுப்பது, தேசியப் பிரச்னைகளை வகுப்பு வாதப் போக்கில் அணுகும் இப்பழக்கத்தைத் தான். உலகில் வேறெந்தப் பாகத்திலும் தேசியப் பிரச்னைகள் வகுப்புவாத வழிகளில் அணுகப்பட்டதேயில்லை. இந்தியாவின் பிரதிநிதிகளால் தீர்மானிக்கப்பட்ட அரசியல் திட்டத்தின் கீழ், இந்நாட்டு ஹிந்துக்களும் முஸ்லிம்களும் தங்கள் நிலைமையையும் நன்மையையும்பற்றி ஹிந்துக்கள் என்ற ஹோதாவிலோ, முஸ்லிம்கள் என்ற ஹோதாவிலோ நினைக்கமுடியாது; குடியானவன் அல்லது ஜமீன்தார், தொழிலாளி அல்லது முதலாளி என்பன போன்ற ஹோதாவிலோதான் அவற்றைப்பற்றிக் கருத முடியும். எந்தச் சுதந்திர அரசியல் திட்டத்திலும் மத சுதந்திரம் அடிப்படையான உரிமைகளில் ஒன்றாக இருக்கும்; எந்தமாதிரியான அரசியல் திட்டமாயினும் சரி, பொருளாதாரச் சுதந்திரத்துக்கு அனைவருக்கும் சமமான சந்தர்ப்பமில்லாவிடில், அத்திட்டம் ஒரு அரசியல் திட்டமாயிருப்பதற்கு லாயக்கில்லை. நான் ஏன் இம்மாதிரி வாதம் செய்து கொண்டிருக்கவேண்டும்? ஜனாப் ஜின்னா முஸ்லிம்களின் சார்பாக அரசியல் நிர்ணய சபைக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டு வந்து, முஸ்லிம் இந்தியாவின் சார்பாக அவர் தம் கோரிக்கைகளை வற்புறுத்தட்டும்."

மௌலானா அபுல்கலாம் ஆஜாத் ஒரு பெரிய கலா ரசிகர். சங்கீதத்தில் அவருக்குப் பிரியம் அதிகம். மேலும் அவர் ஒரு பாஷா விற்பன்னராகவுமிருக்கிறார். பல்வேறு பாஷைகளைப் பேசும் தம் சகாக்களை, முக்கியமான அரசியல் பிரச்னைகளைப் பற்றி விவாதியாத சாப்பாட்டு வேளை போன்ற நேரங்களில், ஆங்கிலம், அரபி, அல்லது பாரசீக வார்த்தைகளுக்கு இந்திய பாஷைகளில் அதே பொருளைக் குறிக்கும் வார்த்தைகளைக் கேட்பார். அத்தகைய வார்த்தைகளின் மூலத்தைப்பற்றி அவர் ஆராய்ச்சி செய்யத் தொடங்கிவிடுவார். இம்மாதிரிப் பல இந்திய வார்த்தைகள் அரபி, பாரசீக மூலத்திலிருந்து வந்திருக்

கின்றன வென்பதை அவர் நிரூபித்திருக்கிறார். இம்மாதிரியே ஆங்கில வார்த்தைகள் பல அரபி மூலத்திலிருந்து வந்திருக்கின்றன வென்பதையும் அவர் காட்டியிருக்கிறார். உதாரணமாகப் 'புளி' 'டாமரிண்ட்' என்று ஆங்கிலத்திலே குறிக்கப்படும். ஆனால் இந்த ஆங்கிலப் பதம் ஒரு போர்ச்சுகீஸ் வார்த்தையிலிருந்து வந்தது. இப் போர்ச்சுகீஸ் பதத்துக்கு மூலம் Tamar–e–Hind (தமரே ஹிந்த்) என்ற அரபிப் பதமாகும். அரபியில், 'தமர்' என்பதற்குப் பேரீச்சம்பழம் என்று பொருள். 'ஹிந்த்' என்றால் இந்தியா. எனவே மேற்காணும் அரபி வார்த்தைக்கு 'இந்தியாவின் பேரீச்சம்பழம்' என்று பொருள். இந்தியாவில் பேரீச்சை அக்காலத்தில் இல்லாததால், பேரீச்சம்பழம் போலிருந்த புளியை அரபியர்கள் அவ்வாறு அழைத்தார்கள். மௌலானா மிக ஹாஸ்யமாகவும் பேசுவார். ஆறு அல்லது எட்டு மணிநேரக் காரியக்கமிட்டிக் கூட்டங்களுக்குப் பிறகு மௌலானா தம் ஹாஸ்யச் சுவையாலும், மேற்கூறிய பாஷையாராய்ச்சியாலும், தம் சகாக்களின் சோர்வையும் களைப்பையும் போக்கி, அவர்களிடையே சிரிப்பையும் கலகலப்பையும் உண்டு பண்ணுவார்.

மௌலானா அபுல்கலாம் ஆஜாத் இன்று இந்திய உலகில் ஒரு அபூர்வமான ஸ்தானத்தை வகிக்கிறார். அவர் பரிசுத்த தேச பக்தர்; மாசற்ற மதாபிமானி; ஆழ்ந்த ஞானமும், பரந்த போக்குங் கொண்டவர். அவர் அபார அறிவு படைத்தவர்; அவரது மனோதிடமோ அகில உலகையும் அஞ்சாமல் எதிர்த்து நிற்கவல்லது; அவர் ஆத்ம நெறியில் தோய்ந்தவர். அவருடைய நாவன்மையோ அதிசயிக்கத்தக்கது; அவருடைய வீரவார்த்தைகள் கேட்போரின் காதுகளில் ஆயுள் முழுதும் ரீங்காரம் செய்துகொண்டிருக்கும்; 'வாளினும் வலியது பேனா' என்ற முதுமொழிக்கு ஆஜாதின் பேனாவைவிடச் சிறந்த சான்று காணமுடியாது. அவர் ஆத்ம வசீகர மிக்கவர். ஒழுக்கத்தில் சிறிதும் தவறாதவர். சில நிமிஷ சம்பாஷணையிலேயே அவர் யாரையும் தம் கருத்துக்குத் திருப்பி விடும் ஆற்றல் படைத்தவர் என்று புலப்படும்.

அவருடைய அனுபவமோ பரந்தது. தலைமைப் பதவிக்கு இருக்க வேண்டிய சகல குணங்களும் அவருக்குப் பிறவியிலேயே உண்டு. சத்தியமே அவர் உயிர் நாடி; சுதந்திரமே அவர் வாழ்க்கையின் குறிக்கோள். அவருடைய வாழ்வின் கனவு முழுதும், இந்தியா சுதந்திரம் பெற வேண்டுமென்பதே. இந்தியர்களின் மனப்புரட்சிக்குத் தம் பதினான்காம் வயதிலேயே அஸ்திவாரம் போட்ட ஆஜாதின் ஆயுளிலேயே, இந்தியா சுதந்திரம் பெற்று, இந்தியர்களும் பிற நாட்டு மக்களோடு சரிசமானமாகத் தலைநிமிர்ந்து சுதந்திர புருஷர்களாக, இந்தியாவின் பண்டைப் பெருமையும் வீரமும் முகத்திலே தவழ, வெற்றி முரசுகொட்டி உலக ஐக்கிய லட்சியத்தை நோக்கிப் பெருமிதத்தோடு செல்லும் பேற்றைக் கடவுள் அருள்வாராக!

---

## நவீனமும் சிறு கதைகளும்

### 1. தில்லைக் கோவிந்தன்

'பத்மாவதி' என்ற பிரசித்தி பெற்ற நாவலின் ஆசிரியராகிய ஸ்ரீ. அ. மாதவையா எழுதிய நாவல் 'தில்லைக் கோவிந்தன்.' ஆங்கிலத்தில் எழுதப்பட்டிருந்தபோதிலும் தமிழர் வாழ்க்கையின் ஒரு சித்திரம்தான். இதைத் தமிழில் மொழி பெயர்த்தவர் ஸ்ரீ. வே. நாராயணன், எம். ஏ. எம். எல். பொருள் வளம் குன்றுதபடி மொழி பெயர்த்திருக்கிறார்.

விலை ரூ. 1

### 2. முன்னிலா

தமிழுக்கே ஒரு புது முறை. இச் சிறு கதைத் தொகுதி. ஸ்ரீ. அ. மாதவையாவின் இரண்டு புதல்வர்களும், நான்கு புதல்வியரும் எழுதிய இக் கதைக் கூட்டம் புதுமைத் தமிழ் இலக்கியத்திலும் ஒரு புதுக் குடும்பம்தான்!— என்று சொல்லலாம். குரங்கையும் ராக்ஷஸனையும் யம-தூதர்களையும் கொண்டு மானிடர்களின் குணு குணங்களை மெல்லப் பரிகசிக்கிறுர் ஸ்ரீ. அனந்த நாராயணன், ஐ. ஸி. எஸ். சில கதைகளிலே, கதையின் நோக்கம் கதைச் சுவையின் ஆழத்திலே புதைந்து கலைச் சுவையை பெருக்கிக் காட்டுகிறது.

விலை அணு 12

### 3. சிறு கதை மஞ்சரி

'பாலையா' என்ற புனை பெயருடன் ஒரு தமிழ்ப் பேராசிரியர் எழுதிய கதைகளின் தொகுதி. தமிழ்ச் சுவைக்காகவும் ஒவ்வொரு தமிழனும் வாசிக்க வேண்டிய புஸ்தகம்.

விலை ரூ. 1

தினமணி வெளியீடு—10

# தளவாய்த் தாத்தா

அல்லது

## தளவாய் அரியநாயக முதலியார்

“மிகவும் உத்ஸாகத்துடன் வாசித்து முடித்தேன்...... வளம்பட்ட பாஷையும் நடையின் விறுவிறுப்பும் சேர்ந்து சரித்திர வரலாற்றைக் கதையை விடவும் சுவாரஸ்யம் ததும்பும் விஷயமாகச் செய்திருக்கின்றன. வீரமும் சத்தியமும், கீழ்ஜாதி மேல்ஜாதி யென்ற பிரிவுகள் தோன்றுமல் ஆட்கொண்ட தேசம் நம்முடையதே. தமிழ் நாட்டின் பெருமையை விளக்கும் வரலாறு என்பதில் ஐயமில்லை. வெகு ஜாக்கிரதையாகச் சரித்திரத்தின் அறிகுறியோடு, இவ்வரலாறு உருவாக்கப்பட்டுள்ளது. கற்பனை வகையைச் சார்ந்ததாகத் தோன்றுத வண்ணம் நிகழ்ச்சிகளும் சம்பவங்களும் தொகுக்கப்பட்டுள்ளன.”

கி. சந்திரசேகரன் எம். ஏ., பி. எல்.

ஆச்ரமம், மயிலாப்பூர்

## அலமாரிக்குள் ஒரு வெ... ...ளியீடு

### ...கைக்கும் அணி

"உங்கள் தினமணி வெளியீடுகள் ஸ்ரீ... ...ப் புஸ்,
உலகத்திலேயே மிகவும் மலிவா... ...வை ; ஆனல்
கருத்துலகிலோ மிகவும் ஆழ்ந்த பொருள் வளம்
படைத்தவை."

வி. ஆர். எம். செட்டியார், B.A.,
இலக்கிய அமைச்சர்,
ஸ்டார் பிரசுரம், திருச்சி.

"சற்றும் அச்சுப் பிழை இல்லாத பதிப்புக்கள் உங்கள் காரியாலயத்திலிருந்துதான் கிளம்புகின்றன. இது சாமான்ய வெற்றியல்ல."

கி. சந்திரசேகரன், எம். ஏ., பி. எல்.,
ஆச்ரமம், மயிலாப்பூர்.

---

ஜீவிய சரித்திரம் தேச யாத்திரை
சரித்திரம் அரசியல்
சிறுகதை நவீனம்
நாடகம் ஹாஸ்யம்
கட்டுரை விஞ்ஞானம்
கவிதை

இத்துறைகளி லெல்லாம் தமிழ் மக்களுக்கு அறிவுச் செல்வத்தையும் அழகுச் செல்வத்தையும் வாரி வாரி வழங்க வேண்டுமென்ற ஆசையுடன் இந்த நூல்கள் வெளியிடப்படுகின்றன. பொழுது போக்காகவும் வாசித்து இன்புறலாம் ; பொழுது போக்கையே அறிவுப் பயிற்சியாகவும் செய்துகொண்டு நல் வாழ்வு வாழலாம். இவற்றின் தமிழ் நடை அபூர்வ எளிமையும், இனிமையும் வாய்ந்தது.

கண்ணைக் கவரும் கட்டுக்கோப்பு

## தினமணி ஏஜெண்டுகளிடம் கிடைக்கும்